# DHARMASEELAN

OR

## THE DUTY OF AN IDEAL SON



BY
M. S. SUNDARESAN CHETTIAR,
DEVAKOTTAH



*( Third Edition )*

JEYALAKSHMI OFFICE
*MADRAS.*

 [ Price Re. 1.

K.P.A.R இப்-அஃ

உ

சிவமயம்

# தருமசீலன்

அல்லது

## சற்புத்திரர் கடமை

தேவகோட்டை
மு. சொ. சுந்தரேசன் செட்டியார்
இயற்றியது.

மூன்றாவது பதிப்பு

ஜெயலட்சுமி ஆபீஸ்
சென்னை:

 [விலை ரூபா 1.

அண்ணாமலையார் துணை

# முகவுரை

தருமசீலன் என்னும் இந்தக் கதையின் முதல் இரண்டு பதிப்புகளும் விரைவில் விற்பனையாயின. இதில் கதைக்குட் கதைகளாய் ஆங்காங்கு சிறு சிறு கதைகள் அமையப் பெற்றிருப்பதுமல்லாமல் பெரியவர்கள் இயற்றிய நீதிக்கவிகளும் பழமொழிகளும் சந்தர்ப்பத்துக்குத் தக்கபடி சேர்க்கப் பட்டுள்ளன.

இக்கதையானது, எத்தனை முறை படித்தாலும் இன்னொரு முறை படிக்கவேண்டுமென்கிற அவாவை உண்டாக்கத்தக்க கதைப்போக்கை உடையது. இதில் பெற்றோர் கடமை, மக்களின் கடமை, ஸ்திரீ புருஷர்கள் கடமை, மன்னனின் கடமை, விவேகம், பொறுமை, தைரியம் உதாரகுணம் இத்தகைய நல்ல குணங்களினால் அடையத் தக்கப்பயனும், பொருந்தாவிவாகம், கொடுங்கோன்மை, பெற்றோரின் தப்பபிப்பிராயம், துராலோசனை, பிறர்மனை நயத்தல் இத்தகைய தீயகுணங்களினால் அடையத்தக்க பயனும், எல்லோரும் எளிதிலுணரத் தக்கபடி மிக எளிய நடையில் விளக்கப்பட்டிருக்கின்றன.

இந்த நூலை நன்றாய்ப்படித்த நண்பரிற் சிலர், என்னிடத்தில் நேரிலும் கடிதமூலமாகவும், இதில் சிறுவர் சிறுமிபர் மனப்பாடம் செய்துகொள்ளவேண்டிய நீதிக்

கவிகள் பலவும் பழமொழிகளும் விரவியிருப்பதுமல்லாமல் கதைப்போக்கும் பிள்ளைகளுக்கு நல்ல அறிவைப் புகட்டக்கூடியதா யிருப்பதால் கவர்ன்மெண்டார் இதனைப் பள்ளிக்கூடத்திற் பிள்ளைகளுக்குப் பாடப்புத்தகமாக அங்கீகரிதற்குரிய வழியில் அச்சிடவேண்டியது மிகவும் அவசியமாகும்—என்று தெரிவித்தபடியால், பள்ளிக்கூடச் சிறுவர்க்குரிய புத்தகங்கள் பல எழுதி அநுபவமடைந்த வாகவி-திரு-அ. சுப்ரமண்ய பாரதியார் அவர்களைக் கொண்டு, இதில் சேர்க்கவேண்டியவைகளைச் சேர்த்தும் நீக்கவேண்டியவைகளை நீக்கியும் மற்றும் திருத்தவேண்டியவைகளைத் திருத்தியும் செவ்வையாய்ப் பரிசோதித்தும் மூன்றாவது பதிப்பாக இதனைப் பிரசுரிக்கலானேன்.

வித்யா இலாகா அதிகாரிகள் இதனைக் கவனித்துப் பள்ளிக் கூடத்திற்குரிய உபபாடப் புத்தகமாக அங்கீகரித்து இதுபோன்ற புத்தகங்கள் பல எழுத எனக்கு உற்சாக மளிப்பாரென நம்புகிறேன்,

இதிலுள்ள பிழை பொறுத்தருளப் பெரியோரை வணங்கிக் கேட்டுக்கொள்கிறேன்.

மு. சொ. சுந்தரேசன் செட்டியார்.

உ

சிவமயம்

# சாற்றுக்கவிகள்

## திருநெல்வேலி. மாஜீ. L. T. S. மாஸ்டர்
## மகா-ா-ா-ஸ்ரீ
## V. சுப்பிரமண்யபிள்ளை அவர்களால்
## இயற்றப்பெற்றது

---

அறு சீர்க்கழி நெடில்

அரும்பொரு ணீதி நூற்க ளனைத்தையு மோர்ந்து பின்னர்த்
திருத்தமா யினிய நாவல்செய்தன னமிழ்நுங் தோற்கத்
திருக்கிளர் செல்வ மோங்கு தேவகோட் டையில் வாழும்
மருவுசீர் சுந்தரேச வணிகநற் புலவன் மாதோ.

உ

சிவமயம்

## தேவகோட்டை வித்துவான்
## ஸ்ரீமான்
## வயி. கும. நாகப்பசெட்டியாரவர்களால்
## இயற்றப்பெற்றது

வெண்பா

முன்ஞோர் மொழிந்த மொழிபலவுந் தன்மதியும்
இன்னூலிற் சேர இசைவித்தான்—நன்னயமாய்த்
தேவை வணிக சிகாமணி சொக்கலிங்க
மாவலனுஞ் சுந்தரேச மால்

---

உ

சிவமயம்

தஞ்சைமாநகரைச்சார்ந்த

## அம்மாபேட்டையிலிருக்கும்
## மஹா-ா-ா-ஸ்ரீ
## அரிஹரபுத்திர சட்டியாரவர்கள் குமாரர்
## மூத்துக்குமரசெட்டியாரவர்களால்
## இயற்றப் பெற்றது

---

சீர்கொண்டமணிமுடிச், சேடன் பரிக்குமிச்
செகதலந் தன்னின் மிக்க
தெருளுறுங் கல்வியின், பொருளுறுஞ் சாரமாய்த்
திருவுறுங் காதை யொன்று
சிந்தைமகிழ் வெய்திடுஞ், சந்தமிகு செந்தமிழ்
சிறந்துலகின் மன்னி யோங்குஞ்
செய்கையி லியற்றுமென, மேலவர்க ளோதிடத்
திருமங்கை புரிவாழ்வி னன்
தார்கொண்ட முல்லையணி, மார்பின னளகையான்
தன்மாபில் வந்தணி செயுந்
தருமசிலன்சரித, முலகெலாங், கொண்டாடு
தன்மையிற் செய்த ளித்தான்
தண்ணறுந் தருவெனக் கொடையினன்
விடையின்மேற், றங்குவன் மீகநாதர்
சரணமொடு மங்களாம். பிகையெனுந் தேவியைச்
சந்ததம்பரவு நெறியான்
ஏர்கொண்ட பூம்புகார், வணிகர்குல நற்றவத்
தெழிலுறுந் தேவை நகரான்
இகமுறும் வயிரவன் றளியுளான் மரகதத்
* திறைமகன் பூஜையுள்ளான்
* இக்குவன நாதர்க்கு, மிக்கமாமணி செயுஞ்
சொக்க லிங்கப் பெயரினன்
எண்ணுறு தவத்தில்வர், தாளடித் தொண்டர்பா
லெய்து நல்லன்பின் மிக்கான்
நீர்கொண்டசததளாம், புயமங்கை நிலமங்கை
நிகழுநா மங்கை யருளால்
நீணிலம் பொன்முதற்' பலவளம் பொறையறிவு
நிறைகேள்வி யொத்த மாரன்
நெய்தை வளருலகின்மேற், சிவகாருண்யமே
நேர்ந்திடு மொழுக்க மாக
நின்றநற் குணமுள்ள, சுந்தரே சப்பெயர்
நிலவிய குபேரன் மாதோ

---

* இறைமகன் என்றது விநாயகக்கடவுளை.
* இக்குவன நாதரென்றது வெண்ணிக்கரும்பேஸ்வரரை.

உ

சிவமயம்

தஞ்சைமகாநகரைச்சார்ந்த

அம்மாபேட்டையில் வசிக்கும்

கவர்ன்மெண்டு ஸ்கூல் ஹெட்மாஸ்டரவர்கள்

மஹா-ா-ா-ஸ்ரீ

கஸ்தூரி ரங்காசாரியாரவர்கள்

பிரதம மாணாக்கராகிய

அ. பெருமாள் பிள்ளை யவர்களால்

இயற்றப்பெற்றது

பூமலி யுலகிற் பொற்பு மிகுந்த
நாமலி குறுமுனி நண்ணிய சயில
மன்னுந் தகவு மருவிரி கடுக்கை
மின்னுஞ் சடையார் விளையாட் டறுபதோ
டொருநான் கியற்று முயர்விற் பொலியுந்
திருமா துறையுந் தென் பாண்டி நாட்டின்
மிக்க வளஞ்சார் மெய்யுணர் வுள்ள
தக்கவர் சூழ்தகு தேவை நகரில்
நீத மிகுந்த நிலைவை சியரிற்
போத மிகுந்த புரையின் மனத்தான்
செக்கர் வடிவச் சிவனை மறவாச்
சொக்கலிங் கப்பெயர்த் தூயன் புரியும்
புண்ணிய மெய்தும் பொருளென வந்து
நண்ணிய வுலகி னலம்பெறு ஸ்ரீமான்
மாரனை யொத்த வடிவிற் சிறந்த
தீர வுதாரன் றிருவி லுயர்ந்தான்
சந்திர னென்னத் தழையுங் கொடையான்
சுந்தரே சனெனுந் தோன்றல்காற் பொருளு
நொய்தில் விளக்கு நூற்பொரு ளெல்லாம்
எய்தும் புராண விலக்கிய மென்ன
திருமங்கை புரியிற் சீர்பெறும்
தருமசீ லன்கதை சாற்றினன் மாதோ

---

உ

செந்திலாண்டவன் திருவடிதுணை.

---

பாலவிநோதினி பத்ராசியர்

## ஸ்ரீமத் வரகவி திரு. அ. சுப்ரமண்ய பாரதியாரவர்கள் எழுதியது

## தேவகோட்டை

ஸ்ரீமான். மு. சொ. சுந்தரேசன் செட்டியாரவர்கள் எழுதிய தருமசிலன் என்னும் நூலை, நான் முழுவதும்படித்துப்பார்த்தேன். படித்துத் திருத்தவேண்டியவைகளையுந்திருத்தி தந்தேன், இந்த நூலில் செட்டியாரவர்கள் ஆங்காங்கு சந்தர்ப்பத்துக்குத் தக்கவாறு எடுத்துக் காட்டியுள்ள நீதிச் செய்யுட்களும் பழமொழிகளும் படிப்பவர் மனத்திற்கு நல்லதோர் படிப்பினையைத் தருமென்பது திண்ணம். இது நீதிகள் விரவியதாயிருப்பதாதலால், பொன்மலர் வாசம் பெற்றதுபோல் இலகுமென்பது எனது துணிபு.

இதில் அமைந்துள்ள நடையழகும் சுவைமலிந்த சொல்லழகும் போற்றத்தக்கனவாம். கதாபாகமும் படிக்கவும் கேட்டு ஆநந்தமடையவும் தக்கதாய் ஸ்திரி, புருஷர்களின் கடமைகளையும் பெரியார்களின் கடமைகளையும் விளக்கிக் காட்டுவதா யிருக்கின்றபடியால், இது பள்ளிக்கூடங்களின் மாணவர்களுக்குரிய பாடப் புத்தகமாக வைப்பதற்கேற்ற யோக்யதையுடைய தென்பதில் ஐயமில்லை.

இதனைப் படிப்போர் இதுபோன்ற நூல்கள் பல எழுத வேண்டுமென்று செட்டியார் அவர்களைத் தூண்டுவார்களென்பது திண்ணம். நானும் அந்த அபிப்பிராயமே கொள்கிறேனாதலால் செட்டியாரவர்கள் தமது முயற்சியை இந்த வழியில் இன்னும் செலுத்த ஆண்டவனருள் பாலிப்பாராக.

உ
செந்திலாண்டவன் திருவடிதுணை.

23—4—28

வேதாந்த சங்கம்
சிந்தாதிரிப்பேட்டை
சென்னை.

பிர்மஸ்ரீ திரு. அ. சுப்ரமண்ய பாரதியார் அவர்கள் திவ்யசமுகத்திற்கு, க்ஷேமம் க்ஷேமம்.

தெரிவிக்க

தங்கள் வாயிலாகக் கிடைத்த தருமசீலன் என்னும் கத்திய (வசன) வடிவ புத்தகத்தின் பல பாகங்களைக் கவனமாய் படித்துப் பார்த்தேன். அதனால் இப்புத்தகத்தில் பல அரியபெரிய விஷயங்கள் அமைந்து கிடத்தலைக் கண்டு சந்தோஷ மடைந்தேன். தற்காலத்திற்கு ஏற்றவாறும் நமது பிராசீன ஆரிய தர்மங்களை விளக்கிக் காட்டுவதாயுமுள்ள இப்புத்தகம் சிலாக்யமான புத்தகங்களுள் ஒன்று மென்பது எனது துணிபாம். இதனை ஆக்கியோராகிய தேவகோட்டை ஸ்ரீமான்—மு-சொ. சுந்தரேசன் செட்டியா ரவர்களது, புத்தி நுட்பமும் கல்வியறிவின் பெருக்கும் ஆசாரத்தின் மேன்மையும் இதனால் நன்கு விளங்குகின்றன. செட்டியார்ரவர்கள் தமக்குள்ள பெரிய வியாபார வேலைகளில் ஒழிந்த காலத்தை இந்நூ லெழுதும் வேலையில் செலவிட்டது மிகவும் போற்றத்தக்கதாம். இயற்கை உணர்வும் செயற்கை உணர்வும் ஒருங்கமையப்பெற்ற செட்டியா ரவர்கள் இது போன்ற நூல் பலவற்றை எழுதி வெளியிடுவாராயின் அவை தமிழ் உலகத்துக்குப் பேருபகாரமாம், இப்புத்தகம் கலாசாலை மாணவர்களும் எளிதாக அறிந்து ஸன்மார்க்கத்தில் ஒழுகுவதற்குரிய விஷயங்கள் பல அமைய இருப்பதால் இது அவர்களுக்கும் பெரும்பயன் தருவதாம்.

இங்ஙனம்,
கோ. வடிவேலு செட்டியார்.

---

உ

சிவமயம்

# தருமசீலன்

அல்லது

## சற்புத்திரர் கடமை.

---

### அத்தியாயம் 1

"வாவிபல கூபமுடன் ஆறடவி சேர்வதாய்
மலைகாத வழியில் உளதாய்''

என்றபடி அநேக நதிகள் தடாகங்கள் கூபங்கள் அமைந்து, சோலைகள் மலைகள் அடர்ந்து, பற்பல சிறப்புகள் பொருந்தியதாயும், திருமாது வாழ்வதற்கிடமாயுமிருந்த திருமங்கைபுரியிலே நடனசபேசன் என்னுமொரு வேந்தன்,

" பல்லுயிரெலாந் தன்னுயிருக்கு நிகரென்று ''

எண்ணி அரசுபுரிந்து வந்தான். அவனுடைய நாட்டில் மாத மும்மாரி பெய்து வருஷம் முப்போகம் விளைந்தன.

அவனுடைய காலத்தில் தேசாந்தர வியாபாரமே சிறப்பென எண்ணும் கோதிலா வைசிய குலத்திலுதித்த குணபதீச்சுரன் என்ற வைசியனிருந்தான்: அவனுக்கும், கற்பினிற் சிறந்த கனகவல்லி என்னும் மாதுக்கும் அவர்கள் செய்த தவத்தினி லுதித்த தருமசீலன் என்ற ஒரு புத்திரனிருந்தான். அப்புதல்வனை அவர்கள்,

"வேதாந்த சித்தாந்த வழிதெரிந் தாசார
விவரவிஞ் ஞான பூர்ண
வித்தியா விசேஷசற் குணசத்ய சம்பன்ன
வீரவை ராக்ய முக்கிய
சாதாரணப் பிரிய யோக மார்க்காதிக்ய
சமாதிநிஷ் டானு பவராய்ச்
சட்சமய நிலைமையும் பரமந்த்ர பாதந்த்ர
தருமமும் பர சமயமும்
நீதியி லுணர்ந்து தத்துவ மார்க்கராய்ப் பிரம
நிலைகண்டு பாச மிலராய்
நித்தியா னந்தசை தன்யரா யாசையறு
நெறியுளோர் சற்குருவராம்''

என்றபடி ஆசாரிய இலக்ஷணங்கள் அமையப்பெற்ற குருவினிடத்தில் வாசிக்க வைத்தார்கள். அப்புதல்வன் தூய குணமுடையவனும் தந்தை சொல்லும் நன்னடக்கையின் வழியே நடப்பவனுமிருந்து புத்தியை வேறு வழிகளிலே செலுத்தாமல் உபாத்தியாயர் சொல்வதைக் கவனித்து அவர்களுக்குக் கீழ்ப்படிந்து நடந்து வித்தையில் தேர்ச்சி யடைந்தான்; பின்—

"தங்குலம் விளங்கிடப் பெரியோர்கள் செய்துவரு
தருமங்கள் செய்து வாலுங்
தன்மமிகு தானங்கள் செய்தலுங் கனயோக
சாதக னெனப்படுதலும்
மங்குத லிலாததன் தந்தைதாய் குருமொழி
மறுதவழி பாடு செயலும்

வழிவழி வருந்தமது தேவதா பக்திபுரி
மார்க்கமுந் தீர்க்கா யுளும்
இங்கித குணங்களும் வித்தையும் புத்தியும்
ஈகையுஞ் சன் மார்க்கமும்

இவையெலா முடையவன் புதல்வனும்''

என்றபடி சற்புத்திரருக்குரிய சகல சற்குணங்களை யுடையவனுய் விளங்கினன். அவனை அவன் தாய் தந்தையர் கண்டு, களித்து

''ஆனி ஆனைவாலொத்த கரும்பும்
ஆவணி முப்பதில் நட்ட நடவும்
அறுநான்கிற் பெற்ற புதல்வனும்''

இம்மூன்றும் பெரியோர்களால் கிடைத்த தனம் என்பதை எண்ணி உள்ளம் பூரித்து "இப்புதல்வனே நமக்குத்திரவியம், இவனே நம்மைப் புத்தென்னும் நரகத்தினின்று விடுவிக்கக்கூடிய புண்யசீலன்'' என்று தீர்மானித்துப் பெருமிதங்கொண் டிருந்தனர்.

இப்படி யிருக்கையில் ஒரு நாள் கணவனுடைய அருமையான குணங்களையே எந்த நேரமும் சிந்தையிற் கொண்டவளும் அவனுடைய

''காலில் தைத்தமுள் தன் நாவில் தைத்ததுபோல்''

அவனுக்குச் சிறிது கவலை நேரிடில் அதைத் தன்னதாகக் கொண்டு அக்கவலையை நீக்கி அவனிடத்தில் சதா அன்பு பாராட்டி வருபவளுமாகிய கனகவல்லி, தன்னுடைய

எண்ணத்திற்கு மாறுதலில்லாத கணவனாகிய குணபதீச் சுரனைப் பார்த்து, "நாதா! நம் புதல்வனுக்குத் திரு மணம் செய்விக்க வேண்டுமே! மைந்தன் அழகிற்கு ஏற்ற மங்கையைத்தேடி மணமுடிக்க வேண்டும்'' என்று வெகு விநயத்துடன் சொன்னாள்.

குணபதீச்சுரன், "பெண்ணே! நீ சொல்வதுண் மையே. நான் அவ்விஷயத்தில் கவலை கொள்ளாதிருக்க வில்லை; ஆயினும் உன் மூலமாய் வார்த்தை வருமென் றெண்ணியே இவ்வளவு நாள் தாமதித்தேன். இனித் தாம திக்கலாகாது. நமது புதல்வனோ நம் குலாசாரத்துக்கேற்ற,

'தனவணிகருக்கு ஆதாய மீது நினைவு'

என்பதுபோல் புண்ணிய வசத்தினால் திரவியம் சம்பாதித்துச் சற்பாத்திரத்தில் செலவு செய்து தனக்கும் நமக்கும் யாதொரு குறைவுமின்றி நீடூழிகாலம் நமக்கு நற்பெயரை நிலை பெறச் செய்பவனாயிருக் கிறான். விவாகம் நடத்த வேண்டியது அவசியந்தான். இருந்தாலும் சில குடும்பங்களில் பெண்ணையாவது பிள்ளையையாவது யாரை விவாகம் செய்துகொள்ளச் சம்மதமென்று கேட்டு அவர்கள் அபிப்பிராயத்தைத் தெரிந்துகொள்ளாமல் பெற்றோர்கள் தங்களிஷ்டம்போல் விவாகத்தை முடித்து விடுகிறார்கள். புதல்வன் அதிக புத்திசாலியாயும், புண்ணிய வசத்தினால் எவ் வளவோ திரவியங்களைச் சம்பாதிக்கக்கூடிய சாமர்த்திய வந்தனாயும், அதிக அழகு வாய்ந்தவனாயும், செல்வத் திலே சிறந்த குடும்பத்தில் பிறந்தவனாயு மிருந்தாலும் அவனை அனுசரியாமல் பணத்தைப் பெரிதாய்

ஈன்னியோ அல்லது பெண் வடிவத்திற் சிறந்தவ ளென்று கருதியோ அல்லது பழைய உறவுகள் விட்டுப் போகப்படாதென்றோ புதல்வனுடைய அபிப்பிராயத் திற்கு முற்றும் மாறாகவே,

'நிதானமுள உத்தமர்க் கிங்கித மில்லாத கோடு,
நீலியைச் சேர்வித்தனே'

என்று குறை கூறும்படி மகாதுர்க்குண முடையவளும் புருஷனை அலக்ஷியஞ் செய்பவளும் கணவன் எவ்வளவு பொருள்களைத் தேடித்தந்தாலும் அதைப் பொருட் படுத்தாமல் அவமதிப்பவளும், புருஷனுடைய சமயம் தெரிந்து நடந்து கொள்ளத் தெரியாதவளும், அழகு, குணம், அறிவு இல்லாதவளுமான கன்னிகையை மணம் செய்விக்கிறார்கள்.

"தங்கள் புதல்வி கற்பில் அருந்ததிக்கும், அழ கில் இரதி தேவிக்கும், பொறுமையில் பூமிதேவிக்கும் சமமாய்க் குணத்தில் ஒருவருக்கும் ஒப்புவமை சொல் லக்கூடாத உயர்வு வாய்ந்தவளாயிருந்தாலும், பெற்றோர் கள், கேவலம் திரவியத்திற்காசைப்பட்டுக் கூனோ, குரு டோ, நொண்டியோ, அழகில் விகாரரூபனோ குணத்தில் மூர்க்கனோ, நித்திய தரித்திரனோ, சம்பாத்தியத்தில் சுத்த சூன்யனோ, வயதில் விருத்தாப்பியனோ, எவனுயிருந்தா லும் தன்னைப் பந்தகம் வைத்துக் கடன்பட்டாயினும் பல ரிடத்தில் யாசகம் வாங்கியாயினும் வேறு எவ்வழியிலாயி னும் சம்பாதித்துத் தாங்கள் கேட்கும் திரவியத்தைக் கொடுப்பானானல் அவன் சுய ஜாதியானா என்பதை மாத்திரம் கவனித்து வேறு எதையுங் கவனியாமல்,

'நீதியகன் மூடருக் கருந்ததி யெனத்தக்க
நெறிமாதினைத் தந்தனை'

என்று உலகம் பேசியேசவும்,

'கையில் கிளியைவளர்த்துப் பூனைக்கிரை கொடுப்பது'

போல், அத்தகைய அறிவில்லானிடத்தில் பெண்ணை ஒப்புவித்து விடுகிறார்கள். ஐயோ பரிதாபம்! அந்தப் பெண்ணின் நிலைமை என்னவோ!

'கல்லென்றாலும் கணவன் புல் லென்றாலும் புருடன்'

என்றபடி அவள் அவனுக்குக் கீழ்ப்படிந்து நடந்தாலும் அவனுடைய மூர்க்க குணத்தினால் அவள் செய்யும் நற் காரியங்கள் எல்லாம் அவனுக்குக் கெடுதலாகவே தோன்று கின்றன. அதனால் அவன் கொடுமையாயிருந்து எந்த நேரத்திலும் அடிக்கவும் திட்டவும் செய்கின்றான். அவ்வாறாயின் அந்தக் குடும்பம் எவ்விதம் ஒற்றுமை யுடனிருக்கும்? ஒற்றுமை யில்லாமற்போனால் புருஷன் திரவியங்களை வெறுக்கத்தக்க வழியில் விரயம் செய்து, தனக்கும் தன் வம்சத்தார்க்கும் இழிவான பெயரைத் தேடுவதுமல்லாமல் முடிவில் ஜீவனத்திற்கு மார்க்கமின்றி யாசகம் செய்தோ, திருடியோ, வேறெவ்வழியிலோ, சில நாட் காலங்கழித்துப் பின் மண்ணுலகை விட்டேகுகின் றனன்.

"பெண்ணே புருஷன் புத்திசாலியா யில்லையென்று தெரிந்தால் இந்த மூர்க்கனுடன் வாழ்வதிலும் தனித்து

வாழ்தல் நன்றென்று நினைக்கிறாள் ஒரு சமயம்; மற்றொரு சமயம் உயிரை விட்டுவிடலாமா என்றெண்ணுகிறாள்; கடைசியில் புத்திகெட்டு வேறு புருஷனை நாடிக் காலங் கழித்து ஊர் சிரிக்கத் திரிந்தழிகிறாள்.

"இத்தகைய அபவாதங்களுக் கிடமின்றி, நமது புதல்வனுக்கு அவன் விரும்பும் கன்னிகையைத் தெரிந்து அவன் இஷ்டம்போல் விவாகத்தை முடிக்கவேண்டுமே தவிர நாமாக ஒன்றும் பலமான யோசனை செய்யப்படாது. பிள்ளைகள் தாயிடத்தில் இரகசியத்தைச் சொல்வது போல் தந்தையிடத்தில் சொல்லமாட்டார்கள். ஆனதால் நமது புதல்வன் தருமசீலனுடைய அபிப்பிராயத்தை நீயே அறிந்து சொல்" என்று குணபதீச்சுரன் சொன்னான்.

கனகவல்லி "அப்படியே செய்வோம்" என்றாள்.

இனித் தருமசீலனுடைய விஷயத்தைச் சற்று கவனிப்போம். தருமசீலனோ சகல நற்குணங்களும் அமையப்பெற்றவனாய்,

"கொண்டபடி போலும் விலை பேசி லாபஞ்சிறிது
கூடிவர நயமு ரைப்பார்
கொள்ளுமொரு முதலுக்கு மோசம் வாராதபடி
குறுகவே செலவு செய்வார்
அண்டப்புரட்டர்தா முறிதந்து பொன்னடகு
வைக்கினுங் கடனீந்திடார்
மருவு நா ணயமுளோர் கேட்டனுப்பினு மவர்
வார்த்தையி லெலாங் கொடுப்பார்

கண்டெழுது பற்று வரவினின் மயிர் பிளந்தே
கணக்கிலனு வாகிலும் விடார்
காசுவீணிற் செலவிடா ருசிதமானதிற்
கனதிரவியங்கள் விடுவார்
மண்டலத் தூடுகன வர்த்தகஞ் செய்கின்ற
வணிகர்க்கு முறைமை யிதுகாண் ''

என்னும் வர்த்தக இலட்சணங்களை மேற்கொண்டு தன் பிதாவினுடைய வியாபாரத் தொழில்களைக் கவனித்துத் திரவியம் சம்பாதிப்பதில்,

'' மலிந்தது கோள்ளா வணிகரும் பதரே ''

என்றபடி மனுவிற் கொண்டு மேன்மேலும் தொழிலை விர்த்திசெய்து,

'' புண்ணியவசத்தினுற் செல்வமது வரவேண்டும்
பொருளை ரக்ஷிக்கவேண்டும்
புத்தியுடனது ஒன்று நூறுகவேசெய்து
போதவும் வளர்க்க வேண்டும் ''

என்றபடி தான் பிறந்த காலத்தில் தன் தந்தையிட மிருந்த திரவியத்தைப் பார்க்கிலும் பதின்மடங்கதிக மாகச் சம்பாதித்துக் காத்து,

'' உண்ணவேண்டும் பின்பு நல்ல வஸ்த்ராபரண
முடலிற் றரிக்க வேண்டும்
உற்ற பெரியோர் கவிஞர் தமராதுலர்க்குதவி
யோங்குபுகழ் தேடவேண்டும்

மண்ணில் வெகு தருமங்கள் செய்யவேண்டுமுயர்
மோக்ஷவழி தேட வேண்டும் ''

என்றபடி தானும் அநுபவித்து வறியவர்களுக்கு வேண்டிய தருமங்களையுஞ் செய்து வந்தான்.

" அன்னை சுற்றங்களையும் மற்றைநாண் முதலா
அடுத்துவரு பழை யோரையும்
அடுபகைவரிற் றப்பி வந்த வொருவேந்தனையும்
அன்பான பெரியோரையும்
தன்னை நம்பினவரையு மேழையானவரையுஞ்
சார்ந்த மறையோர் தம்மையும்
தருணமிது வென்றுநல் லாபத்து வேளையிற்
சரணம் புகுந் தோரையும்
நன்னயமதாகமுன் னுதவிசெய் தோரையு
நாளுந்தனக் குறுதியாய்
நத்து சேவகனையுங் காப்பதல்லாது கை
நழுவ விட லாகாது காண் ''

என்றபடி வைத்துக்காப்பாற்றக் கூடிய குணசாலியாயும்,

" அண்டிவரு முற்றூர் பசித் தங்கிருக்கவே
அன்னியர்க் குதவு வோரும்
ஆசு தபு பெரியோர் செய் நேசத்தைவிட்டுப்பின்
அற்பரை யடுத்த பேரும்
கொண்ட வொருமனையா ளிருக்கப் பரத்தையைக்
கொண்டாடி மருவு வோருங்
கூறுசற்பாத்திர மிருக்கமிகு தானமது
குணமிலார்க் கீந்த பேரும்

கண்டுவரு புதியோரை நம்பியே பழையரைக்
கைவிட்டிருந்த பேருங்
கரிவாலைவிட்டு நரி வால் பற்றி நதி நீர்
கடக்கின்ற நிலைபோல்''

முடியு மென்ற உண்மையைத் திடமாய்த் தெரிந்து நடக்கின்றவனுயுமிருந்தான்; ஆரியம் ஆங்கிலம் தமிழ் முதலிய பல பாஷைகளிலும் தேர்ச்சி பெற்றுன்.

இவனுடைய ஆப்தமித்திரன் ஒருவன் இவனுக்குச் சமமான புத்திமானுய் நன்னடக்கையும் பொறுமையும் வாய்ந்தவனுயிருந்தான். அவன் பெயர் கற்பூர சுந்தரம். பாலியத்திலேயே அவன் தருமசீலனுக்குச் சிநேகிதனுனன். தருமசீலன் அவனுடைய அந்தச் சிநேகத்தை விடாமலே,

''பாலும் நீரும் போலவும்
உடலும் உயிரும் போலவும்
மலரும் மணமும் போலவும்''

பழகினுன்.

இருவரும் ஒருவருடைய எண்ணத்துக்கு ஒருவர் மாறுபடாமல் ஒருவர் ஒரு காரியத்தை நினைக்கு முன்னே ஒருவர் முடிக்கக்கூடிய சாமர்த்தியவான்களாய் ஒருவருக்கு வந்த இடுக்கண் ஒருவருக்கு வந்ததுபோல் எண்ணி,

''மாமதியின் முயலான தது தேய்வுழித் தேய்ந்து
வளரும்பப் போது வளரும்

வாவிதனி லாம்பல் கொட்டிகளதனி னீர்வற்றின்
வற்றிடும் பெருகிலுயரும்
பூமருவு புதல் பூடு கோடையிற் றீய்ந்திடும்
பொங்கு காலர் தழைக்கும்
புண்டரிக மிரவிபொ மளவிற் குவிந்திடும்
போதுதய மாகின் மலரும்
தேகமுட லிளைக்கிலுயர் கூடவு மிளைக்குமது
தேறிலுயிருஞ் சிறக்குஞ்
சேர்ந்தோர்க் கிடுக்கணது வந்தாலு நல்லோர்
சிநேக மப்படி யாகுமே''

என்றபடியும்

"பாலினொடு தேன் வந்து சேரில் ருசி அதிகமாம்
பவளத்திடை முத்தை வைத்திடிற் சோபிதம்
மிக்கான தங்கத்தில் நவமணியுறிற் பெருமை
மருவுநல்லோரிடம் பெரியோர்வரிற் பிரியம்''

என்றபடியும் நற்குணங்கள் வாய்ந்த இருவரும் ஒன்று சேர்ந்து சிநேகித்து வந்தார்கள்.

## அத்தியாயம் 2

ஒரு நாள் இவர்களிருவரும் அதிகாலையில் நித்திரை விட்டெழுந்து, ஏதோ வேடிக்கையாய்ச் சில விஷயங்களைப் பேசிக்கொண்டே நெடுந்தூரம் சென்று, காலைக் கடன்களை முடித்துக் கொண்டு, பொன்னி நதி எனப் புகழப்பெற்ற காவிரி யாற்றங்கரையில் வந்துட்கார்ந்து காவிரி ஆற்றில் தண்ணீர் பொங்கிப் பெருகிப் போய்க்கொண்டிருக்கிற சிறப்பைப் பார்த்து

மகிழ்ந்துகொண் டிருந்தார்கள். அதன் கரை இருபக்கங் களிலும் வாழை, கமுகு, மா, பலா, கொய்யா, தெங்கு முதலான விருட்சஜாதிகள் அடர்ந்த சோலைகள் பல இருந்தன. மாடமாளிகைகள், கூடகோபுரங்கள், கோ யில்கள், குளங்கள்,நந்தவனங்கள், பசுமடங்கள், அன்ன சாலைகள், வித்தியாசாலைகள், உப்பரிகைகள், வீடுகள் முதலியன பந்திபந்தியாய் விளங்கின. அநேக ஆடவ ரும் மகளிரும் வந்து நதியில் நீராடி ஜெபதபங் களை முடித்துச் சிவ தரிசனம்செய்து சென்றனர். சில ஸ்திரீகள் குடத்தில் ஜலம் திரட்டிக்கொண்டும் வயோதிக ஸ்திரீகளும் புருஷர்களும் சிவ சிவ சிவ, அரகர அரகர அரகர, சம்போ சம்போ சம்போ என்று சொல்லிக் கொண்டும், சிலர் ராம ராம ராம, கிருஷ்ண கிருஷ்ண கிருஷ்ண, ஸ்ரீநிவாஸ, ரெங்கநாத, நாராயணா என்று சொல்லிக்கொண்டும் சென்றனர். யௌவன ஸ்திரீக ளில் சிலர் ஸ்நானம் செய்து சிவ தரிசனம் முடித்து ஜலம் திரட்டிக்கொண்டு தங்கள் வயதை ஒத்த கன்னி கைகளுடன் பேசிக்கொண்டு சென்றனர். சில ஸ்திரீ கள் தங்கள் குடும்பங்களின் உயர்வையும், தங்கள் நாய கர்களுடைய மேன்மையையும், தங்கள் வீடுகளிலுள்ள பண்ட பலாதிகளின் சிறப்பையும் பற்றிப் பேசிக்கொண்டு சென்றனர். சிலர் தங்கள் மாமி மாமன் கொழுநன் நாத்தி மார் முதலானவர்களால் எந்நேரமும் உண்டாகும் இடை யூறுகளைப்பற்றிச் சொல்லிக்கொண்டு சென்றனர்.

தருமசீலனும் அவனுடைய நண்பனும் இவைகளை யெல்லாம் பார்த்துக்கொண்டே பலபேச்சுக்களைப் பேசிய

வன்னாம் தந்தசுத்திசெய்து கொண்டிருந்தனர். அப்பொழுது ஒரு கன்னிகை தனது தோழிகளுடன் ஆற்றிற்கு நீராட வந்துகொண் டிருப்பதைக் கண்டான். தருமசீலன் அவள் நல்ல ரூபவதியா யிருந்தபடியால் அவளைக் கல்யாணஞ் செய்துகொள்ள விரும்பி அவன் தன் கருத்தைத் தன் நண்பனுடன் சொன்னான்.

கற்பூரசுந்தரம் "என தன்பனே! நீ ஒன்றும் அறியாதவனைப்போல் பேசுகின்றாய். அந்தப் பெண்ணை நாம் இன்னாரென்று அறியோம். அவள் குலமும் அறியோம். அவள் நலமும் அறியோம். அப்படியிருக்க அவளை நீ விவாகஞ் செய்துகொள்ள விரும்பியதெப்படி?

'தேவைக்காரனுக்குப் புத்திகொஞ்சம்'

என்பது உன் விஷயத்தில் தெற்றெனப் புலப்படுகிறது. எக்காரியத்தையும் ஆழ்ந்து யோசித்துச் செய்ய வேண்டுமே தவிர மனம் சென்றவழி போகலாகுமா?

'மனம்போன போக்கெல்லாம் போகவேண்டாம்'

என்று பெரியோர் கட்டளையுண்டல்லவா? அதை யோசியாமல் இவ்வளவு அவசரப்படுகிறாயே! அந்த மங்கை, நீ விவாகம் செய்து கொள்வதற்கேற்ற குலம் நலம் யாவும் அமைந்தவளானாலும் அவளுடைய பெற்றோர் அவளை உனக்கு விவாகம் செய்துகொடுக்கச் சம்மதிக்கவேண்டாமா? அவர்களுடைய எண்ணம் எப்படியிருக்குமோ? ஒருவாறு அவர்கள் சம்மதித்தாலும் உனது அன்னை

தந்தையர் எண்ணம் அதற்குச் சரிப்படவேண்டுமே! இவைகளை யெல்லாம் யோசியாமல் தீர்மானத்துக்கு வந்து விட்டாயே! என் நேசனே! பெண்களுடைய குணமோ மிகவும் கெட்டது. அவர்களுடைய எண்ணத்தை அறிய ஈசனாலும் முடியாது. அவர்களைப் பற்றிய ஒரு சரித்திரங் கேள்—

"குலசேகரபுரம் என்னும் ஓர் ஊரில் விப்பிர குலத்தில் ஜனித்த கிருபாகரன், என்ற ஒருவனிருந்தான். அவனோ சகல நற்குணங்களிலுஞ் சிறந்து நாலு வேதம், ஆறு சாஸ்திரம், பதினெண்புராணம், அறுபத்து நான்கு கலைஞானம், தொண்ணூற்ரூறு தத்துவம் முதலியவைகளிலே தேர்ந்து மகா பாண்டித்யனா யிருந்தும் லௌகிக விஷயங்களில் தேர்ந்த அநுபோகமில்லாதவனா யிருந்தான். அவனுக்குத் திரவியங்களும் குறைவின்றி யிருந்தன. அவனுக்குப் பெண் கொடுப்பதாய் அநேகர் விரும்பிவந்து சொன்னார்கள். அவனது தாய் தந்தையர்கள் வந்த பெண்களை யெல்லாம் விலக்கி "மிகுந்த ஸ்திரீ தனத்துடன் யார் பெண்ணைக் கொடுக்கிறார்களோ அப்பெண்ணையே எனது புதல்வனுக்கு மணமுடிப்பேன்" என்று சொல்லிக்கொண் டிருந்தனர். இதை அறிந்த அடுத்த ஊரிலுள்ள ஒரு திரவிய வந்தன் மிகுந்த திரவியம், பண்ட பலாதிகள் ஆடை ஆபரணங்களுடன் தன் பெண்ணை விவாகம் செய்து கொடுப்பதாய்ச் சொன்னான். இதைக்கேட்ட வைதிகனுடைய தாய் தந்தையர் சம்மதித்துப் பெண் அழகாயிருப்பதையும், திரவியம் தமதிஷ்டம்போல் கிடைக்கிற தென்பதையும் பார்த்துக் குணத்

தைக் கிரகிக்காமல் பணத்தைப் பெரிதா யெண்ணிப் பெண்ணைத் தங்கள் புதல்வனுக்கு மணஞ்செய்வித்தனர். இவ்வாறிருக்க மனைவி சிலகாலம் சென்றபின் பெண் களுக்கிருக்க வேண்டிய நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் குணங்களை விட்டு,

“ குலமகட்கழகு தன் கொழுநனைப்பேணுதல் ”

என்பதை நீக்கி, பலவாறான துர்ச்செய்கைகளைச் செய்து வந்தாள். ஆனால் கணவன் அடளுடைய தீயகுணங் களைப் பொருட்படுத்தாமல் அவளிடம் அன்பு பாராட்டி வந்தான். கணவன் எந்த நேரமும் வீட்டிலேயே இருப் பதினால் தன் இஷ்டமானபடி நடக்க இயலாததுகண்டு ஒருநாள் அவள் தன் கணவனைப் பார்த்து “நாதா! எனக்கு,

‘காலுக்குப் பதமான முள்ளும்
பல்லுக்குப் பதமான கல்லும்’

வேண்டும்; அவைகளைச் சேகரித்துக் கொடுக்க வேண்டியது தங்கள் கடமையாகும்; எங்காவது சென்று அவைகளைச் சம்பாதித்துக் கொண்டுவாரும்” என்று சொன்னாள்.

சூதுவாதறியாத வைதிகன் மனைவியின் மீது கொண்ட மூட விசுவாசத்தால் அவள் கூறியதற்கு இணங்கி ஆரண்யங்களில் சென்று ஒவ்வொரு கல்லையும் வாயில் போட்டு மென்றான்; முட்களைக் காலில் குத்திப் பார்த்தான்; ஒன்றாவது மெதுவா யிராததைப் பார்த்

துக் கவலைப்பட்டுப் பல நாட்கள் திரிந்தலைந்து பகல் பதி னைந்து நாழிகை நேரத்தில் ஆகாரமுமில்லாமல் களைத்து வேர்த்து விடாயுடன் ஒரு மரநிழலில் வந்து கவலையோடு உட்கார்ந்துகொண் டிருந்தான். வழியிற் போய்க்கொண் டிருந்த பிரயாணி ஒருவன் வெயிலின் கொடுமையால் அலுத்து அம்மர நிழலில் வந்துட்கார்ந்தான்.

முன்னமே மர நிழலில் கவலையுட னுட்கார்ந்திருக் கும் வைதிகனைப் பார்த்து "ஐயா! உம்மைப் பார்த்த மாத்திரத்தில் ஏதோ ஒரு விஷயத்தை முன்னிட்டுக் கவலை யடைந்திருப்பவர் போலத் தோன்றுகிறதே! எக் காரியத்தை முன்னிட்டு இவ்வளவு விசனத்துட னிருக் கின்றீர்?" என்று வினவினர்.

வைதிகனும் "ஏனையா என் கவலையை விசாரிக்கின் றீர்? அதை உம்மிடம் சொன்னால் நீர் முடிக்கப் போ கின்றீரா? வீணில் ஏன் வினவுகின்றீர்?" என்று கேட் டான்.

பிரயாணி "உமதெண்ணத்தைத் தெரிவித்தால் அதை நிறைவேற்ற என்னால் முடியும். நீர் அதைச் சொல்லும்" என்று கேட்டான்.

வைதிகன் "ஐயா! என் மனைவி என்னிடம் அத் யந்த ப்ரீதியுள்ளவள். அவள் 'காலுக்குப் பதமான முள்ளும், பல்லுக்குப் பதமான கல்லும்' வேண்டுமென்று என்னைக் கேட்டாள். நான் அவைகளைக் கொண்டுவருவ தாய் ஒப்புக்கொண்டு பல தினங்களாய்த் திரிந்தலைந்தும்

அகப்படாததினால் அதை முன்னிட்டே கவலை அடைந்திருக்கின்றேன். நீரறிந்தால் சொல்லும்" என்று வினவினான்.

பிரயாணி நகைத்து "அடே மூடா! நீ கொஞ்சமும் சூது வினை அறியாதவன்; லௌகிக விஷயங்களை முற்றும் தெரியாதவன். உன் மனைவி உன்னை வஞ்சகமாக அனுப்பியிருக்கிறாள்" என்றான்.

வைதிகன் கோபங்கொண்டு "என்ன வார்த்தை சொன்னீர்? என் மனைவி அத்தன்மையளா? அவள் மகா உத்தமி! நீர் அப்படிச் சொல்லாதேயும்" என்று கடிந்து கொண்டான்.

பிரயாணி "உனக்கு, நான் உனது மனைவியின் வஞ்சத்தை நேரில் காட்டுகின்றேன். உன்னுடைய ஊருக்கு என்னையுமழைத்துச் செல்வாய்" என்று சொன்னான். பின் இருவரும் பிரயாணமாகி மறுநாள் அஸ்தமன நேரத்துக்குக் குலசேகரபுரமென்னும் ஊரருகிற்சென்று வைதிகனை ஒரு நெல் கோட்டை மாதிரிகட்டி தன் தலையில் சுமந்துகொண்டு வைதிகனுடைய வீட்டுத் திண்ணையிற் போய்க் கோட்டையை இறக்கித் தானுமுட்கார்ந்தான்.

உடனே வைதிகனுடைய மனைவி வெளியில் வந்து "யாரய்யா? எங்கு வந்தீர்?" என்று வினவினாள். பிரயாணி "அம்மணி! யானொரு தேசாந்திரி. இன்றிரவு திண்ணையிற் படுத்திருந்து காலையில் எனது சொந்த

வருக்குச் செல்லுகின்றேன். இந்தக் கோட்டையை மட்டும் உள்ளே வைக்க இடந்தரல் வேண்டும்'' என்று கேட்டான். அவள் "ஐயா! இவ்வூரில் திருடர் பய மதிகம். நீர் திண்ணையில் தனியாய்ப் படுக்கவேண்டாம். நாளும் எனது கணவனுந்தா னிருக்கின்றோம். ஆன தால் நீர் உள்ளே படுத்துக் கொள்ளலாம்'' என்றாள். பிரயாணி அவள் வேண்டுகோளின்படி வீட்டிற்குள் ளேயே படுத்துக் கொண்டான்.

அப்பொழுது அவ்வீட்டிற்குள் அவளுடைய ஆசை நாயகன் ஒருவன் வந்தான். அவன், பல சல்லாப வார்த் தைகளைப் பேசிக்கொண்டிருந்து பிறகு "அந்தப் பிணம் வெளியிற் போச்சே அது எப்போது வரும் ?'' என்று கேட்டான். அவள் "இனி அந்தப் பிணம் வருவதேது? நான் சொன்ன சாமான்களைத் தேடிக் கொண்டல்லவோ வரும்! அது இனிச் செத்த பிணமே தவிர சாகாப் பிண மில்லை'' என்று சொன்னாள். பிரயாணியும்—

'கோட்டைப் பிள்ளையாரே கேட்டுக்கொள்'

என்றான். உடனே வைதிகன் எழுந்து இருவரையும் நையப்புடைத்து மனைவியைத் துரத்திவிட்டு வேறொரு பெண்ணை மணந்து கொண்டான்.

இது போன்ற இன்னும் அநேகவிதமான தீய குணங்கள் பெண்களுக்கு ஏற்பட்டிருப்பதால் பெண் களுடைய குண குணங்களைத் தெரிந்து விவாக முடிக்க வேண்டுமே தவிர பார்வைக்கு அழகாயுள்ள பெண்களை மட்டும் விவாகஞ்செய்து கொள்ளப்படாது. ஆயினும்;

'இல்லறமே நல்லறமென்று இயம்பினர் மெய்யறி
வுடையார்'

என்றபடி இல்லறமே சிரேஷ்டமென்று அறிவுடையார் சொல்வதால்,

'கணவனுக்கினியளாய் மிருதுபாஷியாய் மிக்க
கமலை நிக ரூபவதியாய்க்
காய்சினமிலாளுமாய் நோய் பழியிலாததோர்
கால்வழியில் வந்தவளுமாய்
மனமிக்க நாணமட மச்சம் பயிர்ப்பென்ன
வருமினிய மார்க்க வதியாய்
மாமிமாமர்க்கிதம் செய்பவளுமாய் வாசல்
வருவிருந் தோம்புவளுமாய் [வந்தி
இணையின்மகிழ் நன்சொல் வழி நிற்பவளுமாய்
யென்பெய ரிலாதவளுமாய்
இனியமொழி பேசுநல் இயல்புடையளாய்ப் பிறர்
இல்வழி செலாத வளுமாய்
அணியிழை யொருத்தியுண் டாயி னவள்
கற்புடைய வளாகும்'

என்றபடி நல்ல குணங்கள் வாய்ந்த மங்கையாயிருந்தால் மட்டும் இல்லறம் உயர்வுறும். கேவலம் திரவியத்தை யும் ரூபத்தையும் மட்டும் பார்த்து பிரமிப்பது கூடாது. ஆயினும், நாம் வீட்டுக்குப்போய்ப் பேசிக்கொள்வோம் வாரும்" என்று அழைத்தான்.

தருமசீலன் "நீ சொல்லுங் குணங்கள் முழுதும் இப்பெண்மணிக்கு வாய்த்திருப்பதில் கொஞ்சமும் சந்தேகமேயில்லை.

'அகத்தினழகு முகத்திற்றெரியும்'

என்றபடி இவளுடைய முகாரவிந்தத்தைப் பார்த்த மாத்திரத்தில் இவள் சகல நற்குணங்களும் பொருந்தியவளென்பது தெரிகின்றது. ஆதலால் நான் இவளையே விவாகஞ் செய்துகொள்ள விரும்புகிறேன்" என்றான். நண்பன், "எல்லாம் நம்முடைய வீட்டுக்குப்போய்யோசித்துக் கொள்வோம்" என, இருவரும் ஸ்நானஞ்செய்து ஜெப தபங்களை முடித்துக்கொண்டு வீடு போய்ச் சேர்ந்தார்கள்.

வந்த கன்னிகை தருமசீலனைக் கண்டு அவனை மணக்கவிரும்பித் தன் தோழியிடம் சொன்னாள்.

அவள் "அம்மணி! தாங்கள் என்ன தெரியாதவர்களா? கண்ணுக் கழகாயுள்ளவனை யெல்லாம் நல்லவனென்று நிச்சயித்து விடலாமா?

'செய்ந்நன்றி மறவாத பேர்களும் ஒருவர் செய்
தீமையை மறந்த பேருந்
திரவியந்தரவரினு மொருவர்மனையாட்டி மேற்
சித்தம் வையாத பேரும்
கைகண்டெடுத்த பொருள் கொண்டுபோய்ப்
பொருளாளர் கையிற்கொடுத்த பேருங்

காசியினிலொருவர் செய் தருமங்கெடாதபடி
காத்தருள் செய்கின்ற பேரும்
பொய்யொன்று நிதிகோடிவரினும் வழக்கழிவு
புகலாத நிலை கொள்பேரும்
புவிமீது தலை போகு மென்னினுங் கனவினும்
பொய்மை யுரையாத பேரும்
ஐயவிங் கிவரெலாம் சற்புருடர்...........'

என்றபடி சற்குணமுள்ளவனை நாயகனாக விரும்பவேண்டுமேயன்றிக் கண்ணுற் கண்டவனை யெல்லாம் மணவாளனாக வரிக்கலாகுமா? தங்களுடைய அந்தஸ்துக்குத் தக்க நாயகனை அறிந்து மணம்புரியவேண்டும். ஆயினும் இவரைப் பார்க்குமளவில் கொலை, களவு, கள், காமம், பொய், சூது, வஞ்சம் முதலிய தீயகுணங்களைக் கனவிலும் அறியாதவராயும், பொறுமை, அடக்கம், தானம், தர்மம், கல்வி, அறிவு முதலான நற்குணங்களிற் சிறந்தவராயும் காணப்படுகிறார். நமக்குப் பிராப்தமிருந்தால் அந்த மகாநுபாவரே கிடைப்பார். நமது அன்னை கோமாளாங்கி, மாமன் மகன் காந்திமதிநாதனுக்கு உம்மை மணஞ்செய்விக்க அநேக காலமாக நிச்சயித்திருக்கிறார்கள்'' என்று சொன்னாள்.

அவள் "அடி! குணபூஷணி! என்ன வார்த்தை சொன்னாய்? அந்த அறிவில்லான் முகத்திலும் நான் விழிப்பேனா? அவன் என் அந்தஸ்துக்குச் சரியானவனா? நான் அவனை ஏறிட்டுப் பார்ப்பேனா? நீ என்ன தெரியாதவளா?'' என்று மனக்கிலேசத்துடனும், படபடப்புடனும் கூறினாள்.

தோழி "அம்மணி! தாங்கள் ஒன்றும் கோபங் கொள்ளவேண்டாம். நான் நம தன்னேயின் எண்ணத் தைத் தெரிவித்தேன். பிராப்தப்படி தான் நடக்குமே யன்றி, நம் எண்ணப்படி ஒன்றும் நடவாது.

'சோடாய் மரத்திற் புருவிரண் டிருந்திடத்
தரவுகண் டேவே டுவன்
ரூலாம லவையெய்ய வேண்டுமென் ருெருகணை
தொடுத்து வில்வாங்கி நிற்க
வடாடி மேலே யெழும்பிடி லடிப்பதற்
குலவு ராசாளி கூட
உயரப்பறந்து கொண் டேதிரிய அப்போ
துதைத்த சிலேவேட னடியில்
சேடாக வல்விடங் தீண்டவே யவன்விழச்
சிலேயிற் ருெடுத்த வாளி
சென்றிரா சாளிமெய் தைத்துவிழ அவ்விரு
சிறைப்புரு வாழ்ந்த வன்ரூே
வாடாம லிவையெலாஞ் சிவன்செயல்க ளல்லாதுன்
மனச் செயலினுலும் வருமோ?'

என்றபடி எல்லாம் தெய்வ சங்கற்பப்படி நடக்க வேண் டிய காரியங்களேயன்றி, நமதெண்ணப்படி நடக்கிற காரியம் ஒன்றுமில்லே. ஆயினும் தங்களுடைய உத்தம குணத்துக்குத் தகுந்த அந்த உத்தமரே நாயகராகக் கிடைப்பார்" என்று தைரியம் சொல்லிக்கொண்டே வீட் டிற் கழைத்துச் சென்ருள்.

இவர்களிவ்விதமிருக்கையில், அவளுடைய தாயான கோமளாங்கி தன் நாயகன் மாணிக்க சீலனை நோக்கி, "நாதா! நம் புதல்வியோ கன்னிகைப் பருவம் நீங்கிப் பெதும்பைப்பருவம் அடைந்திருக்கிறாள்; அவள் அழகுக்கும், அறிவுக்கும், குணத்துக்கும், நம் குலத்துக்கும், ஏற்ற குணாளனைப் பார்த்து மணமுடிக்க வேண்டுமே; தாங்கள் சிரத்தை யில்லாதிருக்கிறீர்களே! இவ் விஷயத்தில் தாங்களிவ்வண்ண மிருக்கலாகுமா? வேண்டிய சாமக்கிரியைகளெல்லாம் சேகரம் செய்யுங்கள்; மணவறை மண்டபத்தை அலங்கரியுங்கள். முகூர்த்த நாளை நிச்சயப்படுத்துங்கள்; எனது தமையன் புதல்வன் காந்திமதிநாதனுக்கு மணஞ் செய்விக்க வேண்டும்" என்றும் தன் நாயகன் இன்னதுதான் பதில் சொல்லுவாரென்பதையுங் கவனியாமல் தன் மனத்துக்குத் தோன்றியவற்றை யெல்லாம் மள மள வென்று சொல்லிக்கொண்டு வந்தாள். அவைகளைக்கேட்ட மாணிக்க சீலன் " அடி நாயகி! ஒருவர் அபிப்பிராயத்தையு மறியாமல் உன் மனதுக்குத் தோன்றியவற்றை யெல்லாம் சொல்லுகின்றாயே! நமது பங்கஜவல்லியின் அபிப்பிராயத்தை அறிந்தாயா?" என, கோமளாங்கி "அவள் ஒரு ஆட்சேபனையும் சொல்லமாட்டாள். மாமன் மகனென்றால் மகா விருப்பத் துடனிருப்பாள். இந்தக்ஷணமே மணமுடிக்க வேண்டியது தான்" என்று சொல்லி, பங்கஜவல்லியிடம் சென்று " அம்மணி! உனக்குப் பருவகாலம் வந்துவிட்டது! உன்னை உனது அழகுக்கேற்ற உனது மாமன் மகனுக்கு மணஞ் செய்விக்க நிச்சயித்துள்ளோம். நீ என்ன சொல்லுகின்றாய்?" என்று கேட்டாள்.

அவள் "அன்னையே! என்ன வார்த்தை சொன்னீர்? யாரை யாருக்கு நிச்சயித்தீர்? எனக்கு அவர் தகுமா? நான் அவரது முகாலோபனம் செய்வேனு? கனவிலும் நினையேன்.

'புலிபசித்தால் புல்லைத்தின்னுமா?'

என்று சொன்னுள். கோமளாங்கி "என்னடி! அதிகம் தெரிந்தவள்போல் பேசுகின்ருயே! நம் சொந்தக்குலம், தாய்மாமன் பிள்ளை, திரவியவந்தன், தீரகெம்பீரன், அறிவிற் சிறந்தவன், ஆண்மையிலுயர்ந்தவன். உறவை விடலாகுமா?" என்று கோமளாங்கி சொல்ல, பங்கஜவல்லி "தாய் மாமன் பிள்ளை என்ருல் சகல நற்குணங்களும் வந்துவிடுமா?

'சிங்காரவனமதி லுதிப்பினுங் காகமது
திஞ் சொற்புகல் குயிலாகுமோ
திரைபெறியும் வாவியிற் பூத்தாலுமேகொட்டி
செங்கஞ்ச மலராகுமோ
அங்கான கத்திற் பிறந்தாலு முயலான
தானையின் கன்ருகுமோ
ஆண்மையாகிய நல்ல குடியிற் பிறந்தாலு
மசடர் பெரியோராவரோ
சங்காடுபாற்கடல் பிறந்தாலு நத்தைதான்
சாலக்கிராம மாகுமோ
சடமேவு கடனீரி லே உப்புவிளையினுஞ்
சார சர்க்கரை யாகுமோ?'

என்றபடி எவ்வித உயர்விருந்தாலும் நல்லகுணங்கள் வந்துவிடுமா ? அவரது ரூபமோ விகார ரூபம்; குணமோ துர்க்குணம்! அவர் கல்வி வாசனையைக் கனவிலுமறியா தவர்.

‘ எழுதப் படிக்க வகை தெரியாத மூடனை
பிணையிலாச்சேட னென்றும்
ஈவதில்லாத கனலோபியைச் சபையதனி
லிணையிலாக் கர்ன னென்றும்
அழகற்ற வெகு கோர ரூபத்தை யுடையோனை
அதிவடிவ மார னென்றும்
ஆயுத மெடுக்கவுந் தெரியாத பேடிதனை
ஆண்மை மிகு விஜய னென்றும்
முழுவதும் பொய் சொல்லி யலைகின்ற வஞ்சகனை
மொழியரிச் சந்திர னென்றும்
மூதுலகி லிவ்வண்ணம் கவிராசர் சொல்லியே
முறையின்றி யேற்ப தன்றோ ?”

என்றபடி குணமும் அறிவுமில்லாதவனைப் பெருமைப் படுத்திப்பேசி என்னை அவனுக்கு மணஞ் செய்விக்கத் தாங்கள் நிச்சயிக்கலாகுமா ? ஜென்ம ஜென்மத்திலும் நான் அவரை நினையேன்; அவன் எனக்கு வேண்டவே வேண்டாம் தாயே ” என்று மறுத்தாள்.

கோமளாங்கி, “அப்படியானல், மற்றி யாரை மணம் புரிந்திட வெண்ணினுய்; சற்று நீ தயை செய்து சாற்று வாய். அவ்விதமே மண முடிப்போம்” என்ருள்.

பங்கஜவல்லி,

## அகவல்

"தன்மஞ் சிறந்தவித் தனிகக ரின்கண்
தென்றிசைத் தெருவிற் றனவணிக குலத்தில்
கணபதியைத் தொழுங் குணபதி சன்றுன்
மணந்த நற்கோதை மாகனக வல்லி
இருவர் மனத்திற் கிசைந்த நற்பாலன்
தர்மசீ லனெனுஞ் சாற்றிடும் பெயரோன்
அறிவிற் சிறந்த அற்புத சீலன்
உலகெலா மதிக்கு முத்தம நாதன்
குணமது வாய்ந்த குமார னுமவரே
சொன்னயம் பொருளையஞ் சுரந்தவா சாலன்
தான தர்மம் தயைதாட் சணியம்
ஈவ திரக்க மிடைவிடா வள்ளல்
பார்ப்போர் மயங்கும் பார்த்திப னவரே
என்மனோ ரதத்தை யீடேற்ற வந்தவர்—" என்றாள்.

இதைக்கேட்ட தாய் தந்தையரிருவரும் மன மகிழ்ந்து "பெண்ணே அவர்களோ தனம் படைத்த தகைமையாளர்; நமது வீட்டிற்கு வருவார்களா?

'மூடவன் கொம்புத் தேனுக்காசைப்படுவேது'

போல,

'எட்டாப்பழத்திற்குக் கொட்டாவி விடலாகுமா?'

நீ சொல்லி வந்த வார்த்தைகளெல்லாம் உண்மையே யானாலும் உனக்கு அவர் கணவனாகக் கிடைத்தால் அது

பாக்கியமே யாகும். நாங்கள் செய்த தவமே தவம்'' என்று பலவிதமாகப் பேசிக்கொண் டிருந்தார்கள்.

இவர்கள் இவ்விதமிருக்க, தருமசீலனுடைய தாயான கனகவல்லியானவள் தன் புதல்வனைப் பார்த்து, விவாக விஷயத்தில் அவனுடைய அபிப்பிராயத்தை அறிந்து வருவோமென்றெண்ணிப் புதல்வன் தருமசீல னிருக்குமிடத்திற்கு வந்தாள். தாயைக்கண்ட தரும சீலன் இருக்கைவிட்டெழுந்து, "அம்மணி,'' என்று நமஸ்கரித்து, "எக்காரியத்தை முன்னிட்டு இங்குற்றீர் அன்னையே ?'' என்று மிகுந்த விநயத்துடன் கேட்டான்.

தாய் "எனதருமைக் கண்மணியே, உன்னைப் பார்க்க வேண்டுமென்ற அவாவை முன்னிட்டுக்கொண்டே யிங் குற்றேன். நீயோ வியாபார முறைமைகளைக் கவனித்து, விர்த்திசெய்பவனாகவும் கல்வியிற்றேர்ந்தவனாகவு மிருக் கின்றாய். உனது வடிவுக்கு வாய்ந்த செல்வவந்தன் வீட் டுப்பெண்ணை மணமுடிக்க எண்ணமெனக்கு. நீ என்ன சொல்கிறாய் ?'' என்று கேட்டாள். தருமசீலன் "அம் மணி, உமதெண்ணத்திற்கு யான் மாறுதல் சொல்ப வனன்றே. உங்களபிப்பிராயம்போல் செய்ய என்ன ஆட் சேபனை யிருக்கிறது ?

'தாயோ டறுசுவைபோந் தந்தையொடு கல்விபோஞ்
சேயோடு தான்பெற்ற செல்வம் போம்—ஆயபுகழ்
உற்றாரு டன்போ முடற்பிறப்பால் தோள்வலிபோம்
பொற்றாலி யோடெவையும் போம்'

என்றபடி உலகில் விவகாரம் நடைபெற்று வருவதால் எனக்கு விவாகஞ் செய்யவேண்டியது உண்மை தான் ; ஆயினும் எந்தக் கன்னிகையை எனக்கு மணம்புரிய நிச்சயித்திருக்கிறீர்கள்? உங்கள் மனக்கருத்தை வெளியிட வேண்டும்'' என்று வினவ, தாய் "என் கண்மணியே! உனக்கு எப்பெண்மீது விருப்பமோ அப்பெண்ணையே மண முடிப்போம் .உனது அபிப்பிராயத்தைத் தெரிவிப்பாய் எனது கண்மணியே'' என்றாள்.

தருமசீலன் "அம்மணி! பார்வைக்கு அழகாயும் திரவியவந்தன் வீட்டுப் பெண்ணாகவுமிருந்தால் மட்டும் போதுமென்று நினைப்பது கூடாது.

'கன்னியை யீயத் தந்தை கல்விமான் றனையே வேண்டுந்
தன்னிய மீந்த வன்னை தனபதி தனையே வேண்டு
முன்னிய சுற்றத் தார்க ளுறவினை வேண்டு வார்கள்
மின்னிய கன்னி ரூப வானையே வேண்டி நிற்கும்'

என்றபடி உலகத்திலே பெண்களை வாழ்க்கைப்படுத்து மிடத்தில் பிதாவானவன் வித்வானுக்குக் கொடுக்க ஆசைப்படுவான்.மாதாவானவள் தனவானுக்குக் கொடுக்க ஆசைப்படுவாள். சுற்றத்தார்கள் வம்சத்தாரில் நல்லுறவினனுக்குக் கொடுக்க ஆசைப்படுவார்கள். கன்னிகையானவள் நல்ல ரூபவானுக்கு வாழ்க்கைப்பட இச்சைப்படுவாள் என்பதுபோல ஒருவனுக்கு ஒரு வதுவையை மணம்புரியப் பலர் பலவிதமாய் நினைப்பது வழக்கமாயிருந்தாலும், மணமகனுக்கும் மணமகளுக்கும் திருப்தியுண்டாகும்படி அவர்களெண்ணத்தை அநுசரித்து மண

முடிக்கவேண்டுவது தான் பெற்றோர்களின் கடமை; அவ்வாறு முடிப்பதானது,

'காதன் மனையாளுங் காதலனு மாறின்றித்
தீதி லொருகருமஞ் செய்யவே—யோதுகலை
யெண்ணிரண்டு மொன்றுமதி யென்முகத்தாய் நோக்
கண்ணிரண்டு மொன்றையே காண்' [கருன்

என்றபடி இருவரும் மனம் ஒற்றுமைப்பட்டு வாழ்தற் கேதுவாகும்; அவ்வாறின்றி அவர்கள் எண்ணத்திற்கு விரோதமாய் முடிக்கும் விவாகமானது,

'கொடியது கேட்கி னெடிய வெவ்வேலோய்
கொடிது கொடிது வறுமை கொடிது
அதனினுங் கொடிது இளமையில் வறுமை
அதனினுங் கொடிது ஆற்றொணாக் கொடுநோய்
அதனினுங் கொடிது அன்பிலாப் பெண்டிர்
அதனினுங் கொடிது இன்புற வவர்கையி
லுண்பதுதானே"—என்றும்

'தூற்றும் பெண்டிர் கூற்றெனத்தகும்'

என்றும்

'பர்த்தாவுக்கேற்ற பதிவிரதை யுண்டானால்
எத்தாலுங் கூடி யிருக்கலாஞ்—சற்றேனும்
ஏறு மாறாக விருப்பாளே யாமாகிற்
கூறாமற் சந்நியாசங் கொள்'

என்றும் முன்னோர் மொழிந்தபடி பல துன்பங்களுக்குள்ளாவதற்கு ஏதுவாகும். ஆதலால் என் மனத்

திற்கிசைந்த நற்கன்னிகையை மணமுடித்தல் உத்தமம்'' என்று சொன்னான்.

அதைக் கேட்ட அன்னை ''எனது அருமைப் புதல்வா! உன் மனத்திற் கிசைந்த மங்கையைத் தெரிவிப்பாய். அவ்வண்ணமே மணமுடிப்போம்'' எனத் தருமசீலன் தான்கண்டு ஆசைப்பட்ட பங்கஜவல்லியைப்பற்றிக் கூறினான்.

அன்னையும், "மகனே, உனதிஷ்டம்போல் அக்கன்னிகையை மண முடிக்கவேண்டிய ஏற்பாட்டைச் செய்யும்படி உனது தந்தைக்குத் தெரிவித்து அவ்வண்ணமே நிறைவேற்றுகிறேன்'' என்று சொல்லிப் பின் கணவனிடம் சென்று புதல்வன்பால் நடந்த வர்த்தமான மெல்லாந் தெரிவித்து பங்கஜவல்லியை மணமுடிக்க வேண்டுமென்று சொல்ல, குணபதிச் சுரனும், "நங்காய்! நம்புதல்வனுக்கு, எத்தனையோ செல்வவந்தருடைய வீட்டுப்பெண்களை மணமுடிப்பதாய் எண்ணியிருக்க நீ யாரையோ நமதந்தஸ்துக்குப் பொருத்தமில்லாத ஒருவர் வீட்டுப் பெண்ணைச் சொல்லுகின்றாயே. அது நமது கௌரவத்துக்குத்தகுமா?'' என்றான்.

மனைவி, "நாதா! தாங்களொன்றும் ஆட்சேபஞ் சொல்ல வேண்டாம்; எந்தக் காரியமும் அமைப்பைப் போலவேதான் நடக்கும். ஆகலால் இந்தக்ஷணமே நமது பெரியோர்களிற் சிலரை அனுப்பி அப்பெண்ணை நிச்சயித்து வரும்படி செய்தல் வேண்டும்'' என்றாள். குணபதிச்சுரனும் அதற்கிணங்கி நமக்கு இஷ்டமான பெண்ணை மணஞ்செய்து அவர்கள் சந்துஷ்டியின்றி யிருப்பதைப்

பார்க்கிலும் நமது செல்வப் புதல்வனுக்கு இஷ்டமான கன்னிகையை மணமுடிப்பதே மேன்மையென்று நினைத்து மனைவி வார்த்தையின்படியே தனது வம்சத்தாரில் சிலரை அழைத்து பங்கஜவல்லியைத் தருமசீலனுக்கு நிச்சயித்துவரும்படி அனுப்பினான்.

அவர்களும்அவ்வாறே பங்கஜவல்லியின் தாய்தந்தையரிடம் சென்றார்கள். இவர்களைப்பார்த்த மாணிக்கசீலனும் உபசரித்துச் சில விஷயங்களைப் பேசிக்கொண்டிருக்கையில் அவர்களது வரவையறிந்த பங்கஜவல்லியும், முன்னமே திரை மறைவிற் சென்று " வந்தவர்கள் யாவர்? எதற்காக இங்கு வந்தார்கள் ? யாது நடக்கிறது?' என்று விஷயத்தைக் கவனித்துக் கொண்டிருந்தாள். வந்தவர்களும், அநேக விஷயங்களைப் பேசிக்கொண்டிருந்து "தங்கள் பெண் பங்கஜவல்லியை யாருக்கு மணமுடிக்கிறீர்கள் ? எப்போது விவாகம் நடத்துவதாய் நிச்சயித்திருக்கிறீர்கள் ?'' என்று வினவினர். மாணிக்கசீலன் " இன்னும் மணம் நிச்சயிக்கவில்லை. தங்களைப் போன்ற பெரியோர்கள் நிச்சயிக்கிறபடி விவாகம் நடத்தவேண்டியது தான். தங்கள் அபிப்பிராயத்திற்குத் திருப்திகரமாயுள்ள வரனிருந்தால் தெரியப்படுத்துங்கள். அதுபோல் மணமுடிப்போம் '' என்றான். அவர்களும் அப்படியானால் 'குணபதீச்சுரனுடைய மைந்தன் தருமசீலனுக்கு பங்கஜவல்லியை மணமுடிக்கிறீர்களா ?'' என்றவுடன் திரை மறைவிலிருந்த பங்கஜவல்லியும் அவள் தாய் தந்தையரும் உள்ளம் பூரித்துக் களிப்படைந்தனர். மாணிக்கசீலன் " ஐயா ! அறிவுமிகுந்த பெரியோர்களே !

'தேடிய பொருள் காலிலகப்பட்டாற் போலும்'
'கும்பிடப்போன குலதெய்வங் குறுக்கேவந்தாற் போலும்'

எங்கள் எண்ணப்படியே தாங்களுஞ் சொன்னீர்கள் அதுபோ லிந்தஷணமே மணமுடிப்போம்'' என்றான்.

அவர்களும் சம்மதித்து ஒரு சுபதினத்தை நிச்சயித்துத் தருமசீலன் தந்தையிடஞ் சென்று, சமாசாரத்தைத் தெரிவித்தனர். பின்குணபதீச்சுரன் விவாகத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைச்செய்து தன் இஷ்டஜன பந்துமித்திரர் சகலரையும் வரவழைத்துச் சுபதினத்தில் வேத வேதியர்களால் ஓமாக்கினி வளர்த்து மேளவாத்தியங்கள் சப்திக்க மங்கல முரசொலிக்க, தருமசீலனுக்கும், பங்கஜவல்லிக்கும் திருமணஞ் செய்வித்து, வேதியர் முதலானவர்களுக்குப் பூ தானம், அன்னதானம், வஸ்திரதானம், முதலியன வழங்கிச் சுற்றத்தார்களுக்கு அறுசுவைப் பதார்த்தங்களுடன் அமுதளித்துத் தாம்பூலம், சந்தனம், புஷ்பம் முதலானவைகளா லுபசரித்துச் சந்தோஷமடைந்தார்கள்.

இப்படி மணமுடிந்தபின் பங்கஜவல்லியின் மாமன் மகன் காந்திமதிநாதன் தருமசீலனுக்கும் பங்கஜவல்லிக்கும் நடந்த மணக்கோலத்தைக்கண்டு மனக்கிலேசமுற்று என்னுது மெண்ணி ஏக்கமுற்று யோசிக்கிறான்:—பங்கஜவல்லியை எனக்கே மணஞ்செய்து கொடுப்பார்களென்று எண்ணியிருந்தேன். என் எண்ணம் பலியாமற் போய்விட்டதே! நமக்கு அப்பெண் கிடைக்காததற்குக் காரணம் இந்தத் தருமசீலனேயன்றோ? இவனைக்

கொன்று இவன் எனக்குச் செய்த பழியைத் தீர்த்துக் கொள்கிறேன்'' என்றெண்ணிக் கையில் ஒரு கத்தியை மறைத்து வைத்துக்கொண்டு சென்று தருமசீலனது மாளிகை வாசலருகில் இன்னாரெனத் தெரியாமல் உரு மாறி நின்று அவன் எப்போது வெளியில் வருவானோ அந்த க்ஷணமே அவனைக் கத்தியால் ஒரே வீச்சாய் வீசி விடுகிறதென்று தீர்மானித்துச் சூரியாஸ்தமனம் வரை யில் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

தருமசீலன் வெளியில் வரவில்லை. அதனால் அவன் "இனி அவனைக் கொல்வதெப்படி?'' என்று பலவிதமாய் யோசித்து மனக்கிலேச முற்றிருக்கையில் அநேகம் பேர் உள்ளே போவதும் வருவதுமா யிருப்பதைப் பார்த்துத் தானுமவர்களுடன் ஏதோ காரியார்த்தமாய்ச் செல்பவ வன்போ லுட்புகுந்து அவர்களது சயனயறையிலொரு பக்கம் பதுங்கிக்கொண் டிருந்தான்.

இவன் இவ்விதமாயிருக்க, இரவு ஜாமத்திற்குமேல் தருமசீலன் போஜன முடித்துக்கொண்டு சயனயறைக் குள் வந்து கட்டிலின்மீ துட்கார்ந்தான். அங்கே பங் கஜவல்லி வந்து வெற்றிலை பாக்குக் கொண்டுவந்து வைத்தாள். தருமசீலன் அவளைப் பார்த்து, "பெண்ணே! உனது மாமன் மகன் காந்திமதிநாதன் என்ன செய்து கொண்டிருக்கிறான்? அவனுக்கு விவாகமாயிற்றா? அவ னுடைய நிலைமை என்ன?'' என்று வினவினான். அம் மங்கை "நாதா, என் மாமன் மகன் நினைவு தங்களுக்குண் டாகிக் கேட்டபடியால் சொல்லுகின்றேன்:—அவருக்கு என்னை மணஞ் செய்துகொடுக்க என் தாயார் எண்ணி

இருந்தாள். அவருடைய தந்தையார் அவருக்குக் கல்வி பயில்விக்கவில்லை. கல்வி கற்காததினாலே அவருக்கு மூர்க்க குணத்தோடு துஷ்ட சகவாசமு மதிகரித்து விட்டன. அதனால் அவரை மணந்துகொள்ள நான் விரும்பவில்லை. அவருக்கோ இன்னும் விவாகம் முடியவில்லை. அவர் தங்கள் தாய் தந்தையருக்குக் கீழ்ப்படிந்து நடக்கவுமில்லை. நாமாவது குணவதியான ஒரு பெண்ணை அவருக்கு மணஞ் செய்விக்க வேண்டும்" என்றாள்.

தருமசீலன் காந்திமதி நாதனுடைய விஷயத்திற் பச்சாத்தாபப்பட்டு, "உனக்கு அவன் விஷயத்தில் அவ்வளவு எண்ணமிருக்கும் பட்சத்தில் நாளையே அவனை அழைத்து வந்து சற்குணவதியான பெண்ணை விவாக முடிப்பித்து நம்மிடத்தே வைத்திருந்து நன்னீதிகள் புகட்டி அவனை நல்ல நிலைமைக்குக் கொண்டுவர வேண்டும்" என்றான்.

இவைகளை யெல்லாம் கேட்டுக்கொண்டு கட்டிலின் கீழே பதுங்கியிருந்த காந்திமதிநாதன் எழுந்து, கையிலிருந்த வாளை எறிந்துவிட்டு, சாஷ்டாங்கமாக அவர்கள் காலில் வீழ்ந்து பணிந்து "என்னையீன்ற தாய் தந்தையர்களே! உங்களுக்கிடையூறெண்ணிய என்மீது இவ்வளவு இரக்கங் கொண்டீர்களே! உங்கள் பெருந்தன்மை மெச்சத்தக்கதே" என்று கூறித் தான் செய்யத் துணிந்த குற்றத்தையும் அதன் காரணத்தையும் தெரிவித்துப் பொறுத்துக் கொள்ளும்படி அவர்களைப் பலவாறு வேண்டிக்கொண்டான்.

இவைகளைக் கேட்ட அவர்களிருவரும் அவனை மன்னித்தனுப்பிவிட்டுப் பின் சில நாட்களுக்குள் நல்ல குணவதியான பெண்ணைத் தேடி. விவாகஞ்செய்வித்து அவனுக்கு நற்புத்திபுகட்டி அவனை நல்ல வழியில் திருப்பினார்கள். அவனும் அவர்களைத் தெய்வமாகப் பாவித்து அவர்கள் வார்த்தைக்கடங்கி அவர்கள் காலாலிடும் வேலையைத் தலையாற் செய்து நல்ல நிலைமையை அடைந்திருந்தான்.

பங்கஜவல்லி,

" கை நிறைந்த பொன்னைப் பார்க்கிலுங்
கண் நிறைந்த கணவனே மேல் "

என்றபடி தன் கணவனைத் தனக்குத் தெய்வமாகக் கொண்டு அவனிஷ்டப்படி நடந்து வந்தாள்.

தருமசீலனுக்குக் கற்பூரசுந்தர மென்றொரு ஆப்த மித்திரனுண்டல்லவா? தருமசீலன் அவனை இப்போதும் மறவாமல் அவனிடம் தலையன்பு பாராட்டி வந்தான். அவனுக்கு அவன் தந்தை மணஞ்செய்யத் தன் மனைவியுடன் ஆலோசித்தான்.

அவள்,

' கையில் வெண்ணெயை வைத்துக் கொண்டு
நெய்க்கு அலைவாருண்டோ ?'

நம்மிடத்தில் இரத்தினத்துக்குச் சமானமான பெண்ணிருக்க, ஏன் பெண் தேடுகிறீர்கள் ?" என்று சொல்ல

அவன், "பெண் எங்கே யிருக்கிறது?. எனக்குத் தெரிய வில்லையே" என்றான். அவள், "புருஷர்களுக்குச் சமயத்தில் என்ன யோசனை தெரியும்? மனைவியின் மேல் குற்றம் சொல்லவும் அடிக்கவுந்தான் தெரியும். அகமுடையாள் கஷ்டப்பட்டு ஐந்துஞ் சேர்த்து அடுப்புக் கூட்டிப் பொங்கிப் போட்டால் நன்றாய்ச் சாப்பிடுவார்கள். வேறென்ன தெரியும்? நமது பையனுக்குப் பெண்ணா பார்க்க வேண்டும்? எங்கே பார்க்கப் போகிறீர்கள்? நன்றாயிருக்கிறது. எனது தமையன் ஜெயவீர சிங்கனுடைய பெண் கல்யாணி இருக்கின்றாளே நினைவில்லையா? அவளிருக்க, வேறு பெண்ணை எங்கே தேடப் போகிறீர்கள்? நாளையே என் தமையனுக்குச் சொல்லி அனுப்பினால் பெண்ணை அழைத்துக் கொண்டுவந்து கலியாணம் செய்து கொடுத்து விட்டுப் போகிறார். அந்தப் பெண் தான் நமக்கேற்ற பெண்,

'இனம் இனத் தோடே'

என்றபடி நாம் என்ன சொன்னாலும் பொறுத்துக் கொண்டு நம்மையே சார்ந்திருப்பாள். வேறொருத்தி நமக்கு மருகியாக வருவாளே யானால் நமது மனம்போல் நடப்பாளா? ஆதலால் இப்பொழுதே முகூர்த்த நாளை நிச்சயப்படுத்தி அதற்கு வேண்டிய ஏற்பாட்டைச் செய்யுங்கள்" என்று சொன்னாள்.

இதைக்கேட்ட நாயகன், "நம்முடைய புதல்வன்,

அறிவிற் சிறந்தவன், ஆண்மையி லுயர்ந்தவன்,
கல்வியிற் றேர்ந்தவன்; கற்றவர்க் குத்தமன்!

அவனுக்கு அப்பெண்ணை மணஞ்செய்விப்பது தகுதி யன்று. அவளுடைய நடத்தைக்கும் நம் புதல் வனுடைய குணத்துக்கும் பொருத்தமில்லை. அப்பெண் உறவென்பதை நினைத்து ஆசைப்படாதே. நமக்கு வேண் டாம்'' என்று சொன்னான். அதைக்கேட்ட அவன் மனைவி மகாகோபங்கொண்டு படபடப்புடன் "என்ன வார்த்தை சொன்னீர்? அவளிடம் என்ன குற்றமிருக் கிறது?—

"அவள்—அலங்காரக்காரி! அதிசமர்த்தி!!
மேன்மையிற் சிறந்தவள்! மேம்பாடுடையவள்!
மங்கையிற் சிறந்தவள்; மதியில் நிரைந்தவள்
நமதந்தஸ்துக்கு உகந்தவள்.

"அவள், மிகச் செல்வமாய் வளர்ந்தவளாகையால் தாய் வீட்டில் விளையாட்டுத்தனமா யிருக்கின்றாள். நீங் கள் ஒன்றும் ஆட்சேபனை சொல்லாமல் அவளையே மணஞ் செய்வியுங்கள். நான் சொல்வதை மறுக்காதே யுங்கள்'' என்றாள். அவன் "அடிபேதாய்!

'பெண்புத்தி பின்புத்தி'

என்றபடி உன் அறிவுக்குத் தோன்றியதையே நீ மூர்க்க மாய்ப் பேசுகிறாய்!

'விளையும் பயிர் முளையிலே தெரியும்'

என்றபடி அவளுடைய குணங்களைச் சிறு பிராயத்தி லிருந்து நீயும் நானும் அறிந்திருக்கிறோம். நமது குடும்

பத்துக்கு அவள் தகுதியானவளல்ல. என் வார்த்தை யைத் தட்டாதே. மனத்தில் தோன்றுவதையே மூர்க்க மாய்ப் பேசாதே.

'தனக்கு வெகுபுத்தியுண் டாயினும் வேறொருவர்
தம்புத்தி கேட்கவேண்டும்
தானதிக ஞானியாயினுங் கூடவே
தளசே கரங்கள் வேண்டும்
கனக்கின்ற வித்வானாயினுந் தன்னினுங்
கற்றோரை நத்தவேண்டும்
காசினியை யொருகுடையி லாண்டாலும் வாசலிற்
கருத்துள்ள மந்திரிவேண்டும்
தொனிக்கின்ற சங்கீத சாமர்த்தியனாயினுஞ்
சுதிகூட்ட வொருவன் வேண்டுஞ்
சுடர் விளக்காயினும் நன்றாய் விளங்கிடத்
தூண்டுகோ லொன்று வேண்டும்'

என்றபடி உன் மனத்துக்குள் நீ பெரிய சாமர்த்தியசாலி யென்று நினைத்துக்கொண் டிருந்தாலும் என் வார்த்தை யைக் கொஞ்சங்கேள். அப்பெண்ணை நம் புதல்வனுக்கு மணஞ் செய்வித்தால் அவர்கள் ஒற்றுமையுடனிருந்து இல்லறம் நடத்துவது கஷ்டம். ஆனபடியால் அவள் நமக்கு வேண்டாம். அவ்வெண்ணத்தை மறந்து விடு'' என்று சொன்னான்.

மனைவி "அவள் என்ன இழி குலத்திலே ஜனித்த வளா? அல்லது தாசி வேசி வயிற்றுப் பெண்ணா? தங் கள் குலத்தைவிட அவர்கள் குலம் இழிவா? அப்படி

யானால் என்னையேன் தாங்கள் மணந்து கொண்டீர்கள்? தங்களுக்குக் கொஞ்சம் ஐவேஜி உண்டாய்விட்டதினால் தாங்கள் உயர் குலத்தவர்களாய் விட்டீர்களா? ஏன் எனது தமையன் புதல்வியை நிராகரிக்க வேண்டும்? அப் பெண்ணையே விவாகம் முடித்தாலாயிற்று; இல்லாவிட்டால் நானிதோ குளத்திலோ, ஆற்றிலோ, வன்கொலையாகவோ உயிரை மாய்த்துக் கொள்கிறேன். நானிருக்கும் வரையில் வேறொருத்தி வந்து இந்த வீட்டை ஆளுவாளா?'' என்று ஒரே மூர்க்கமாய்ச் சொன்னாள். கணவன் சினந்து “ அடீ!

‘ குலத்தைக் கெடுக்கவந்த கோடு நீலி ’

‘ மங்கை கைகேசி சொற்கேட்டு மன்னர்புகழ் தசரதனும்
மரண மானான்
செங்கைமலச் சீதை சொல்லை ஸ்ரீராமன் கேட்டவுடன்
சென்றான் மான்பின்
தங்கையவள் சொற்கேட்ட இராவணனும் கிளையோடு
தானு மாண்டான்
மங்கையர்சொற் கேட்பதெல்லாம் கேடுவரும் பேருலகோர்
நகைப்பர் தாமே ’

என்றபடி உன் சொல்லைக்கேட்டு அப்பெண்ணை நம் புதல்வனுக்கு மணஞ்செய்தாற் கேடுவரும். எனக்குச் சிறிதும் திருப்தியில்லை. நீ இவ்விஷயத்தில் ஒரே பிடிவாதமாயிராதே. நம் புதல்வன் கற்பூரசுந்தரத்தினுடைய அபிப்பிராயம் தெரிந்து திருமணத்தை அவனிஷ்டம் போல் நடத்து '' என்று கோபத்துடன் சொன்னான்.

அதைக்கேட்ட மனைவி மகா குதூகலத்துடன் நாதா, "என்மீது வருத்தமடையவேண்டாம்" என்று முகஸ்துதியாய்ச் சொல்லி மகனை ஒரு நிமிஷத்தில் சமாதானப்படுத்தி விடலாமென்று நினைத்துக்கொண்டு தன் புதல்வனை அழைத்து "அப்பா மகனே, உனக்கு நான், உன் மாமன் மகள் கல்யாணியை மணஞ் செய்விக்க விரும்புகிறேன். அவள்,

அறிவிற்சிறந்தவள்! அழகிலுயர்ந்தவள்!

நமது குலத்திலுதித்தவள்! நல்ல குணமுடையவள்!

ஆதலால் அவளையே உனக்கு மணஞ்செய்விக்க நானும் உன் தந்தையும் நிச்சயித்துள்ளோம்" என்றாள்.

கற்பூரசுந்தரம் "அம்மா! அவள் நமது குலத்துக் குதவுவளா? மகாதுர்க்குணம் படைத்தவளாயிற்றே! நான் அவளை அறியேனா? அத்தன்மையளைத் தாங்க ளிவ்வளவு உயர்வாய்ச் சொல்லலாமா?

'கடனீர் மிகுந்தென்ன ஓதிதான் பெருத்தென்ன
காட்டிலவு மலர்ந்தென்ன
கருவேல் பழுத்தென்ன நாய்பால் சுரந்தென்ன
கானின்மழை பெய்து மென்ன
அடர்கழுதை லத்தி நிலமெல்லாங் குவிந்தென்ன
அரியகுண மில்லாத பெண்
அழகா யிருந்தென்ன ஆஸ்தான கோழைபல
அரிய நூலோதி யென்ன

திடமினிய பூதம் வெகு பொன்காத் திருந்தென்ன
திறன் மிகுங் கரடி மயிர்தான்
செறிவாகி நீண்டென்ன வஸ்த்ரபூ ஷணமெலாஞ்
சித்திரத் துற்றுமென்ன
மடமிகுந் தெவருக்கு முபகார மில்லாத
வம்பர் வாழ்வுக்கு நிகராம்'

என்று பெரியார் கூறியுள்ளபடி அவற்றை ஒருவரும் விரும்பார். எட்டிப்பழம் பழுத்து அழகாயிருக்கிறது. அதனருகில் செல்வாருண்டோ? குணத்தில் பிரயோஜன மில்லாத பெண் எவ்வளவு வடிவமுடையவளா யிருந்தாலும் பயனென்ன?

'தெய்வந்தொழாஅள் கொழுநற்றொழு தெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை'

என்று தமிழ்வேதம் கூறுகிறபடி கணவனைத் தெய்வமாகப் பாவித்து அவனுடைய எண்ணத்திற்கு மாறுதலின்றி நடப்பவளே, கணவன் மனத்தைக் களிப்பிக்குங் காதலி.

'இல்லா ளகத்திருக்க இல்லாத தொன்றில்லை
யில்லாளு மில்லாளே யாமாகில்—இல்லாள்
வலிகிடந்த மாற்ற முரைக்குமே லவ்வில்
புலிகிடந்த தூறாய் விடும்'

என்று நீதிநூல் போதிக்கிறபடி மனைவி கடுஞ்சொற்களை வழங்காதவளாயும் உத்தம குணத்திற் சிறந்த குணவதியாயும் மாமன், மாமி, கொழுநன் முதலான பெரியோர்

களுக்கு அடங்கி நடப்பவளாயும் பிறர் முகம் பாராமல் அன்னிய புருஷர்களைச் சகோதரர்களாகப் பாவிப்பவளாகவும் இருக்கவேண்டும். அத்தகைய மங்கையை மணமுடிக்க வேண்டுமே தவிர, குலம், தனம், வடிவம் இவற்றிற்காசைப்பட்டுக் குணத்தைப் பெரிதா யெண்ணுமல் பலத்தைப் பெரிதாயெண்ணிப் பெண்ணைக் கொள்பவன் பேயனே யாவன். அஃதன்றியும் அம்மங்கையும் அவளை மணந்தவனும் ஒற்றுமையில்லாமல் எந்தநேரமுங் கலகம் விளைவித்துக்கொண்டு சங்கடமடைவார்கள். அம்மணி உலகத்தில் கணவனது வருவாயையும் அவனது சௌகரியத்தையும் குடும்ப நிலைமையையும் தெரிந்து கொள்ளாத துஷ்டப் பெண்களை மணந்து நாடோறுங் கவலையிலாழ்ந்து துன்புறவோர் பலர். நாயகனது கோபாவேசத்தையும் தனது இங்கித மொழிகளால் சாந்தப்படுத்தி அவனுடைய எண்ணத்துக்கு மாறுதலின்றி இஷ்டம் போல் பணிந்து நடக்கும் பெண்மணிகளே சிறந்தவர்களாவார்கள். அந்த ஓர் உத்தமகுண மங்கையின் சரிதையைச் சொல்லுகிறேன் கேள்—

## அத்தியாயம் 3

விசிட்டாபுர மென்னும் ஓர் ஊரில் தருமசிந்தையுள்ள ஓர் அரசனும் அவன் மனைவியும் அன்யோந்யமாய் இல்லறம் நடத்திவரும் நாளில், அவர்களது தவப்பேற்றினல் அவர்களுக்கு ஒரு புத்திரி பிறந்தாள். அந்தப் பெண்ணுக்கு முப்பத்திரண்டு இலக்ஷணங்களும் அமைந்திருந்தன. அவள் நாளொருமேனியும் பொழு

தொரு வண்ணமுமாக வளர்ந்து கன்னிப்பருவம் நீங்கிப் பெதும்பைப் பருவம் அடைந்திருந்தாள். அவள் தாயும் தந்தையும் அப்பெண்ணைக் கண்டு அதிக சந்தோஷங் கொண்டு நம் புதல்விக்கு உத்தமமான ஒரு கணவனை மணஞ்செய்விக்க வேண்டுமென் றெண்ணங்கொண் டிருந் தார்கள். அப்பொழுது சாளுவ தேசத்திலிருந்து தவ சிரேஷ்டரான ஒருவர் இவர்கள் கிரகத்திற்கு வந்தார். அவர்களிருவரும் அவரை வணங்கி வேண்டிய உபசாரஞ் செய்து, "சுவாமி! அடியேங்களுடைய புதல்விக்குத் திரு மணஞ்செய்விக்க நிச்சயித்திருக்கிறோம். நீங்கள் கைக் கொள்ள வேண்டும்" என்று தங்கள் புதல்வியை அழைத்து நமஸ்கரிக்கும்படி செய்தார்கள். தவச் சிரேஷ்டர் அப்பெண்ணை மணந்துகொள்ளச் சம்மதித் தார். விவாகமுடிந்தபின் அவர் சில நாளங்கிருந்து தமது நாயகியைப் பார்த்து, "பெண்ணே! நான் கானகத்திற் சென்று தவஞ்செய்து வருகிறேன். நீ இங்கிரு" என்று சொல்ல, மனைவி "சுவாமி! தாங்கள் சொல்லும் வார்த்தை நன்றாயிருக்கிறது. உடலை விட்டு உயிர் தனித்து இருக்க முடியுமா? அதுபோல் நான் தங்களைவிட்டுத் தனித் திருப்பேனா? தங்களுடன் நானுங்கூட வருகின்றேன்" என்று சொல்ல, அவர் "பெண்ணே! நீ கூட வருவதில் ஒன்றும் ஆட்சேபணையில்லை. நீயோ இராஜ புத்திரி; செல்வமாய் வளர்ந்தவள்; பால் பழங்களுடன் புசித்த வள்; அநேகம் தாதிகளால் எந்த நேரமும் உபசரிக்கப் படுபவள்; பஞ்சணையில் சயனித்திருந்தவள்; என்னுடன் ஆரண்யத்திற்கு வந்தால் உனக்குச் சுகமான உணவு கிடைக்கமாட்டாது. சயனிக்கப் பஞ்சணையில்லை; உப

சரிக்கத் தாதிகளில்லை; காய்கனி கிழங்குகள் அருந்த வேண்டும்; புற்றரையில் சயனிக்கவேண்டும்; துஷ்ட மிருகங்களுடன் தனித்திருக்க வேண்டும்; இத்தகைய சங்கடங்களை யெல்லாம் நீ பொறுக்கமாட்டாய். ஆகை யால் நீ இங்கே தானே இரு'' என்று சொல்ல, அவள் “நாதா! தாங்களிவ்வா றுரைப்பது தருமமா? தங்களைப் பார்க்கிலும் நான் உயர்ந்தவளா? தங்க ளுடைய பாதபூஜையே எனக்குச் சுகிர்தந் தருவது. தங்க ளுடைய உச்சிஷ்டமே எனக்குத்தேவாமிர்தம்.நான் தங்க ளுடன் கானகத்திற்கு வந்தால் தேவரீருக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்யவும் காய்கனி கிழங்குகளைச் சேகரித்து வைக்கவும் சித்தமாயிருப்பேன். ஆகையால் என்மீது கிருபைகூர்ந்து தடைசெய்யாமல் அடியாளை யும் அழைத்துச் செல்லவேண்டும்'' என்று சொன்னாள்.

தவச் சிரேஷ்டர் “இவளோ மகா உத்தமியாகத் தோன்றுகின்றாள். இவளை இன்னமும் பார்ப்போம்'' என்று நினைத்துத் தாய் தந்தையரிடம் அநுமதிபெற்று வரும்படிசெய்து அவளுடன் பிரயாணமாகி நாடுநகரங் கடந்து ஆரண்யஞ்சென்று ஒரு பர்னசாலை அமைத்துக் கொண்டு அதிலிருந்து தவஞ் செய்துகொண் டிருந்தார். மனைவியும் அவரது சமயமறிந்து வேண்டிய உபசாரங் கள்செய்து காய்கனி கிழங்குகளைச் சித்தப்படுத்தித் தேனுடன் கலந்து கணவருக் களித்து அவர் அருந்தி யிருந்த சேஷத்தைத் தான் அருந்தியும் இன்னும் வேண் டிய பணிவிடைகளைக் குறைவின்றிச் செய்தும் வந்தாள். தவசிரேஷ்டர் அவளது கற்பை உலகத்தார்க்கு அறிவிக்

கத் திருவுளங் கொண்டார். பின் நாளுக்கு நாள் அவருடைய தேகங்குன்றியது. அவருக்கு ஈழை, இருமல், இளைப்புகள் உண்டாயின. உணவருந்தும்போதே அருவருக்கத் தக்கபடி பரிகலத்தில் அவர் எச்சலுமிழத் தலைப்பட்டார். அதை அவள் கொஞ்சமேனும் அருவருப் பில்லாமல் அமிர்தமா யெண்ணிச் சாப்பிட்டு வந்தாள். அம் முனிவருக்கு இன்னு மதிகமாகத் தேகமெல்லாம் பெருவியாதிகண்டு சீழ் வடிந்து இரத்தம் பெருகியது. கைகால் முதலிய அவயவங்க ளெல்லாம் உருக்குலைந்து போயின. அவர் பார்ப்போர் அருவருக்கும்படியான நிலையை யடைந்தார். அவர், தம் மனைவி விருப்புற்றுச் செய்யுங் காரியங்களை வெறுத்தும் அவள் இன்சொற்களுக்குக் கடுஞ் சொற்கள் வழங்குவதுமாகவே இருந்துவந்தார். அவர் எவ்வளவு கொடூரச் சொற்களை வசனித்தாலும் அதை வேதவாக்கியமாகக் கொண்டு அவருக்கிணங்கிச் செய்யும் பணிவிடைகளைக் குறைவின்றி அவள் நடத்தி வந்தாள்.

இவ்வாறிருக்கையில் ஒரு நாள் மனைவியை நோக்கிப் "பெண்ணே! என் மனதிலோர் எண்ணமிருக்கிறது; அவ்வெண்ணத்தை நிறைவேற்றுவாயா?" என, பெண்மணி "நாதா! உமது மனக்கருத்தை வெளியிட்டால் அதுபோல் நடக்கச் சித்தமுள்ளவளா யிருக்கிறேன்" என்றாள். அவர், "பெண்ணே! இவ்வாரண்ணியத்திற் கடுத்த நகரத்தின்கண் இராஜவீதியில் சௌந்தரியமுள்ள பெண் ஒருத்தி இருக்கிறாள். அப்பெண்ணை நானடைய விரும்புகிறேன். அதற்குபாய மெப்படி?" என்றார். மனைவி "நாதா! உங்கள் சித்தம் அடியாள்

பாக்கியம்! இஷ்டம்போல் நடக்கச் சித்தமுள்ளவளாய் இருக்கின்றேன்" என்று சொல்லி, அவருக்கு வேண்டிய பணிவிடைகளை யெல்லாம் செய்து முடித்தாள்; பின்பு அன்று இரவு சென்றவுடன் சூரியோதயத்துக்கு நான்கு நாழிகை முன்பே எழுந்து தனது கணவன் சொன்ன அடையாளமுள்ள வீட்டைக் கண்டு அது ஒரு பரத்தையரின் கிரகமாயிருப்பதை அறிந்து உட்புக யத்தனித்தாள்; கதவு தாளிட்டிருக்கவே, அவ் வீட்டுவாசற் றிண்ணை முதலியவற்றைப் பெருக்கிச் சாணமிட்டு மெழுகித் திவ்விய அலங்காரத்துடன் கோலங்கள் அமைத்தாள்; அப்பால் சூரியோதயமாகு முன் தனது பர்த்தாவிடம் சென்று அவருக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்துகொண் டிருந்தாள்.

இவ்வாறு அநேக நாள் பணிவிடை செய்தாள். தாசி தினந்தோறும் எழுந்ததும் வெளியில் வந்து பார்த்து ஆச்சரியமடைந்து "நமது கிரகத்தில் நம்மை யறியாமல் இவ்வளவு பணிவிடைகளைச் செய்து கோலமிட்டு அலங்காரஞ் செய்பவர் யாரோ? அவர்கள் இன்னாரென்று தெரியவில்லையே! எவ்வழியிலும் அவர்களைக் கண்டு பிடித்து, அவர்களுக்கு வேண்டிய மரியாதை செய்யவேண்டும்" என்று எண்ணிக்கொண்டு ஒரு நாள் இரவு முழுவதும் நித்திரை செய்யாமல் தாதிமார்களுடன் விழித்துக் கொண்டிருந்தாள். ரிஷிபத்தினியும் வழக்கம் போல் வந்து பெருக்கி மெழுகிக் கோலமிட்டாள். தாதிகள் கண்டு தன் எஜமானியிடம் சொல்ல, அவள் அதி சீக்கிரமாய் வெளியில் வந்து, கோலமிட்டுக் கொண்டிருக்

கும் மங்கையின் காலில் வீழ்ந்து "அம்மணீ! தங்களைப் பார்த்தால் இராஜ புதல்வியாகவும் அஷ்டலட்சுமிகளில் ஒருவளைப்போன்ற தேசோரூப முடையவராகவு மிருக் கின்றீர்கள். கேவலம் தாசித் தொழில் புரிந்து ஜீவனம் செய்யும் நாயினுங்கடையாளாகிய அடியாளுடைய கிர கத்தில் வந்து இத்தகைய பணிவிடைகளைச் செய்வது தகுமா? நான் சண்டாளி யானேனே! அம்மணி! ஏன் இத்தகைய தகாத காரியங்களைச் செய்ய வேண்டும்?" என்று வெகு விநயத்துடன் கேட்டாள். ரிஷிபத்தினி, "என் மனதிலோர் அவா இருக்கின்றது. அதை நிறை வேற்றுவதாக வாக்களித்தால் நான் என் எண்ணத்தைத் விக்கிறேன்" என்றாள்.

தாசி "அம்மணி, தங்களுடைய வார்த்தைக்கு மறு வார்த்தை யுண்டோ? தங்கள் சித்தம் எதுவோ அதுவே என் பாக்கியம். தங்கள் மனோரதத்தை யீடேற்றச் சித்த முள்ளவளா யிருக்கின்றேன். தங்கள் எண்ணத்தை வெளியிட வேண்டும்" என்று வெகு விநயத்துடன் கேட்டாள். ரிஷிபத்தினி "எனதருமை நேசியே கேள். எனது கணவர் கானகத்தில் தவஞ் செய்கிறார். அவ ருக்குப் பெருவியாதி யுண்டாய்த் தேகம் கெட்டுக் கை கால் முதலிய அவயவங்களெல்லாம் உருக்குலைந்துள்ளன. அவர் நடக்கச் சக்தியில்லாம லிருக்கிறார். ஈளை, இருமல், காசம் முதலிய வியாதிகளாலும் அவர் அவஸ்தை யடை கின்றார். அவர் இந்நிலைமையில் உன்னை யடைய விரும்பு கின்றார். அந்த என் நாதருடைய எண்ணத்தைப் பூர்த்தி செய்விக்கவேண்டும்" என்றாள்.

தாஸி "அம்மணி! தங்களைப் பார்த்தால் மகாலட்சுமிபோ லிருக்கிறீர்கள். தாங்களே அவரை மணந்து வாழ்ந்துவரும் போது நான் என்ன ஆட்சேபனை சொல்லப் போகின்றேன். அந்நாயகர் எனக்குக் கிடைத்தால் அதை நான் பாக்யமாகக் கருதுவேன். தாங்களிவ் வார்த்தை சொல்லி அதன்படி நடக்க நான் என்ன தவஞ் செய்தேனோ? ஆகையால் அவரை அழைத்துக்கொண்டு வாருங்கள். தங்கள் அபிப்பிராயம்போல் நடக்கச் சித்தமுள்ளவளா யிருக்கின்றேன்" என்று வேண்டிய உபசாரத்துடன் சொல்லி அனுப்பிவிட்டுத் தன் அலுவலைக் கவனிக்கலானாள்.

ரிஷிபத்தினி சூரியோதயமாகுமுன் தன் நாயகனிடத்துக்கு வந்து அவருக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்து அவரை வெந்நீரில் ஸ்நானம் செய்வித்து சீழ் இரத்தம் முதலானவைகளை அருவருப்பின்றித் துடைத்துவிட்டு அவருக்கு வேண்டிய ஆகாராதிகளைச் சித்தப்படுத்தி, அவர் புசித்து மிகுந்த சேஷத்தைத் தான் புசித்து அவரை உபசரித்துக் கொண்டிருந்து சமயம் பார்த்து மெதுவாய்,தாசி சம்மதங்கந்ததை அறிவித்தாள்; பிறகு அன்று மாலையில் ஒரு கூடையில் தன் பட்டுச் சேலையை மெத்தைக்கு ஒப்பாக விரித்து அவரை அதில் தூக்கிவைத்துத் தன் தலையின்மீது எடுத்துக் கொண்டு தாசியின் கிரகத்துக்குச் சென்று கூடையை இறக்கித் தாசியின் முன் வாசலில் வைத்து அவளை அழைத்தாள். தவசிரேஷ்டர் மனைவியை நோக்கி "இனி நீ சென்று சூரியோதய மாகுமுன் இவ்விடம் வந்து என்னை

எடுத்துச் செல்வாய்'' என்று சொல்ல, அந்த உத்தமி அவ்வார்த்தைக் கிணங்கி உடனே ஆச்சிரமத்துக்குச் சென்றாள்.

அப்பால் தவசிரேஷ்டர் பதினெண்பிராய வாலிப வடிவங் கொண்டார். அவரைப் பார்த்த தாசி, என்று மடையாத சந்தோஷங் கொண்டு அவருக்குக் கைலாகு கொடுத்து வீட்டிற்குள் அழைத்துச் சென்று திவ்யா சனத்தில் உட்காரும்படி செய்து செய்யவேண்டிய உப சாரங்களைக் குறைவறச் செய்து அவரை மகிழ்வித்தாள். சூரியோதயமாகுமுன் தவசிரேஷ்டர் எழுந்து வெளியில் வந்து தாசியை அழைத்துக் கதவை தாளிட்டுக் கொள் ளும்படி செய்து பழைய நிலைமைப்படிப் பெருவியாதி யுடையவராய்க் கூடையி லுட்கார்ந்து கொண்டார் முன்னமே வாசலில் வந்து காத்துக் கொண்டிருந்த அவர் மனைவி அவரை எடுத்துக்கொண்டு வீட்டிற்குச் சென்று கூடையை விட்டிறக்கி வழக்கப்படி உபசாரங்கள் செய்து உணவளித்தாள். நாடோறும் இப்படியே நடந்து வந்தது.

இப்படி யிருக்கையில், அவ்வூர் அரசன் பொக்கி ஷத்தில் சில திருடர்கள் புகுந்து திருடினார்கள். அப் போது அவர்களுடைய அரவங்கேட்டுக் காவலாளிகள் விழித்துக் கொள்ளவே திருடர்கள் ஓட்டம் பிடித்தார் கள். அவர்களைக் காவலாளிகள் பின்தொடர்ந்து ஓடி னார்கள். திருடர்கள் "இனி நாம் சென்றால் காவலாளி கள் நம்மைப் பிடித்து விடுவார்கள். ஆதலால் இனி நாம் நெடுந்தூரம் செல்வது தகுதியன்று'' என வெண்ணி

அங்குத் தவம் செய்துகொண்டிருந்த மாண்டவிய ரிஷியின் பர்னசாலைக்குட் புகுந்து மறைந்தார்கள். காவலாளிகள் பர்னசாலைக்குட் புகுந்து திருடர்கள் பதுங்கியிருப்பதைக் கண்டுபிடித்து ஒவ்வொருவரையும் பின்கட்டாகக்கட்டிப் பிடித்துக்கொண்டதுமல்லாமல் விழித்த கண் விழித்தபடி தம்மையே மறந்து தவம்புரியும் ரிஷியையும் "இவனே திருடர்களுக்கெல்லாம் தலைமையானவன்; திருடர்களை மறைத்து வைத்துக்கொண்டு தவஞ் செய்வதுபோல் பாசாங்கு செய்கிறான். இவனையும் சேர்த்துக்கட்டி நமது இராஜனிடம் கொண்டுபோக வேண்டும்" என்று தீர்மானித்து அவரையும் பிடித்துக் கட்டி அரசனிடம் கொண்டுபோய் விட்டார்கள்.

அரசன் திருடர்களையெல்லாம் பார்த்து அவரவர்களுக்குத் தகுந்த தண்டனை விதித்தான்; தவசிரேஷ்டரைப் பார்த்து, "இந்த மகானுபாவர் யாவர்? இவரை ஏன் கொண்டு வந்தீர்கள்?" என்று காவலாளிகளை வினவ, அவர்கள், "வேந்தே! இவரே திருடர்களுக்கெல்லாம் தலைமையானவர். திருடர்களைத் தமது ஆச்ரமத்தில் மறைத்து வைத்துக்கொண்டு இவர் தவம் செய்வதுபோல் உட்கார்ந்திருந்தார்" என்று சொல்ல, அரசன் தீரவிசாரியாமல் அவரைக் கழுவிற்போடும்படி உத்தரவளித்தான். தலையாரிகள் அவ்வண்ணமே அவரைக் கழுவில் ஏற்றிவிட்டார்கள். அவரோ கழுவிலிருக்குந் துன்பத்தையுங் கவனியாமல் நிஷ்டையிலேயே யிருந்தார்.

இது இவ்வண்ணமிருக்க, தன் நாயகனைக் கூடையில் வைத்துத் தாசி இல்லத்துக் கெடுத்தேகும் ரிஷி

பத்தினி வழக்கம்போல் கூடையைத் தலைமீதெடுத்துக் கொண்டு போய் வரும்வழியில் தவசிரேஷ்டராகிய அந்த மாண்டவியர் காலில் இவளது தலையிலிருக்கும் கூடை பட்டது. அதனால் அவருக்கு நிஷ்டை கலைந்து இம்சையுண்டாயது. உடனே அவர் "எனது காலில் பட்டு என்னை வருத்தப்படுத்தினவன் சூரியோதயமான வுடன் மரணமடையக்கடவன்!" என்று சபித்தார். இதைக்கேட்ட ரிஷிபத்தினி மனம் பொறாதவளாய் "தற்செயலாய் நேர்ந்த இடஞ்சலுக்கு இப்படிச் சினங் கொண்டு சபித்தது நியாயமல்லவாகையினால் அந்தச் சூரியனே உதயமாகாமலிருக்கக் கடவது!" என்று பிரதி சாபங் கொடுத்துவிட்டுத் தன் ஆச்ரமத்துக்குச் சென்று பர்த்தாவுக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்து கொண்டிருந்தாள்.

மகாபதிவிரதையின் சாபம் பலித்தது. சூரியன் உதிக்கவே இல்லை. அதனால் யாவரும் துக்கமடைந்து தத் தம் கருமங்கள் நடத்த இயலாமல் தவித்தார்கள். இவ் வித மேற்பட்டதற்குக் காரணமென்னவென்று ரிஷிகள் ஞானதிருஷ்டியால் பார்த்து ஒரு ரிஷி பத்தினியால் நடந் ததென்றுணர்ந்து அவளிடத்தில் அவர்கள் சென்று "அம்மணி! இவ்விதம் செய்யலாமா? உலகம் பாழாய் விடுமே! எங்களிடத்திற் கிருபை கூர்ந்து சூரியன் உதய மாகும் வண்ணம் சாப விமோசனம் செய்யவேண்டும்" என்று வேண்டிக் கொண்டனர்.

அந்த மாதரசி "உங்கள் அபிப்பிராயம்போல் நான் சாப விமோசனஞ் செய்தால் எனது கணவனி

றந்து நான் அமங்கலியாய்விடுவேன்! அதற்கென்னசெய்கிறது" என்றாள். அவர்கள் "அம்மணி, உனது பதி உயிருடனிருக்கும்படி அந்த மாண்டவிய ரிஷியைக் கொண்டே செய்விக்கிறோம்" என்று வாக்களித்தனர். பின் அவ்வனைக்கு சாபத்தை மீட்டுக் கொண்டாள். உடனே சூரியனுதித்தான். அவள் கணவனிறந்து விட்டார். அப்பால் ரிஷிகள் சென்று மாண்டவியரைக் கழுவிலிருந் திறக்கிக் கொண்டுவந்து தவசிரேஷ்டரை உயிர்ப்பிக்கும்படி செய்தார்கள். அப்போது அங்கே பகவான் பிரத்தியக்ஷமாய்த் தவசிரேஷ்டருக்கிருந்த பெருவியாதியை நீக்கி, முன்போல் யௌவன திசையை அடையும்படிசெய்து மற்றெல்லோருக்கும் மோக்ஷமளித்தனர். அம்மணி! அத்தகைய உத்தம குணங்கள் ஸ்திரீகளுக்கு வாய்த்திருக்க வேண்டும். அவள்தான் கற்பில் அருந்ததி! நமது மாமன்மகளோ,

மூர்க்க குணத்தையே முழுதுங்கொண்டவள்;
நாயகன் மீது நண்பிலாநாரி;
பெரியோரைப் பேணு பெரும்பவத்துஷ்டை.

அவள் நம் குலத்துக்குச் சரிப்படாள்; உனக்கு அடங்கி நடக்கமாட்டாள். அவள் உறவு நமக்கு வேண்டாம்; அம்மணி! உன் பேச்சுக்குக் கட்டுப்பட்டு அப்பெண்ணை நான் மணந்துகொண்டால் நாங்கள் ஒற்றுமையுடன் வாழ்வது அரிதாகும். புருஷன் விரும்பும் பெண்ணையும் பெண் விரும்புகிற புருஷனையுந் தேடி மணமுடிப்பதே சிறந்த விவாகமாகும். அந்தத் தம்பதியினிடமே ஒற்றுமை மிகுந்திருக்கும். அவர்கள் வாழ்க்கையே ஈடிலா வாழ்க்

யையாக இருக்கும். அவர்கள் வசிக்குமிடத்திலேயே திருமகள் வசிப்பாள். அவர்களிடமே கற்பு நிலைபெறும். அவர்களுக்குச் சந்தானமு முண்டாகும். அதைத் தவிர சிலர் தங்கள் புதல்வனுக்கு இஷ்டமில்லாத பெண்ணைக் கட்டாயத்தின் பேரில் விவாகம் செய்வித்து அவர்கள் வாழ்வைக் கெடுக்கிறார்கள். அந்தத் தம்பதி ஒருவர் சென்றவழி ஒருவர் செல்லாமல், மனச் சந்துஷ்டியின்றிக் காலங்கழித்து இகபர நன்மைகளை இழக்கிறார்கள். அவர்களுடைய பிள்ளைகளோ விகார ரூபங்கொண்டு திடகாத்திர மில்லாமல் தேகபலங்குன்றிப் பிணி அதிகரித்து அவயவம் பழுதுபட்டுப் பூவிலோ பிஞ்சிலோ காயிலோ மரணமடைகின்றனர். இன்னுஞ் சிலர் மரணமடையாதிருந்தாலும் மூர்க்ககுணங்கொண்டு திருடுவதும் கொலை செய்வதுமான துஷ்ட வழிகளில் சென்று இராஜாங்கத்தாரால் தண்டிக்கப்பட்டுப் பின் மரணமடைகின்றனர்; முடிவில் ஒன்றுக்கு முதவாமல் கெட்டலைந்து குலத்துக்குப் பழிப்பைத் தேடி வைக்கிறார்கள். அம்மணி, ஆகையினாலே அப்பெண்ணை மறந்து குணவதியாயும் என் மனதுக் கிசைந்தவளாயுமுள்ள ஒரு பெண்ணைப் பார்த்து மணமுடிக்க வேண்டும்'' என்று சொன்னான்.

தாயானவள் சினங்கொண்டு "அடே, என்னடா, பிரமாதமாய்த் தெரிந்தவன்போற் பேசுகின்றாய்! உன்பிதாவைப் பார்க்கிலும் நீ நிரம்பத்தெரிந்தவனா? அவரே என் வார்த்தைக்குச் சம்மதித்துக் கொண்டார். உனக்கு நாங்கள் கெடுதலா தேடுவோம்?'' என்று இன்னும் என்னென்

னவோ தனக்குத் தோன்றியவற்றை யெல்லாஞ் சொல்லி, 'மாமன் மகளிருக்க, நாம் மற்றவர்கள் வீட்டில் சம்மந் தஞ் செய்தால், உலகத்தவர், நம்மைத் திரவியமில்லாத வர்கள் என்றும் அவர்களுக்கேற்ற அந்தஸ்துடைய வர் அல்ல வென்றும் அதனாலேதான் மாமன் பெண்ணை மணம் செய்யவில்லை யென்றும் குறைகூறுவார்கள். பின் பார்ப்போர்களுக்கு நகைப்புக் கிடமுண்டாகும்படியான வசை பரவும். ஆதலால் என் வார்த்தையைத் தட்டாதே; அப்பெண்ணையே மணந்துகொள்'' என்று சொன்னாள்.

கர்ப்பூரசுந்தரமும் "அம்மணி,

'தாயிற்சிறந்ததொரு கோயிலுமில்லை'

ஆதலால் தங்கள் வார்த்தைக்கு நான் மறுவார்த்தை சொல்லத் துணியேன்; அவளுடைய துர்க்குணங்களைப் பற்றிச் சொன்னேன். அவ்விஷயத்தில் உங்களுக்கே இஷ்டமிருக்குமானால் அபிப்பிராயம் போற் செய்யலாம்'' என்று சொல்லிவிட்டு, சரேலென்றெழுந்து தன் மித்தி ரன் தருமசீலனிடம் சென்று தாய்க்கும் தனக்கும் நடந்த சம்பாஷணையை விவரமாய்ச் சொல்லி விசனப் பட்டான். தர்மசீலன் "நண்ப! நமதிஷ்டம்போல் ஒன் றும் நடவாது.

'எண்ணமெல்லாம் போய் எமனுலே மெய்'

என்றபடி எந்தக் காரியமும் பிராப்தப்படிதான் நடக்கும்.

'அன்று முடி சூடவே திருக்க ரகு ராமன்முன்
அருங்கா டுறைந்த தென்ன?

அண்டரெல்லா அமிர்த முண்டிடப் பரமனுக்
காலம் லபித்த தென்ன ?
வென்றிவரு தேவர்சிறை மீட்ட நீ களவில்
வேடச்சியைச் சேர்ந்ததென்ன ?
மேதினி படைக்கு மயனுக்கொரு சிரம்போய்
வெஞ்சிறையி லுற்றதென்ன ? [போன
என்று மொருபொய் சொலா மன்னவன் விலை
தென்னகாண்; வல்லமையினுல் '............
எண்ணத்தினு லொன்றும் வாராது பரமசிவன்
எத்தனப்படி முடியுமாம் '

என்றபடி எந்தக் காரியமும் தெய்வ சங்கற்பப்படி நடக்குமே தவிர நமதெண்ணம்போல் ஒரு காரியமும் நடவாது.

' வருந்தியழைத்தாலும் வாராதவாரா
பேருந்துவன போமினேன்றுற் போகா '

இதையன்றி இருந்தேங்கி நெஞ்சம் புண்ணுவதில் யாது பயன்? எல்லாம் அமைப்புப் போலவேதான் நடக்கும். நீ ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம் '' எனத் தைரியம் சொல்லிச் சமாதானப் படுத்திக்கொண் டிருந்தான்.

கர்ப்பூரசுந்தரத்தின் தாயும், மகன் சம்மதித்துக் கொண்டானென்று மகிழ்ந்து தன் கணவனிடஞ் சென்று முகூர்த்த தினத்தை நிச்சயப் படுத்தும்படிக்கும், வேண்டிய காரியங்களைச் சித்தம் செய்யும்படிக்கும், சொல்லித் தனது தமையன் ஜயவீரசிங்கனுக்குத் தெரியப்படுத்தினுள்.

அவனும் இதுதான் சமயமென்று தன் மனைவி யிடம் தெரிவிக்க, அவளும் சந்தோஷமுற்று மகளை அழைத்து உன் வடிவத்துக்கேற்ற உன் அத்தை மகன் கர்ப்பூரசுந்தரத்துக்கு உன்னை மணஞ்செய்ய நிச்சயித் திருக்கிறது. அவர்களும் சம்மதித்துக் கொண்டார்கள்'' என்று சொன்னாள். அப்பெண் உடனே தன் அன்னையைக் கோபக் குறியுடன் நோக்கி “அம்மணி! அவரா எனக்குகந்த கணவன்? அவர் என்னெக்கம்போல் நடப் பாரா? எனக்கிஷ்டமான தெல்லாம் வாங்கிக் கொடுப் பாரா? அவர் பழைய மாப்பிள்ளை தானே! அவரிடத் தில் என்ன சிலாக்கிய மிருக்கிறது?'' என்று கேட்டாள்.

அவள் தாய், “அடி பேதாய்! அவன் உனக்குக் கணவனாகக் கிடைப்பது உன் தவப்பயனே யாகும். நீ ஒன்றும் தடை சொல்லாதே! உன்னிஷ்டம்போல் நடப் பான்'' என்று தேறுதல் சொல்லி, மகளைச் சம்மதிக்கச் செய்து முகூர்த்த நாளை நிச்சயப்படுத்தும்படி சொல்லி அனுப்பினாள்.

இதைக் கேட்ட கர்ப்பூரசுந்தரத்தின் அன்னையும் சந்தோஷமடைந்தாள். தந்தை ஓர் சுப தினத்தை முகூர்த்த தினமாக நிச்சயித்து, வேதவேதியர் பந்து மித்திர ஜனங்களையும் மேளதாள முதலிய சங்கீத வாத் தியங்களையும் வரவழைத்து, சந்தனம், புஷ்பம், தாம் பூலம், அறுசுவை உண்டி முதலியவற்றால் வந்தவர்களை உபசரித்து, கணவன் கருத்துக்கிசையாக் காதலிக்கும் அவளிடத்தில் அன்பில்லாத அழகன் கர்ப்பூரசுந்தரத் துக்கும் திருப்தியில்லாததோர் திருமணத்தைச் செய்து முடித்தான்.

மணமுடிந்து சில நாள் சென்றதும் கல்யாணி கணவனைப் பொருட்படுத்தாமலும், மாமன், மாமி முதலான பெரியோர்களுக்கடங்கி நடவாமலும், குடும்ப காரியங்களைக் கவனித்துப் பாராமலும், தனதிஷ்டம்போல் நல்ல உடைகளைத் தரிப்பதும், தலை சீவிக் கொண்டைக்குப் பூ முடிப்பதும், நெற்றிக்குத் திலகமிடுவதும், கண்ணுக்கு மையிடுவதும், தாம்பூலம் தின்பதும், கண்ணாடி பார்ப்பதும், தெரு வாசலில் நின்று வீண் பேச்சுப் பேசுவதும் புருஷன்மேல் சீறி விழுவதுமாக இருந்து வந்தாள்.

இதையறிந்த அவளது மாமி சிலகாலம் வரையில் தமையன் பெண்ணென்ற விசுவாசத்தை முன்னிட்டு அவள் செய்யும் அக்ரமங்களை யெல்லாம் அடக்கிக் கொண்டிருந்து பார்த்தாள். அவள் செய்யுங் காரியங்களில் ஒன்றாவது ஒழுங்காய்த் தெரியவில்லை. பின் அவள், அவளை நோக்கி, "அடி! என்னடீ! நீ தாசியா? வேசியா? குடும்ப காரியங்களைக் கவனியாமலும் கணவனுக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்யாமலும் உன்னை அலங்கரித்துக் கொள்வதில் மட்டும் பிரியமுள்ளவளாயிருக்கின்றாயே! இது தகுமா? இனியாவது கணவன் சொற்படி நடந்து குடும்ப காரியங்களைக் கவனித்து வா" என்று கண்டித்தாள்.

மருமகள், கோபங்கொண்டு "என்னடி யாரைத் தாசி வேசி என்று சொல்லுகிறாய்? நானென்ன அவ்வளவு இழி குலத்திற் பிறந்தவளா? எனக்கு இந்த வாழ்வு வேண்டாம். இந்தக் கணவன் போனால் இன்

னம் எத்தனையோ கணவன்! அன்பில்லாதவனாகிய உன் மகனுக்கு என்னை மணஞ்செய்ய நிச்சயிக்கும்போதே நான் சம்மதிக்கவில்லை; என்னைப் பெற்ற பாழான தாய் தந்தையர்,

'புலிமுன் ஆட்டை விடுவதுபோல'

உன் முன்னிலையில் என்னை ஒப்புவித்து விட்டார்கள். நானோ திக்கற்ற பாவியானேன்'' என்று,

"நீலிக்குக் கண்ணீர் நிமிஷத்திலே''

என்றபடி தாரை தாரையாகக் கண்ணீர் பெருக்கி அழ ஆரம்பித்தாள். இதைப் பார்த்தாள் மாமி! தமையன் பெண்ணென்ற விசுவாசம் வந்து விட்டது! "ஐயோ இவள் அறியாத சிறுமியாயிற்றே! நாம் தெரியாமல் கோபங்கொண்டோமே'' என்று நினைத்துத் தானுங்கூட அழுது மருமகளை மோவாய் தாங்கிப் பிரிய வசனத்துடன் சமாதானப்படுத்தி உபசரித்து வந்தாள்; சில சமயங்களில் அவளுக்கு வேண்டிய புத்திமதிகளையும் சொல்லி வந்தாள்.

கல்யாணியோ பொம்மை போல் சகல ஆபரணங்களையும் அணிந்துகொண் டிருப்பாள்; கணவனுடன் ஒரு வார்த்தையாவது விரும்பிப் பேசாள்; அவன் பேசினாலும் இன்பமுடன் பதிலுரையாள்; சிலசமயத்தில் கணவன் விருப்புற்று,

பிரியத்தால் பெண்ணே என்றால்
கர்வத்தால் "எனடா'' என்பாள்!

"நான் கணவனுச்சே அப்படிச் சொல்லலாமா?'' என்ருல் ''நான் மனைவியாச்சே நீ இப்படிச் சொல்லலாமா ?''
என்பாள்.

சில சமயங்களில் வேண்டா விருப்புடன் அவனென் னைத்திற் குடன் படுபவள் போல் அவள் பாவனை காட்டு வாள்.கர்ப்பூரசுந்தரமும்''ஐயோ இவளுடன் வாழ்வதிலும் தனித்துத் தாழ்தல்[மேன்மையே'' என்று கருதிக் கலங்கு வான் ;; விதியை நினைத்து விம்முவான் ; கதியைக் கருதி வாழ்வை வெறுப்பான் ; தாமரை இலை நீராய்த் தவிப் பான் ; யாரிடம் சொல்வது என்றயர்வான் ; ஆவிபோக வில்லையே என்றல்லற்படுவான். ஆனல் பரம சாந்தகுண முடைய;;புத்திமானுனதால், " இவளுக்கு இது பிறவிக் குணம். இவள் மீது நாம் சினங்கொள்வதில் பிரயோசன மில்லை '' என்று மனதிலெண்ணிக்கொண்டு மனைவியி னுடைய விஷயத்தை வெளிக்குக் காட்டாமல் எந்த நேர மும் தருமசீலனுடன் சிநேகிப்பதும் தன் பிதாவி னுடைய காரியங்களைக் கவனித்து வருவதுமாக இருந்து வந்தான்.

---

## அத்தியாயம் 4

இவ்வாறிருக்க, ஒரு நாள் கர்ப்பூரசுந்தரம், தருமசீலனை நோக்கி "நண்ப! நமது வர்த்தகத் தொழிலுக்கேற்ப திரவியம் சம்பாதிக்கவேண்டும். நம்மிடத்திலேயே திரவியமிருக் கிறதென்ற மமதைகொண்டு சோம்பலாயிருப்பது கூடாது. இச் செல்வமோ நீர்மேற் குமிழிக்கு நிகர். இதற்குப் பெயரோ செல்வம், தங்கம். அவ்வார்த்தைகளைக் கவனித்துப் பார்க்குங்கால் செல்வோம், தங்கோம் என்று பொருள் ஏற்படுவதைக் கவனி. பவுன், ரூபா, சில்லறைதுட்டு முதலிய நாணயங்களை நீளமாதல், சதுரமாதல், திரிகோணமாதல் இன்னும் என்ன என்ன விதமாதல் செய்யக்கூடியதா யிருக்க அவ்வாறு செய்யாமல் 'செல்வம் சகடக்கால் போலவரும்' என்றபடி சக்கரம்போல் வட்ட வடிவமாகச் செய்திருக்கிறார்கள். இவைதான் இப்படியென்றால், நோட்டைக் கவனி. அது காற்றாய்ப் பறக்கிறது! அப்படி அமைந்ததானது, அந்த நாணயங்களானவை ஒருவரிடமும் நிலைத்திராமல் 'செல்வோம், தங்கோம்' என்ற பெயருக்குத் தக்கபடி ஓடிக்கொண்டே யிருக்கும் என்று அறிவிக்கவே போலும்!

'ஓடமிடு மிடமது மணல்சுடுஞ் சுடுமிடமு
மோட மிகவே நடக்கும்
உற்றதோ ராற்றின்மடு மேடாகு மேடெலாம்
ஊறு புனல்கொள் மடுவாம்
காடுகா டாகுமுயர் காடுகா டாகிவிடும்
நவில்சகடு மேல் கிழதாய்

நடையுறுஞ் சந்தை பல கூடுமுடனேகலேயும்
நன்னிலவு மிருளாய் விடும்
நீடுபகல் போயபின் பிரவாகு மிரவுபோய்
நிறைபகற் போதாய்விடும்
நிதியோர் மிடிப்படுவர் மிடியோர் செழித்திடுவர்
நிசமல்ல வாழ்வு கண்டாய்
மாடுமனே பாரிசன மக்கணிதி பூஷணமு
மருவுகன வாகுமன்றோ ?"

என்றபடி திரவியம் ஒருவரிடத்தில் தங்காது. நமது கையிலிருக்கும் திரவியமோ நம்மிடமே இருக்குமென்ற நிச்சயமில்லே. அத்தன்மையான திரவியம் நம்மிடமிருந்து நீங்கிவிட்டால் நம்மை ஒருவருமதியார்கள். ஆனதால் நாம் பாலியத்திலேயே,

'திரைகடலோடியுந் திரவிங்தேடு'

என்றபடி திரவியம் சேகரிக்கவேண்டும்" என்று சொன்னான்.

தருமசிலன், நண்ப, தனத்தைத் தேடிவைத்திருப்பதில், அநேகவித கவலேகளிருக்கின்றன.

'தனத்தினேத் தேடல் துக்கந் தானதைச்
செம்மை பண்ணி
மனத்துடன் காத்தல் துக்கம் வழங்கிய
போதுந் துக்கம்

இனத்துடன் புசித்தல் துக்கம் எண்ணிய
பொருளி னலே
அனைத்திலுந் துக்கந் தானே அவனியில்
ஆயுங்காலே ''

என்றபடி தனத்தைத் தேடுகையிலுந் துக்கம்; அதைப் பதனம் பண்ணுகையிலுந் துக்கம்; அதைப் பிறருக்குக் கொடுக்கையிலுந் துக்கம்; அதை அநுபவிக்கையிலுந் துக்கம். தனம் துக்கத்துக்கு இருப்பிடமாதலால் அத் திரவியத்தின்மீது இச்சையில்லா திருப்பதே மேன்மை'' என்றான்.

கர்ப்பூரசுந்தரம், "நண்பா, நல்ல வார்த்தை சொன் னய். திரவியம் துக்கத்திற்கிருப்பிட மென்று நீ எவ் வளவு சொன்னலும் ஒப்பத்தக்கதன்று. அத்திரவிய மில்லாதவர்களை உலகத்தில் யார் மதிப்பார்கள் ?

'மேலான சாதிபி லுதித்தா லு மதிலென்ன
வெகுவித்தைகள் கற்றுமென்ன ?
மிக்கவதி ரூபமொடு சற்குண மிருந்தென்ன
மிகுமானி யாகி லென்ன ?
பாலான மொழியுடைய னுபென்ன ஆசார
பானு யிருந்து மென்ன ?
பார்மீது வீரமொடு ஞானவானு யென்ன
பாக்ய மில்லாதபோது
வாலாய மாய்ப்பெற்ற தாயுஞ் சலித்திடுவள்
வந்த சுற்றமு மிகழுமே

மரியாதை யில்லாம லெனவரும் பேசுவார்
மனைவியுந் தூறு சொல்வாள்'

என்றபடி எவரும் மதிக்கமாட்டார்கள். அல்லாமலும் வைசியகுல வழக்கப்படி,

'நீள்கடல் கடந்திடுவர் மலையாளமும் போவர்
நெடிது தூரந் திரிந்து
நினைவு தடுமாறார்கள் சலியார்கள் பொருள்தேடி
நீணிலத் தரசுபுரியும்
வாழ் உழவரைத் தமது கைவசஞ் செய்வார்கள்
வருமிடம் வாராதவிடமும்
மனதையுமறிந்துதவி யொன்று நூறாயிட
வளர்ப்பர் வரு துலைதுலைக்கும்
ஆள்விடுவர் மலிவு குறைவது விசா ரித்திடுவர்
அளவில் பற்பல சரக்கும்
அமைவுறக் கொள்வர் விற்பார் கணக்கதில் அணுவும்
மறைவிடார் செலவு வரிலோ
ஆழியொத்தே மலையி னளவுங் கொடுத்திடுவர்
அருள் வைசியர்'...............

என்று கூறியுள்ள வணிகரியல்புக்கேற்றபடி நாம் கப்பலேறித் தீவுகள் கடந்து தூரதேசங்களுக்குச் சென்று அங்கு லாபங்கிடைக்கும் தொழில்களைச் செய்து திரவியம் சம்பாதித்து நம்தேசத்துக்குத் திரும்பி வரவேண்டும். கஷ்டமின்றித் திரவியம் சம்பாதிப்பதற்காகாது. நாம் கஷ்டப்பட்டுத் திரவியத்தைச் சம்பாதித்து வைத்

திருந்தால் நம்மை எவ்லோரும் விரும்பி அடுப்பார்கள். முன்பின் அறியாதவர்களும் சிநேகமாவார்கள். நாம் ஒரு காரியத்தைச் செய்ய நினைத்தால் எல்லோரும் அக் காரியத்துக் குடன்படுவார்கள். அத்தகைய திரவியம் லக்ஷ்மி கடாட்சத்தாலுண்டாக வேண்டும். லக்ஷ்மி கடாட்சம் முயற்சியுடையவன் பங்கே தங்கும்.

'திருமகள் கடாக்ஷ முண்டானு லெவர்க்கும்
சிறப்புண்டு கண்யமுண்டு
சென்றவழி யெல்லாம் பெரும்பாதையாய் விடும்
செல்லாத வார்த்தை செல்லும்
பொருளொரு துரும்பு மரியாதையாஞ் செல்வமோ
புகல் பெருக்காறு போலாம்
புவியின் முன் கண்டு மதியாதபேர் பழகினவர்
போலவே நேச மாவர்
பெருமையொடு சாதியிலுயர்ச்சிதரு மனுதினம்
பேரும் பிரதிஷ்டை யுண்டாம்
பிரியமொடு பகையாளி கூட வுறவாகுவான்
பேச்சினிற் பிழைவராது
வருமென நினைத்த பொருள் கைகூடி வருமதிக
வல்லமைகள் மிகவுமுண்டாம்'

என்றபடி எல்லாச் சிறப்புகளுமுண்டாம். இழிவான சாதிய யிருந்தாலும் உலகம் உயர்வு படுத்தும். முன் பின் அறியாதாவர்க ளெல்லாம் பூர்வீக சினேகம்போல் வந்து நேசிப்பார்கள். அத்திரவியம் நம்மை விட்டு விலகி,

'வறுமை தான் வந்திடிற் றப்பழுது சொல்லுவாள்
மனையாட்டி சற்றுமெண்ணாள்
வாக்கிற் பிறக்கின்ற சொல்லெலாம் பொல்லாத
வசனமாய் வந்துவிளையும்
சிறுமையொடு தொலையா விசாரமே யல்லாது
சிந்தையிற் றைரியமில்லை
செய்ய சபைதன்னிலே சென்றுவர வெட்கமாம்
செல்வரைக் காணின் நாணும்
உறுதிபெறு வீரமுங் குன்றிடும் விருந்துவரில்
உயிருடன் செத்தபிணமாம்
உலகம்பழித்திடும் பெருமையோர் முன்புசென்
றொருவரோடு செய்தி சொன்னால்
மறுவசனமும் சொலார்'

என்றபடி திரவியம் போய்விட்டால் பெற்ற தாயும் கொண்ட மனைவியும் தூறு சொல்வார்களென்றால் மற்றெவர்தான் தூற்றார்கள்?

'பணமில்லாதவன் பிணம்'

திரவியம் ஒருவரிடமிருந்தால் அறியாதவர்கள் எல்லாரும் விரும்புவதும், நீங்கிவிட்டால் அறிந்தவர்கள் முதல் எவரும் வெறுப்பதும் இக்கலிகாலத்தினியல்பு. ஆதலால் நாம் மென்மேலும் திரவியத்தைச் சம்பாதித்து நாமுஞ் சுகித்துச் சற்பாத்திரத்திலுஞ் செலவு செய்து நமக்கும் நம் சந்ததியார்க்கும் கியாதியான பெயரை நிலைநிறுத்த வேண்டும். இவ்வாறின்றித் திரவியம் சம்பாதிப்

5

பதில் மட்டும் திருஷ்டியாயிருந்து தானுஞ் சுகியாமல் சற்பாத்திரத்திலும் செலவு செய்யாமல்,

'எட்டிபழுத்தென்ன ஈயாரிருந்தென்ன'

என்றபடி,

'திரவியங் காக்கு மொரு பூதங்கள் போற்பணந்
தேடிப் புதைத்து வைப்பார்
சேலைகல மாகவுங் கட்டார்கள் நல்லமுது
செய்துண் ணறமுஞ் செயார்
புரவலர் செய்தண்டந் தனக்கும் வலுவாகப்
புகுந் திருடருக்கு மீவார்
புலவரைக் கண்டவுட னேடிப் பதுங்குவார்
புராணிகர்க் கொன்று முதவார்
விரகறிந்தே பிள்ளை சோறுகறி தினுமளவில்
வெகு பணஞ் செலவாகலால்
விளையாடு கிழவனும் பிள்ளையே பிள்ளையென
மிகுசெட்டி சொன்ன கதைபோல்
வரவு பார்க்கின்றதே யல்லாது லோபியர்கள்
மற்றொருவருக்கீவரோ ?

என்பது போலவும்

'குயின் முட்டை தனதென்று காக்கையட காக்
குணம்போலு மீக்களெல்லாங் | குங்
கூடியே தாமுண்ண வேண்டுமென் றேதினங்
கூடுய்த்த நறவு போலும்

பயில் சோருக்குப் பிறந்திடத் தாம்பெற்ற
பாலனென் றட்கருதியே
பாராட்டி முத்தமிட் டன்பாய் வளர்த்திடும்
பண்பிலாப் புருடர் போலும்
துயிலின்றி நிதிகளைத் தேடியே யொருவர்பாற்
றெட்டுத் தெறித்திடாமல்
தொகைபண்ணி வைத்திடுவர் கைக்கொண்டு போகவரு
சொந்தமானவர் வேறு காண்'

என்றபடியும் சிலர் லக்ஷக்கணக்கான திரவியங்களை வைத்துக்கொண்டு தாங்களும் சுகியாமல் பிறருக்குமீயாமல், பணப்புதையல்களைப் பூதம், நெடு நாள் காத்துக் கொண்டிருந்து பிறகு எவனாவது அதிர்ஷ்ட சாலி ஒருவனிடம் ஒப்புவிப்பதுபோல், தங்களுக்குப் பின் தங்கள் சொந்தப் புத்திரனோ ஸ்வீகாரப் புத்திரனோ ஏற்பட்டு அவர்கள் அநுபவிக்கவும் அழிக்கவும் சௌகரியம்செய்து விட்டுக் காலமாகின்றனர். அவர்கள் பிறகு அளவுகடந்து செலவு செய்து பணஞ் சேகரித்து வைத்ததற்குப் பயனாகக் குலத்துக்குப் பழியைத் தேடிவைக்கின்றனர்.

திரவியத்தை மிகுதியாக வைத்துக் கொண்டு லோபியா யிருந்தவனுடைய கதை ஒன்று சொல்லுகிறேன் கேள்—

## அத்தியாயம் 5.

சொர்ணேஸ்வரபுரமென்னும் ஓர் ஊரில் தருமசிந்தை இல்லாத லோபநாதன் என்னும் ஒரு தனவானிருந்தான். அவன் மிகுந்த செல்வவந்தனா யிருந்தும் தானும் தன் பெண்டிர் பிள்ளைகளும் நல்ல ஆடை ஆபரணங்களணியாமலும் சுகபோஜனம் அருந்தாமலும், தான தர்மமென்பதைக் கனவிலுமறியாமலும், மகாலோபியாய்ப் பணத்தைத் தேடி வைத்துக் கொண்டிருந்தான். அவனது மனைவி "நாதா! நீர் அபரிமிதமான திரவியங்களை வைத்துக்கொண் டிருந்தென்ன செய்கிறது; ஒருவன் தான் தேடிய திரவியத்தைத் தான் அநுபவியாமல் சற்பாத்திரத்திலும் செலவு செய்யாமற் போனால் அத்திரவியம் நாசமடையும்.

'ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்'

என்றபடி லோபிகளுடைய பொருளுக்கு அழிவு நேரிடும். ஆனதால் நாளைய தினம் அர்த்தோதயமகோதய புண்ணிய தினமாகையால் சேதுக்குச் சென்று சங்கற்பம் செய்து சமுத்திர ஸ்நானம் பண்ணி, திரவியங்களை வறியவர்களுக்கும் பிராமணர்களுக்கும் அளித்து அவர்கள் ஆசீர்வாதம் பெற்று, சுவாமி தரிசனம் செய்து கொண்டு வாரும்" என்று சொன்னாள்.

இதைக் கேட்ட கணவன் "ஆஹா! ஹா பணத் தருமை இவளுக்கு என்ன தெரியும்?

'எருதின் புண் காக்கை யறியுமா?'

கஷ்டப்பட்டு மூன்றுக்கு மூன்றுகப் பொய் புரட்டு சொல்லியோ, திருடியோ, அடிபட்டோ, கட்டுண்டோ, மானமீன மின்றிச் சம்பாதித்த, எனக்கல்லவோ பணத் தருமை தெரியும்? செலவு செய்யவா! என் பிராணன் போய்விடாதா? நல்ல வார்த்தை சொன்ளுய்! போடி போ பைத்தியக்காரி'' என்று மனதிலெண்ணிக் கொண்டு யோசிக்கலாஞன். இவளிஷ்டப்படி செய்வதாக ஒப்புக் கொள்வோம். இல்லாவிட்டால், பிண்டத்துக்குத் திண் டாட்டம் வந்து விடும். இவளை எப்படியாவது ஏமாற்றி விடவேண்டும்'' என்று நினைத்து, "பெண்ணே, நல்ல யோசனை சொன்ளுய்! நான் இதோ ஒரு பை சவரன்களை எடுத்துக் கொண்டு சேதுவுக்குச் சென்று சமுத்திர ஸ்நானஞ் செய்து, சேது மாதவரையும் இராம நாதரை யும் தரிசித்து, வேண்டிய தான தருமங்களைச்செய்து வருகின்றேன்'' என்று சொல்லிக் காலணு எடுத்துத் தலைப்பில் முடிந்துகொண்டு மனைவியினுடைய கட்டாயத் துக்காகப் புறப்பட்டுச் சென்றுன்; கால் நடையாகச் சேதுவுக்குச் சென்று அந்தத் திவ்ய ஸ்தலத்தில் நடக் கும் நடவடிக்கைகளைக் கவனித்தான்.

ஜனங்கள் கும்பல் கும்பலாய்ப் பிராமணர்களிடம் சங்கற்பம் செய்துகொண்டு தட்சணை கொடுப்பதும் கூன் குருடு, ஏழை முதலியவர்களுக்குத் தங்களால் இயன்ற வரை தருமஞ் செய்வதையுங் கோதானம் பூதானம், வஸ் திரதானம் இன்னும் எவ்வளவோ தானங்கள் செய்வ தையும் பார்த்துப் பிரமித்து, "இக்கும்பலில் நாம் சென் ருல் நம்மைவிடார்கள்; திரவியம் மிகுதியாய்ச் செலவு

செய்ய வேண்டும். ஆனதால் கும்பலில்லாத ஒரு துறையில் சென்று ஒருவருக்குந் தெரியாமல் ஸ்நானஞ் செய்து ஓடிவிட்டால் நம்மனையாளிடம் போய் ஸ்நானம் செய்து தட்சணைகள் மிகுதியாய்க் கொடுத்து விட்டு வந்ததாய்ச் சொல்லலாம்'' என்று நினைத்து, ஜனங்கள் உள்ள இடத்தை விட்டு நீங்கிக் கொஞ்சதூரம் சென்று, சுற்று முற்றும் பார்த்து, ஒருவருமில்லாத ஒரு துறையில் இறங்கினான்.

இவனுடைய லோபகுணத்தை அறிந்தகடவுள் ஒரு விருத்தப் பிராமணராய்த் தர்ப்பையைக் கையில் வைத்துக் கொண்டு, லோபி இறங்குந் துறையிற் சென்று "பிரபோ! இதோ பவித்திரம்! வாங்கிச் சங்கற்பம் செய்துகொள்ள வேண்டும்'' என்று தர்ப்பையை நீட்டினார்; பார்த்தான் லோபி; "இந்தப் பிராமணன் இங்கேயும் வந்துவிட்டானே'' என்று மனக்கிலேச மடைந்து, "ஐயா, நானிப்போது ஸ்நானம் செய்யவில்லை. ஸ்நானம் செய்யும் போது தங்களிடம் தர்ப்பை வாங்கிச் சங்கற்பம் செய்து கொண்டு தட்சணை கொடுக்கிறேன்'' என்றான். உடனே விருத்தாப்பியர் மறைவாய்ச் சென்று விட்டார்.

லோபியும், பிராமணன் தொலைந்தானென்று அதிக சந்தோஷமடைந்து "நாம் இவ்வளவு தூரம் வந்தும் பிராமணன் வந்துவிட்டானே! இனி நாம் இத்துறையில் ஸ்நானம் செய்யாமல், நீசர்கள் ஸ்நானம் செய்யும் துறைக்குச் சென்றால் பிராமணன் அங்கு வரமாட்டான். இதுதான் துட்டுச் செலவில்லாமல் ஏமாற்றும் வழி'' என்று நினைத்து, நீசர்கள் உள்ள துறைக்குச் சென்று

நாலுபக்கமும் பார்த்துவிட்டுப் பிராமணனைக் காணுததால் சந்தோஷமடைந்து சமுத்திரத்தி லிறங்கினுன்.

உடனே விருத்தாப்பியர் அங்கேயும் வந்து தர்ப்பையை நீட்டினுர். பார்த்தான் லோபி; "நாம் எந்த இடம் சென்ருலும் இவ்விருத்தப் பிராமணர் நம்மைவிட மாட்டார். ஆகையா லிவரை ஏமாற்றவேண்டும்" என்று நினைத்து, "சுவாமி, நானே தட்சணைக்காக ஒன்றும் கொண்டு வரவில்லை; நீங்கள் இப்போது சங்கற்பஞ்செய்து வைத்துப் பிறகு என் வீட்டுக்கு வந்தால் தட்சணை கொடுக்கிறேன்' என்று தனது ஊர், பெயர் முதலியவைகளை மாற்றிச் சொன்னுன்.

இதைக் கேட்ட விருத்தப் பிராமணர், "தங்களிஷ்டப்படி செய்கிறேன்" என்று தர்ப்பையைக் கொடுத்துச் சங்கற்பஞ்செய்து வைத்துச் சென்று விட்டார்.

லோபியும் பிராமணரை ஏமாற்றி விட்டதாக எண்ணி மகிழ்ந்து ஸ்நானஞ்செய்து பசியுடன் வீட்டுக்குச் சென்றுன்.

அவனைக் கண்ட அவன் காதலி, "நாதா! சமுத்திர ஸ்நானஞ்செய்து சேதுமாதவரையும் இராமநாத சுவாமியையும் தரிசனம் செய்து தானமளித்துப் பிராமணர்களிடம் ஆசிர்வாதம் பெற்று வந்தீர்களா?" என்று வினவினுள்.

அவன், "பெண்ணே, எல்லாக் காரியங்களையும் சிறப்பாய் நடத்தி : ஒரு பை சவரன்களையும் செலவு

செய்து விட்டேன். சாப்பாட்டுக்குக் கூடத் துட்டு இல்லை. காலணுத்தான் மீந்தது, பார்'' என்று தான் முன் கொண்டுபோன முடிப்பைக் காட்டிப் பின் போஜன மிடும்படி செய்து சாப்பிட்டான். இதை அவன் மனைவி உண்மையென்று நம்பி, சந்தோஷத்துட னிருந்தாள்.

மறுநாள் அதி காலையில் அந்த விருத்தாப்பிய பிராமணர் லோபியினுடைய வீட்டு வாசற்றின்னையில் வந்துட்கார்ந்து கொண்டிருந்தார். இதை அறியாத லோபியும் சூரியோதயமானவுடன் கதவைத் திறந்துகொண்டு வெளியில் தலை நீட்டினன். விருத்தப் பிராமணர் "தீர்காயுஷ்யமஸ்து'' என்று ஆசிர்வாதம் செய்து "தட்சணை'' என்றார்.

இதைப்பார்த்த லோபி, "இனிப் பிராமணன் நம்மை விடமாட்டான். இவனை எவ்வழியிலும் வீட்டை விட்டு வெளிக்கடத்தி ஏமாற்ற வேண்டும். நாம் இறந்து விட்டதாய்ப் பாசாங்கு செய்தால் பிராமணன் போய் விடுவான். இதுதான் நல்லயோசனை'' என்று நினைத்து, "சுவாமி இருங்கள், உட்சென்று வருகிறேன்'' என்று மனைவியிடம் போய், "பெண்ணே, உன் வார்த்தையைக் கேட்டு நேற்று சேதுஸ்நானம் செய்யப்போய் ஒரு பை சவரன்களையும் செலவு செய்து வந்திருக்க, இந்தப்பிராமணன் இன்னமும் நம்மிடம் யாசகம் வாங்க வந்திருக்கிறான். இவனுக்குக் கொடுத்தால் இவன் போய் மற்றவர்களுக்குஞ் சொல்வான். பின் எல்லாரும் வந்துவிடுவார்கள். அவர்களுக்குக் கொடுப்பதென்றல் நம்மிடமுள்ள

திரவியம் முழுதும் போதாது. ஆனதால் நான் சொல்லு கிறபடி செய்தால் பிராமணனை ஏமாற்றிவிடலாம்'' என்று சொல்ல, மனைவியும், "தங்களிஷ்டம்போல் நடக்க சித்த முள்ளவளா யிருக்கின்றேன்'' என அவன் "பெண்ணே! நான் இறந்துவிட்டதாய்ப் படுத்துக் கொள்கிறேன். நீ கணவன் இறந்துவிட்டதாகத் துக்கமடைந்தால் எல்லா ஜனங்களும் வந்துவிடுவார்கள். பிராமணனும் சாவு வீட்டிலிருப்பது தீட்டென நினைத்துப் போய்விடுவான் அப்பால் நான் எழுந்துவிடுகிறேன்'' என்று சொல்ல, மனைவி அதற்கிணங்கினாள்.

பின் லோபி "நிறைய மூக்காடிட்டுப் பிரேதம் போல் சயனித்துக் கொண்டான். மனைவியும் பக்கத் திலிருந்துகொண்டு, "ஐயோ! நேற்று சேதுஸ்நானம் செய்து வந்தவர் இன்று மரணமடைந்து விட்டாரே! நான் என் செய்வேன்'' எனத் துக்கப்பட்டுப் பெருங் குரல்விட்டழவே, பக்கத்து வீட்டுக்காரரெல்லாம் ஒவ் வொருவராய் வந்து துக்கப்பட்டு எல்லோரும் ஏகோ பித்துப் பெருஞ் சத்தமாய்க் கூக்குரலிட்டு அழுது கொண்டிருந்தார்கள்.

இவைகளைப் பார்த்த விருத்தப் பிராமணரும் இது பாசாங்கென்றுணர்ந்து மௌனமாய்த் திண்ணையை விட் டகலாதிருந்தார்.

அண்டை அயலாரும் தனவானிறந்து விட்டா னென்றெண்ணியே பிரேதத்துக்குச் செய்யவேண்டிய சடங்குகளை யெல்லாம் செய்து, பல்லக்கு அலங்கரித்து

அதில் தனவானைக் கிடத்தி மயானத்துக்கு எடுத்துச் சென்றனர்.

திண்ணையிலிருந்த விருத்தப் பிராமணரும் "ஐயோ! இந்தத் தனவான் எனக்குத் தட்சணை கொடுக்கவேண்டும்! அதைக் கொடுக்கப் பிராப்த மில்லாதவராயினர்! ஆயினும் மயானம் போய்ப் பிரேதத்தையாவது கட்டிக்கொண்டு ஒரு குரல் அழுகிறேன்" எனத் தாமும் கூடச் சென்றார்.

உறவின் முறையாரும் மயானத்தில் கட்டையை அடுக்கித் தனவானை அதில் கிடத்தி நெருப்பை வைத்து வந்து விட்டனர். விருத்தப் பிராமணர் பிரேதத்தின் பக்கத்திலேயே உட்கார்ந்து கொண்டிருந்தார். லோபி யும் துணிமணிகளெல்லாம் எரிந்து உபாயமான சூடு உடம்பில் படும் வரையில் பொறுத்துக் கொண்டிருந்தான். வர வர சூடு அதிக முண்டாகிக் கால்விரலில் நெருப்புப் பற்றி எரிய ஆரம்பித்தது. இனி இருந்தால் பிராணன் போய் வெந்து சாம்பலாய் விடுவோமென்று நினைத்து "அப்பாடா என்றெழுந்திருந்தான். உடனே விருத்தப் பிராமணர் "தட்சணை" என்று கையை நீட்டினர். பார்த்தான் லோபி; "இவன் நம்மை விடமாட்டான்" என்று நினைத்துத் தன்லோப குணத்தை விடாமல் வெந்தாலும் வெந்து சாம்பலாகிறதே யன்றி, இவனுக்கு ஒரு பைசா வாயினுங் கொடுப்பதில்லை" எனத்தீர்மானித்து, பழைய படி படுத்துக்கொண்டான். பகவான் பிரத்தியட்சமாய் நெருப்பில் நின்று அவனை எடுத்து, அவனது லோப குணத்தை மாற்றி நற்புத்தி புகட்டி நல்லவனுக்கினர்.

ஆகையினாலே திரவியத்தை வைத்துக்கொண்டு லோபியா யிருப்பதாகாது. திரவியத்தை வீண்செலவு செய்யவுங் கூடாது. ஆனதால் நாமிருவரும் தூரதேசங்கள் சென்று, அங்குள்ள தேசவளப்பங்களை அறிந்து வியாபாரம் செய்து திரவியம் சம்பாதிக்கவேண்டும்'' என்று கூறினான்.

அதற்குத் தருமசீலனும் உடன்பட்டான். பின் ஒரு நல்ல நாளில் இருவரும் தாய் தந்தையரிடம் விடைபெற்றுக், கப்பலேறிப் பிரயாணப்பட்டு அநேகம் தீவுகள் கடந்து வீரசேகரபுர மென்னும் ஊருக்குச் சென்று, அவ்வூரில் குடிக்கூலிக்கு ஒரு வீட்டை அமர்த்தி அதிலிருந்துகொண்டு தினந்தோறும் வியாபாரிகள் உள்ள இடங்களுக்குப் போய் அவர்களுடன் பழகி அவர்கள் செய்யும் தொழில்களைக் கவனித்து வந்தனர்.

இவ்வாறிருக்க, ஒரு நாள் அவ்வூரில் செல்வவந்தனொருவனுடைய புதல்வன் தனபாலனென்பவன் இவர்களை வைசிய குலத்தவர்க ளென்றறிந்து, இவர்களுடைய நட்பை அடைய எண்ணங்கொண்டு, இவர்கள் வீட்டுக்குச் சென்று, போக க்ஷேமங்களை விசாரித்தான்; சிறிது பழக்கமேற்பட்டபின் தினந்தோறும் அவர்கள் வீட்டுக்குப்போய் வருவதுமாயிருந்து வந்தான்; அப்பால் அந்யோன்னிய நண்பனானான். அதன்பின் மூவரும் அநேகம் பெரிய வியாபாரிகள், ஆபீசுகள், கடைகள் உள்ள இடங்களுக்குப் போவதும் அங்குள்ள தொழில்களைக் கவனித்து அவர்களிடமுள்ள சரக்குகளை வாங்குவதும்

வாங்கி மறு விலைக்கு விற்பதுமாய்ச் சிறிது சிறிதாக வியாபாரம் செய்து நாளடைவில்

'பலதுளி பெருவெள்ளம்'

என்றபடி லாபமடைந்தனர். அப்பால் இவர்களும் ஒரு பெரிய ஆபீஸ் ஏற்படுத்தித் திரவியங்களை யெல்லாம் ஒன்று சேர்த்து, "சாசுக் கேட்டேச் சட்டி வாங்கி சட்டி ஒன்றேட்டேக் காசுக்கு விற்றாலும் வட்டிக்குக் கட்டாது" என்கிறபடி வட்டிக்குக் கடன் கொடுத்து வாங்க ஆரம்பித்து (Money Lender Bank) கடன் கொடுப்பவர் ரூபா வைக்குமிடம் எனப்பேர் அமைத்துத் திரவியத்தை விருத்திசெய்து வந்தனர்.



## அத்தியாயம் 6

இவ்வண்ணம் வியாபாரங்களை விருத்தி செய்து தனவந்தர்களாய் இருக்கையில், ஒருநாள் தருமசீலனும் கர்ப்பூர சுந்தரனும் தனபாலனை நோக்கி, "நாங்களிருவரும் விஜயநகரம் போய் அவ்வூரிலுள்ள விசேடங்களைப் பார்த்து வருகிறோம். நமது தொழில்களை யெல்லாம் நீ கவனித்து வா'' என்று சொல்லி அவனிடம் விடைபெற்று அநேகம் ஜனங்கள் ஏறிச் செல்லும் கப்பலில் ஏறிச் சென்றார்கள்.

அக்கப்பலானது இக்காலம்போல் குறித்த காலத்தில் கொண்டுபோய் விடக்கூடிய புகைக் கப்பலல்ல; காற்றினால் உந்தப்பட்டுச் செல்லக்கூடிய பாய்மரக் கப்பல். ஆனதால் வீரசேகரபுரத்தை விட்ட கப்பலானது அன்று பகல் முழுதும் ஓடிக்கொண்டிருந்தது. அஸ்தமனமானவுடன் காற்று மழையும் அதிகமாயுண்டான படியால் திசை தெரியாமல் தியங்கிக் கடலிலே தத்தளித்தது. பின் ஜனங்களெல்லாரும் பயமடைந்து,

"அழுதகண்ணீரும் சிந்திய மூக்குமாய்''

பெருஞ்சத்தமிடத் தலைப்பட்டனர். அந்தக் கப்பலை மாலுமியானவன் தன்னால் கூடியவரையில் நடத்த முயன்றான். அது நிலைதவறிக் கரைக்குச் சமீபமாயுள்ள ஒரு திட்டில் மோதிக் கவிழ்ந்துவிட்டது. அதிலிருந்த ஜனங்களெல்லாரும் சமுத்திரத்தில் வீழ்ந்து நிலை கலங்கி அவஸ்தை யடைந்தனர். சிலர் உயிர்ச்சேதமின்றிக் கப்பல் உடைந்த மரத் துண்டுகளைப் பற்றிக் கரைசேர்ந்தனர்

சிலர் கரை சேரமுடியாமல் மீன்களுக்கு இரையானார்கள்; சிலர் ஆழ்ந்து மூழ்கி இறந்தார்கள். நமது கதா நாயர்களாகிய தருமசீலன் கர்ப்பூரசுந்தரம் இருவரில் கர்ப்பூரசுந்தரனே கப்பலுடைந்த மரத்துண்டைப் பற்றிக் கரை சேர்ந்து கருணாகர புரமென்னும் ஊரிற்சென்று "எனது நண்பன் தருமசீலன் எவ்வாறாயினனே தெரியவில்லையே நான் மாத்திரம் தனியனானேனே! இனி எப்போது அவனைக் காண்பேன்" என்று மனக்கவலையடைந்து "தருமசீலனைக் காணுதவரையில் சுயதேசம் செல்வதில்லை" எனத் தீர்மானித்து அவ்வூரில் ஒரு வீட்டில் சாப்பிட்டுக்கொண்டு தருமசீலனது நினைவாகவே இருந்து வந்தான்.

கப்பலிலிருந்து விழுந்த தருமசீலன் சமுத்திரத்தில் ஆழ்ந்து நிலைகலங்கி உயிரை இழக்குந் தருணமாய் அவஸ்தைப் படுகையில் அப்பக்கமாய்ப் படகில் வந்த செம்படவர்கள் அவனை எடுத்துத் தங்கள் படகிலே போட்டுக்கொண்டு கரைக்குக் கொண்டுபோய்த் தங்களுக்குத் தெரிந்த சிகிச்சைகள் செய்ததுமன்றி நெருப்பு மூட்டிச் சூடு காட்டினார்கள். அச்சூடு பட்டவுடன் அவன் பிரக்ஞையடைந் தெழுந்தான். அப்பால் அவனுக்குச் செம்படவர்கள் வேண்டிய உபசாரங்களைச் செய்து உணவளித்தார்கள். தருமசீலன் சுயநிலையை அடைந்து அவர்களைப் பார்த்து மிகுந்த வணக்கத்துடன் மரியாதை செய்து "எனக்குயிர்ப் பிச்சை தந்த உத்தமர்களே! நீங்கள் செய்த பேருதவிக்கு நான் உங்களுக்கு என்ன கைம்மாறு செய்யப்போகிறேன்" என்று சொல்லி

அன்று முழுவதும் பலவாறுகயோசித்துக்கொண்டிருந்து மறுநாள் அவர்களிடம் விடை பெற்றுத் தன் நண்பன் கர்ப்பூரசுந்தரனைத் தேடலானான்; தேடிக்கொண்டே கருணாகரபுரமென்னும் ஊரிற்குச் சென்று அவ்வூரில் துட்டு வாங்கிக்கொண்டு பிரயாணிகளுக்குச் சாப்பாடு போடுபவளும் முன் கர்ப்பூரசுந்தரத்துக்குச் சாப்பாடு போட்டவளுமாகிய ஒரு கிழவி வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தான்.

அக்கிழவி தருமசீலனை உபசரித்து அவனுக்கு அமுதளித்தாள். அவன் இரண்டொரு நாளங்கிருந்து தன் நண்பனைத் தேடத் தொடங்கி, அக்கிழவியைப் பார்த்து, "அம்மா, இவ்வூரில் ஏதேனும் விசேஷமுண்டா? என் போன்ற வாலிபனெவனேனும் இங்கு வந்தானா?" என்று வினவினான்.

கிழவியும், "மைந்தா, இவ்வூரில் கருணாகரன் என்னும் தனவானுக்குச் சௌந்தரவல்லி என்றொரு பெண்ணுண்டு. அவளுக்குத் தகுந்த கணவன் கிடைக்காததினால் இன்னம் விவாகம் முடியாமல் தனியாகக் கன்னிகாமாடம் ஒன்றில் அநேகந் தாதிகளுடனிருந்து வருகிறாள். இதைத் தவிர, என் வீட்டில் உன்னைப்போல் ஒரு வாலிபன் இவ்வளவு நாளாய்ச் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். அவன் தன் சிநேகிதனை இழந்தவன்போல விசனப்பட்டுக் கொண்டிருந்து ஒருநாள் சௌந்தரவல்லியின் மாளிகை இருக்கும் வீதியின் வழியாய்ச் சென்றான்; இன்னும் வரவில்லை. அவன் எங்கே போனானென்பது தெரியவில்லை. இதையன்றி இவ்வூரில் வேறு

விசேடம் ஒன்றுமில்லை'' என்று சொல்ல, தருமசீலன் கர்ப்பூரசுந்தரனுடைய குறி, குணம், அடையாளம் முதலியவற்றைக் கிழவி மூலமாகவறிந்து "நமது மித்திரன் உயிருடனிருக்கின்றான்'' என நிச்சயித்துச் சந்தோஷமடைந்து யோசிக்கலாயினன்: கர்ப்பூர சுந்தரனே உத்தம குலத்திலுதித்தவன்; சகல நற்குணங்களும் வாய்ந்தவன். அவன் ஒரு தீயசெய்கையும் செய்யத் துணியான். அகஸ்மாத்தாய் அந்தக் கன்னிகையிருக்கும் மாடத்தைப் பார்ப்பதற்காகச் சென்று, அதனால் குற்றஞ் சாட்டப்பெற்றுச் சிறையிலிருப்பானோ? ஒன்றுந் தெரியவில்லையே. எப்படியிருப்பினும், அவனைக் கண்டு பிடித்துக் கூடியசீக்கிரம் நம் தேசத்துக்கு அழைத்துச் செல்லவேண்டும்'' என்று மனதிலெண்ணி யோசிக்கலாயினன்''

கிழவி, வீட்டில் சாப்பிட்டுக்கொண்டிருந்த கர்ப்பூர சுந்தரனும் சில நாள் அங்கிருந்து, தருமசீலனைக் காணவில்லையே என்று கவலை கொண்டிருந்தான். இப்படியிருக்க ஒருநாள் ஊரைச்சுற்றிப்பார்த்து வரலாமென்று எண்ணி வெளியில் உலாவச் சென்றான். நாலா பக்கங்களிலும் சென்று சுற்றிப் பார்த்துக்கொண்டு வரும் போது மேகம்பொருந்திய நிலவளப்பமும் பக்கத்தில் ஓடிக் கொண்டிருக்கும் சிற்றாறும் திவ்விய பரிமளங்களோடு மந்தமாருதம் வந்துலாவும் சோலையும், அதன் நடுவே அழகாயிருக்கும் பங்களா ஒன்றும். விளங்கக்கண்டான்; "ஆகா எவ்வளவு வனப்புவாய்ந்த மாளிகை! வெளியிலிருந்து பார்க்கும் போதே மனத்துக்கு இவ்வளவு

ரமணியமாயிருந்தால்தோட்டத்தின் உட்புறம் எவ்வளவு அழகாயிருக்குமோ? இவர்கள் யாராயிருக்கலாம்; மாளிகையில் பிரவேசிக்க எனக்குச் சுதந்தரமில்லையானாலும் உட்சென்று பார்த்து நேத்திரானந்தம் அடைந்து திரும்பி வருவதில் யாருக்கு என்ன ஆக்ஷேபனை இருக்கப் போகிறது. ஆதலால் நாம் உட்சென்று சிங்காரத் தோட்டத்தின் மத்தியிலுள்ள அழகிய மாளிகையைப் பார்த்து வரலாம்'' என்றெண்ணி, அதினுட் சென்று நாற்புறங்களிலும் சுற்றிப் பார்த்துக்கொண்டுவந்தான். மாளிகை பார்க்கப் பார்க்க மிக்க இரமணீகரமா யிருந்தது. அழகிய விருக்ஷங்கள் நிறைந்து, வாசனை தரும் மல்லிகை, முல்லை, இருவாக்ஷி, சண்பகம், ரோஜா, பாரிஜாதம் முதலிய புஷ்பங்களின் சுகந்தம் பரிமானந்தமாய் வீசியது. கற்பூரசுந்தரம் தன்னை அறியாமல் அங்கேயே சுற்றிக் கொண்டே வந்தான்.

மற்றொருபக்கம் அம்மாளிகையின் சொந்தக்காரனான கருணாகரன் உலாவிக்கொண்டே எதிரில் வந்தான். தனக்கு நேர்முகமாய் வந்து கொண்டிருக்கும் கற்பூர சுந்தரத்தைப் பார்த்து; ''இவன் யார் நம்முடைய சிங்கார வனத்தில் அநுமதியின்றி இவ்வளவு தாராளமாய் உலாவிக்கொண்டு வருபவன்; மிக்க அழகும், அதி பால்யமும், வசிகரத்தன்மையு முடையவனா யிருக்கின்றான்; நேரில் விசாரித் தறிவோம்,'' என்று எண்ணி அவனருகேபோய், ''ஐயா! நீர் யார்? எந்த ஊர்? என்ன காரணம் பற்றி இங்கு வந்தீர்?'' என்று வினவினான். கற்பூரசுந்தரமும் ''ஐயா! நான் திருமங்கை புரியில் வாழ்பவன்; வைசிய

குலத்துதித்தவன்; என் பெயர் கற்பூரசுந்தரம். வியாபார நிமித்தம் நான் என் நண்பன் தருமசீலனுடன் கப்பலிற் பிரயாணம் செய்து வந்தேன். கஷ்டகாலத்தின் கொடுமையால் கப்பல் கவிழ்ந்தது. நாங்களிருவரும் பிரிந்து வெவ்வேறானேம். என்சிநேகிதனைக் காணுமல் கவலைகொண்டு நான் துன்புறுகின்றேன் பொழுது போக்குக்காக, இப்புனிதத் தோட்டத்தின் உட்புகுந்தேன்; நான் போய் வருகின்றேன்; அநுமதியின்றிப் பிரவேசித்ததற்காக மன்னிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்'' என்ருன்.

கருணுகரன் அவனுடைய மரியாதைச் சொற்களையும், நல்ல குணங்களையும், இனிய மொழிகளையும் பார்த்து, அவனிடம் அன்பு கொண்டு ஆதரவாய்ப்பேசி, தன்மாளிகைக்கு அழைத்துச் சென்று உபசரித்துச் சில நாள் வைத்திருந்து, அவனுடைய குலம், கோத்திரம் முதலிய குணனுபவங்களை அறிந்து, தனது அருமைப்புதல்வி சௌந்தரவல்லியைத் திருமணஞ் செய்து கொடுத்துச் சந்தோஷமாய்த் தன்னுடன் அவனை இன்னும் சிலநாட்கள் வைத்திருந்தான்.

கற்பூரசுந்தரம், சௌந்தரவல்லியுடன் மிக்க அந்நியோன்யமாய் வாழ்ந்து வந்தாலும், நண்பன் தருமசீலனை மறவாமல், அவனைக் காண அவா மிகவும் உடையவனுய்க் கவலை கொண்டிருந்தான்.

இவன் இவ்வண்ணமிருக்க, இவைகளை அறியாத தருமசீலன் "அந்தோ, நாம் எவ்வாறு காண்பது? எங்குச் சென்று தேடுவது ? சௌந்தரவல்லியின் மாளிகைக்குச்

சென்றிருந்தால் நாம் எவ்வாறு அவளைக் காணமுடியும்? அந்த இடமோ செல்வவந்தனுடைய புதல்வியின் அந்தப்புரம். அங்குச் சென்று எப்படி அவளைப்பற்றித் துப்பு விசாரிப்பது?" என்று ஆலோசித்து முடிவில் "ஒருவளையற்காரன் போல வேடமணிந்தால் ஸௌந்தரவல்லி இருக்குமிடம் போய்க் கற்பூரசுந்தரத்தைப்பற்றி அறியலாம்" என்று தீர்மானித்து வளையல் விற்பவனைப்போல் அநேக வளையல்களைத்தோளில் போட்டுக்கொண்டும் சில வளையல்களைக் கையில் வைத்துக்கொண்டும் தெருக்கள் தோறும் வளையல் விலை கூறிக் கொண்டே சென்று ஸௌந்தரவல்லியின் பங்களாவை யடைந்தான்.

இதைப் பார்த்த தாதிகள் வளையற்காரனை நோக்கி, "அடே வளையற்காரா! உன்னிடம் என்ன வளையலிருக்கிறது? என்ன விலைக்குக் கொடுப்பாய்?" என்று வினவ, அவன் கோபங் கொண்டவன் போல் "போங்கடி போங்கள், புத்திகெட்ட கழுதைகாள்! நீங்களா வளையல் அருமை அறிந்து என்னிடம் வாங்குகிறவர்கள்?

'கழுதை அறியுமா கந்தப்பொடி வாசனை?'

என்றபடி உங்களுக்கு அதனுடைய உயர்வு தெரியுமா? என்னிடமுள்ள வளையல்களை இராஜ புத்திரிகள், செல்வவான் புதல்விகள் இவர்களே அருமை அறிந்து வாங்கதக்கவர்கள்" என்று சொல்ல, அவர்கள் தங்கள் எஜமானியிடம்போய் "அம்மணி, விருத்தாப்பிய வளையற்காரனொருவன் வந்திருக்கிறான். அவன் வளையல்களை எங்களிடம் காட்டமாட்டேன்'என்றும் தங்களிடமே காண்பிக்கவேண்டு மென்றும் சொல்லுகின்றான். ஆனால் அவன்

பார்வைக்கு மட்டும் விருத்தாப்பியன்போல் இருக்கிறானே யன்றி, முகக்குறிகளைப் பார்க்குமளவில் நல்ல தேஜஸோடுனும் இராஜவடிவத்துடனு மிருக்கின்றான்; எங்களுக்குச் சரியான பதில் சொல்லாமல் மௌனமாகவும் பேசுகிறான்'' என்று சொன்னார்கள். சௌந்தரவல்லி ஆச்சரியமுற்று "அத்தன்மையனை நேரிற் பார்த்து அவ்வளையல்களை வாங்கவேண்டும். ஆனதால் அவனை இங்கு அழைத்து வாருங்கள்'' என்று சொன்னாள். தாதிகள்சென்று அவனை அழைக்க, அவன் விருத்தாப்பியன் போல் கையில் கோல் பிடித்து ஊன்றிக்கொண்டு மெதுவாக நடந்து சௌந்தரவல்லி யிருக்கும் அந்தப்புரத்திற்குப் போனான். அங்கே கற்பூரகந்தா மிருக்கக் கண்டு சந்தோஷமடைந்து உட்கார்ந்தான்.

சௌந்தரவல்லியும் வளையற்காரனை நோக்கி, "நீ என்னென்ன வளையல்கள் வைத்திருக்கின்றாய்? அவைகளின் விலை யென்ன? என்னுடைய தாதிகளை யேன் மரியாதை யின்றிப் பேசினாய்?'' என்று கேட்க, அவன்பயந்தவன் போல் "அம்மணி, என்னிடம் அநேக வளையல்களிருக்கின்றன. அவைகளுடைய அருமையைத் தாதிகள் அறியமாட்டார்களாதலால் கோபத்துடன் பேசினேன். மன்னிக்க வேண்டும்; என்னிடமுள்ள வளையல்களின் பெயரையும் உயர்வையும் சொல்வதானால் ஆயிரம்நாவைப் படைத்த ஆதிசேஷனாலுமுடியாது. ஆயினும் தாங்கள் விருப்புற்றுக் கேட்டமையால் அவைகளின் பெயரிற் சிலவற்றைச் சொல்லுகிறேன். சிறிது கவனித்துக்கேட்டு, அந்த வளையல்களை வாங்கித் தங்கள் கரத்திலணிந்து

கொள்ளவேண்டும்'' என்று வெகு மரியாதையுடனும், வாக்கு சாதுரியத்துடனும் கூறி, வளையல் மூட்டைகளைக் கீழே வைத்துக் கருப்புக்கம்பளியை விரித்து அதில் தானுட்கார்ந்து கொண்டு தலையில் கட்டிய தலைப் பாகையுடன் தோளில் மாட்டியிருந்த பையினுள்ளிருந்து ஒரு ஜோடி வளையல்களைக் கையிலெடுத்து "அம்மணி, இதோ இந்த வளையல்களைத் தாங்கள் கரத்தில் வாங்கிப் பார்த்து இவற்றினுடைய சிறப்பைச் சற்றுக் கவனியுங்கள்'' என்று சொல்லி வளையல்களைச் சௌந்தரவல்லியிடம் கொடுக்க, அவள் அடங்கா மகிழ்ச்சிகொண்டு வளையல்களை வாங்கிப் பார்த்து ஆச்சரியமடைந்து, "இவ்வளவுதானா உம்மிடமிருக்கும் வளையல்கள்? அல்லது இன்னம் வைத்திருக்கிறீரா?'' என்று வினவினள்.

தருமசீலனாகிய வளையற்காரன் "அம்மணி என்னிடத்தில் அநேக வளையல்களிருக்கிறன. ஒவ்வொன்றுக்கும் பெயர் சொல்வதானால் எத்தனை நாளானாலும் சொல்லி முடியாதென்று ஆரம்பத்திலேயே சொன்னேனே! கவனிக்கவில்லைபோலும்! ஆனாலுமென்ன! நான் வியாபாரி யாதலால் யார் எதை எவ்விதம் கேட்டாலும் அவர்களிஷ்டம்போல், சொல்லித் திரவியம் சம்பாதிக்க வேண்டியவன். அன்றியும், 'நாய் வேஷம் போட்டால் குலைத்துத்தானே தீரவேண்டும்' என்றபடி வியாபாரத் தொழிலில் சரக்கின் சிறப்பை எடுத்துக் காட்டுவது வியாபார முறையாதலால் இன்னமுஞ் சொல்லுகின்றேன். ஆனால் பொருத்தமில்லாத நாரியர்கள் அணியும் சில வளையல்க ளிருக்கின்றன. அவைகளையும்

சொல்லுகின்றேன். ஏழையாகிய என்னிடத்து ஏதே னும் சொற்குற்ற மிருப்பினும் பொறுத்துக் கவனிக்க வேண்டும்'' என்று சொல்லச் சௌந்தரவல்லியும், அவ னது வாக்குசாதுரியத்தைக் கேட்டுச் சந்தோஷமடைந்து "வளையல்களின் பெயரைக்கொஞ்சம் சொல்லும்'' என்று கேட்டாள்.

அப்போது சுந்தரசுந்தரம் வளையற்காரன் பேசும் சாமர்த்தியத்தையும் அவனுடைய திவ்யசுந்தர முகத் தையும் கண்டு "இவன் பரம்பரை வியாபாரியின் புதல் வனைப்போற் காணப்படுகின்றான்; நம் நண்பன் தரு மசீலன் போலவு மிருக்கின்றான். நாமோ தருமசில னைப் பிரிந்து வெகுநாட்களாயின! அவனை இதுவரை யிலும் காணாதிருந்தோம். அவனே இவ் வூருக்கு வந்து நம்மை விசாரித்துக்கொண்டு இவ்வேஷத்துடன் வந்திருக்கிறானோ கவனிப்போம்'' என்று ஆலோசித்த வண்ணம் அவனையே பார்த்துக்கொண்டிருந்தான். தரும சீலனாகிய வளையற்காரனும் சௌந்தரவல்லியின் விருப் பத்தின்படி வளையல்களின் பெயரைக் கூறலானான் —

### கண்ணிகள்

குண்டுணிபேசிக் குக்கல்போற்றிரியும் குணமிலாளணிவளையல்
பொல்லாக்குபேசிப் போர்தினம் விளைக்கும் பூவையரணி வளை
[யல்
மாமன் மாமியை மதித்திடா மூர்க்க மங்கைய ரணிவளையல்
நிசமென்பதையே நினைத்திடாத் துஷ்ட நீலியரணிவளையல்
உற்றநல்லன்பர் உறவை யறுத்திடும் உதாசினி யணிவளையல்

என்று சொல்லி முடித்து, "அம்மணி, இவையெல்லாவற்றினும் உயர்வான இன்னொருவகை விளையவிருக்கிறது. அதன் பெருமையைச் சிறிது சொல்லுகின்றேன்; கவனித்துக் கேளுங்கள்'' என்றான். கற்பூரசுந்தரமும் அவனது வார்த்தையை எதிர்பார்த்துக்கொண்டு மௌனமாயிருந்தான்.

அகவல்

"சிநேகித ரிருவர் சேர்ந்தொரு தினத்துத்
தேசத்தை விட்டுத், தீவுகள் கடந்து
வீரசே காபுரம் வியப்புடன் வந்து
பாங்கா யொருவனைப் பண்புடன் கலந்து
அன்ன வனுடனே அநேக தொழில்களை
நலமுடன் நடாத்தி நயமிகு பொருள்களை
அங்கவ னிடம்வைத் தாதி யிருவரும்
விஜய நகரத்தின் வியப்பினைப் பார்க்கக்
கப்பலி லேறிச் கடலிற் சென்றனர்
அப்பெருங் கப்பல் ஆழ்ந்ததவ் வாழியில்
தவித்தன ரன்று சகல ஜனங்களும்
நேசர்க ளிருவரும் நீரின் மிதந்து
ஒருவருக் கொருவர் உதவி யின்றியே
பிரிந்துவெவ் வேறுய்ப் பெருமா னருளால்,
கரையினி லேறிக் கலக்கமுற் றஞ்சி
நண்பரி லொருவன் நாடெங்குஞ் சுற்றி
தேடி யலைந்து திரியமற் றொருவன்
நாடு நகரமும் நலமிகு தந்தைதாய்
வீடுதன் மனைவி வேண்டிய பந்துவும்
இஷ்ட மித்திரர் இன்னு மநேகரை

மறந்ததன் இச்சைபோல் வழுக்கிடு வேனே
மனக்க நினைத்து மனமகிழ் கொள்ளும்
மங்கையர் தாமும் செங்கையி லணியும்
இங்கித வளையல் இதுவிது வாமே''

என்றவுடனே கற்பூரசுந்தரமும் தருமசீலனென்றுணர்ந்து "மித்ரா! என்னைப் பார்ப்பதற்கு எவ்வளவு பிரயாசைப்பட்டு இவ்வேடத்துடன் இங்கு வந்தாயோ'' என்று கூறியவாறே விரைவில் அருகேகி இருகையாலும் அவனையணைத்து மார்புறத்தழுவி உள்ளங்கசிந்து கண்ணீர் பெருக்கினன். தருமசீலனும் கசிந்துருகிக் கண்ணீர் பெருக்கினன். இருவரும் ஒருவாறு தேர்ந்து அவரவர் அடைந்த அவஸ்தையை வெளியிட்டுக் கொண்டனர். அப்பால் கற்பூரசுந்தரம், "மித்ரா!

'நேசனெப்கா ளுவிடத்து நெஞ்சார வேதுதித்தல்
ஆசானை எவ்விடத்து மப்படியே—வாச
மனையாளைப் பஞ்சணையில் மைந்தர்தமை நெஞ்சில்
வினையாளை வேலை முடிவில்.''

அன்புவைத்துப் புகழவேண்டுமென்ற உண்மையானது உன்னிடத்தில் 'உள்ளங்கை நெல்லிக்கனிபோல்' விளங்குகிறது.

'உள்ளன்பிலாத பேர் தித்திக்கவே பேசி
உறவாடு முறவு முறவோ?'

சிநேகிதரென்றால் எல்லாரும் சிநேகிதர்களாய் விடுவார்களா? என்மீது இவ்வளவு அன்பு வைத்து நானிருக்கும் இடமறியாமல் தேடி யலைந்து இவ்வளவு சரீரப் பிர

யாசையுடன் பாடுபட்டு என்னைக் கண்டுபிடித்த உனக்கு நான் என்ன கைம்மாறு செய்ய வல்லேன்?'' என்று சொல்லித் தருமசீலன் அடைந்த அவஸ்தைகளுக்காக மனந்தளர்ந்து விசனப்பட்டான். இப்பொழுது செளந்தரவல்லி பெருமகிழ்ச்சியுடன், "இனி விசனமேன்? ஸ்நானஞ் செய்து நேமநிஷ்டைகளை முடித்துக்கொள்ளுங்கள். போஜனகாலமாயிற்று. மற்றைய விஷயங்களைப் பிறகு பேசிக்கொள்வோம்'' என்று உபசரித்தாள். அவர்கள் உடனே ஸ்நானத்துக்குச் சென்றனர்.

ஸ்நானஞ் செய்தபின் அவர்கள் அறுசுவையுடனமுதருந்தித் தாம்பூலம் தரித்துச் சந்தோஷத்துடனிருந்து பலவிதமான பேச்சுகளைப் பேசிக் கொண்டிருக்கையில், செளந்தரவல்லி தருமசீலனை நோக்கி, "வளையல் வியாபாரம் எங்கே கற்றுக்கொண்டீர்கள்.?'' என்று கேட்டாள். தருமசீலன் "செளந்தரவல்லியே, என் நண்பன் உன்னிடமிருப்பதை யறிந்து நான் இங்குவர, அதற்கு வேண்டிய யுக்தி செய்து இவ்வளையல் வியாபாரத்தைக் கற்றுக்கொண்டேன். அவ்வித சாமர்த்தியம் எனக்குண்டானதற்குக் காரணம் நீங்களிருவருந்தான்'' என்று சொன்னான். கற்பூரசுந்தரமும் செளந்தரவல்லியும் தருமசீலனது வார்த்தைகளைக் கேட்டுச் சந்தோஷமடைந்தார்கள்.

---

## அத்தியாயம் 7

இவ்வாறாகச் சிலநாட்கள் சென்றபின் ஒருநாள் தருமசீலன் கற்பூரசுந்தரத்தை நோக்கி, "நாமிங்குத் தாமதித்திருப்பது அழகன்று. நமது தேசம் விட்டுப் புறப்பட்டு நெடுநாட்க ளாய்விட்டன. தாய் தந்தையர்கள் கவலையடைவார்கள். கூடிய சீக்கிரத்தில் போய்ச்சேரவேண்டும்" என்று சொன்னான். கற்பூரசுந்தரமும் அதற்குச் சம்மதித்துச் சௌந்தரவல்லியை நோக்கி, "பெண்ணே நாம் சொந்த தேசம்போய்ச் சேரவேண்டும். எப்பொழுது பிரயாணமாகலாம்? உன் அபிப்பிராயம் எப்படி?" என்று கேட்டான். சௌந்தரவல்லியும் "நாதா! தங்கள் வார்த்தைக்கு மறுவார்த்தை உண்டோ? என் தாய் தந்தையரிடம் விடைபெற்றுச் செல்வோம். நீங்கள் அனுமதிபெற்று வாருங்கள்" என்று சொன்னாள். அவ்வாறே கற்பூர சுந்தரமும் தருமசீலனுடன் கருணாகரனிடம் போய்த் தங்கள் அபிப்பிராயங்களைக் கூறித் தன்னைநாடித் தன் நண்பன் வந்திருப்பதையும் தெரிவித்துத் தங்களை அனுப்பும்படி விடை கேட்டான். அப்பொழுது சௌந்தரவல்லியிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அதைப் பார்த்த கருணாகரன் தருமசீலனை மிக்க அன்போடு உபசரித்து வேண்டிய ஆடையாபரணங்களும் கொடுத்துப் புதல்வி சௌந்தரவல்லியையும் கற்பூரசுந்தரத்தையும் மிக அன்பாய் உபசரித்து எல்லோரையும் பிரயாணப்படுத்தி அனுப்பிவைத்தான்.

அவர்கள் பெரு மகிழ்ச்சியுடன் சௌந்தரவல்லியை அழைத்துக்கொண்டு வீரசேகரபுரம் சென்று முன்னர்க் கூட்டுவியாபாரம் செய்த தநபாலனைக் கண்டு தாங்கள் போய்வந்த சமாசாரங்களை யெல்லாம் விவரமாகச் சொல்லி இரண்டொரு நாட்கள் அங்கிருந்து விருந்து முதலியவைகளா லுபசரிக்கப் பெற்று வியாபாரத்தொழிலில் கிடைத்த திரவியங்களில் தங்கள்பாகத்துக் குள்ளவைகளை வாங்கிக்கொண்டு தநபாலனிடம் விடைபெற்றுச் சொந்த தேசத்திற்குப் பிரயாணமானார்கள்.

செல்லும் வழியில் சூரியாஸ்தமனமாகும் தருணத்தில் மின்னல் காற்று இடி முழக்கத்தோடு காரிருள் சூழ்ந்து கொண்டமையால் கல், மரம், முள், செடி முதலியவைகளில் அடிபட்டு அவர்கள் கால்களில் இரத்தம் பெருகியது. வழி தெரியாமல் தியங்கி மனக்கிலேசமுற்று "எவ்வாறு வழியைக் கண்டு பிடிப்பது, யார் மூலம் தெரிந்து கொள்வது? இவ்வாரண்யத்தில் துஷ்டமிருகங்களும் அவைகளுடைய கோரமான தொனியும் புலப்படுகின்றனவே யன்றி வேறு மனிதர்களாவது அவர்களுடைய வார்த்தைகளாவது நமக்குப் புலப்படவில்லையே! இதற்கு யாது செய்வோம்" என்று மதிமயங்கிப் பலவாறு அவர்கள் யோசித்துப் பின்னர் சமீபத்தில் தெரியும் ஒரு வெளிச்சத்தைப் பார்த்து "மனித சஞ்சாரமில்லாத இடத்தில் வெளிச்சமிருப்பதரிது; அவ்வெளிச்சமுள்ள இடம் ஒரு பட்டணமாகத்தான் இருக்கவேண்டும். நாம் அவ்வெளிச்சத்தைப் பற்றிச் சென்றால் இத்துஷ்ட மிருகங்கள் உள்ள ஆரண்யத்தைவிட்டு நீங்கிச் சற்சனர்கள்

உள்ள வரை அடைந்து இன்று இராப் பொழுதைப் போக்கிக் காலையில் நம் சொந்த தேசத்துக்குப் பிரயாண மாகலாம்'' என்று தீர்மானித்து அவ்வெளிச்சமிருக்கும் திக்கை நோக்கிச் சென்றார்கள்.

அவ்வெளிச்சமானது பார்வைக்குச் சமீபத்திலிருப் பதாய்த் தோன்றினாலும் இவர்கள் செல்லச்செல்ல அவ் வெளிச்சமும் செல்வதாகவே தோன்றியது. இவர் கள் பகல்முழுதும் நடந்து அலுத்திருப்பதாலும் ஆகார மின்றி இருப்பதாலும் இருள் சூழ்ந்த மழை மிகுதியால் வழிதெரியாமல் அல்லற்பட்டு அலைகின்றமையாலும், இம்மாதிரி கஷ்டத்தை எப்போதும் அடைந்ததில்லை யாகையாலும், ஸீதையானவள் ஸ்ரீராமருடன் வனவா சம் செல்லுங்காலத்தில் கோட்டையை விட்டு வெளியில் வந்தவுடன் "இதுதான் ஆரண்யமோ'' என்று ஸ்ரீராம னைக் கேட்டதுபோல் மனித சஞ்சாரமுள்ள இடத் தைக் காணவேண்டு மென்ற ஆவல் மிகுதியால் வெளிச்ச மிருக்குமிடம் இவர்களது நோக்கத்துக்கு வெகு தூரத்திலிருப்பதாய்த் தோன்றியது. அவர் களும் அவ்வெளிச்சத்தை உடனே போய்க் காணவேண்டு மென்ற எண்ணமிகுதியால் வழியில் நேரும் கஷ்டங்க ளைக் கவனியாமல் மரத்தின் வேரெனமதித்து மலைப் பாம்புகளையும் மிதித்துக் காலிடறிப் புலி, கரடி முதலிய துஷ்டமிருகங்கள் மீது வீழ்வதும் அவைகள் பயந்து கர்ச்சித்துக்கொண்டு ஓடுவதைப் பார்த்துத் திகிலடைவது மாய் நடந்து வெளிச்சத்தின் சமீபத்தில் சென்று பார்த் தார்கள்.

இவர்கள் எவ்வளவு ஆவலோடு மனித சஞ்சார முள்ள பட்டணமென்று நினைத்துவந்தார்களோ அதற்கு முற்றும் விரோதமாய் அந்த இடம் பிரேதங்கள் வெந்து கொண்டிருக்கிற சுடுகாடா யிருந்தது. அதின் பக்கத்தில் கருத்த மேனியும் பருத்த சரீரமும் விரிந்த சடையும் கோரப் புல்லும், குரூரச் சிந்தையும் கோபக் குறிப்பு முடைய இராட்சகன் ஒருவன், வெந்துகொண்டிருக்கிற பிரேதங்களைத் தன் முன்னிழுத்துப் பக்ஷித்துக் கொண்டிருக்கப் பார்த்துப் பெரும் பீதியடைந்தவர்களாய், "பட்டணமென்று மதித்து இவ்விராக்கதன் இருக்கும் இடத்திற்கு வந்துவிட்டோமே! இவன் நம்மைப் பார்த்து யாது செய்வானோ தெரியவில்லையே!' என்று எண்ணித் திகைத்தார்கள்.

ஆனால் முன்னொரு காலத்தில் ஒரு சக்ரவர்த்தி யானவர் சனீச்வரனது கொடுமையால் நாடுநகரம் வீடு வாசல் மனைவி மைந்தர் முதலானவர்களை இழந்து ஆயர் பாடியில் சேவகத்துக் கமர்ந்து துக்க சாகரத்திலாழ்ந்து தன்னந் தனியனாய்ச் சயனித்துக் கொண்டிருக்கையில் இன்னமும் கெடுதல் வரப்போகிறதென்று ஒரு கெவுளி சொல்லியது. அதைக்கேட்டு நகைத்து "அடடா இன்ன மும் எனக்கு யாது கெடுதல்வரவேண்டியிருக்கிறது? நாடு நகரம், வீடுவாசல், பெண்டுபிள்ளை, ஆடையாபரணம், இஷ்டமித்திரர், பந்து ஜனங்கள், சகலரையு மிழந்து தன்னந்தனியனாய்ப் படுக்கப் பாயின்றி உடுக்கத்துணியு மின்றிக் குடிக்கக் கஞ்சியற்று ஆயர்பாடியில் அறைவயிற் றுக் கஞ்சிக்கு ஆடுமேய்த்துக்கொண்டு காட்டில் கட்டாந்

தரையில் கம்பளத்தின்மீது சயனித்துக் காவல்புரிந்து கொண்டிருக்கும் எனக்கு இனிக் கஷ்டமும் நேரவிருப்ப துண்டோ? இதைப்பார்க்கிலும் வரவேண்டிய கெடுதல் வேறிருக்கிறதா? அப்படி வந்தாலும் இவைகளைப் பார்க் கிலும் வருங்கஷ்டம் பெரிதில்லை'' என்று எண்ணிக் கொண்டார். அதுபோலத் தருமசீலனும்,—

''தலைக்குமேற் போகும் வெள்ளம்
சாண்போனாலென்ன முழம் போனாலென்ன''

என்று தைரியமடைந்து "அடே துஷ்டா, நீ யாவ னடா? நீ யேன் இவ்வாறு மனிதர்களுக்குப் பொருந் தாத செய்கைகளைச் செய்து கொண்டிருக்கின்றாய்? எனக்கேட்க, பிரேதபக்ஷணம் செய்யும் ராக்ஷஸன் அஞ் சாநெஞ்ச முடையவனாதலால், பயங்கரமான குரலுடன் "யாரடாவன் நீ? நரமாம்ஸ பக்ஷணத்தின் மீது விருப்புற்று நீயும் வந்தனையோ? எவ்வளவோ காலமாய்த் தன்னந்தனியனாய் இப்பிரேதங்களைத் தின்று கொண்டி ருந்த எனக் கிடையூறாய் வந்து நீயும் இம்மாதிரி நரமா ம்ஸ பக்ஷணம் செய்வாயானால் என் கதி என்ன ஆகி றது? ஆகையினால் உன்னைக்கொன்று பக்ஷணம் செய்து விட்டால் பின்னர் எப்போதும் தனியனாகவே இப்பிரே தங்களைத் தின்று கொண்டிருப்பேன்'' என்று கூறித் தருமசீலன் மீது பாய யத்தனித்தான்.

"கடுகு சிறுத்தாலும் காரம் போகுமா?''

என்றபடி தருமசீலனும் கொஞ்சமும் அஞ்சாமல் அவனை எதிர்த்துச் சமர்புரியத் தொடங்கித் தனது

கட்கத்தினுல் அத்துஷ்டனை ஓரே வீச்சாய் வீசி அவனுடைய சரீரத் துண்டங்களை அக்கினியில் எரித்துச் சாம்பராக்கினுன். பிறகு மூவரும் சமீபத்தில் தெரிந்த சாவடியில் போய்த்தங்கி வெகு தூரம் அலேந்து வந்த சிரமத்தினுல் அயர்ந்து நித்திரை செய்யலானுர்கள்.

ஆனுல் அவர்கள் ஆகாரமில்லாமலும் தாய்தந்தையர்களைப் போய்ப் பார்க்கவேண்டு மென்ற கவலை மிகுதியினுலும் வழியில் நேர்ந்த கஷ்டநஷ்டங்களினுலும் துஷ்ட மிருகங்களை நினைக்குந்தோறும் உண்டாகும் திகிலினுலும் நன்றுய்த் தூங்கவில்லை; சிரமபரிகாரத்திற்காகச் சிறிது அயர்ந்தார்கள்.

"அன்னமிக உண்பானும் ஆடையழுக் காவானும்
மின்னெளிபோற் பல்லை விளக்கானும்—சாலக்
காலை துயில்வானும் கற்பனைவீண் சோல்வானும்
ஆலயமாம் மூதேவிக் கைந்து"

என்றபடி அன்னமிக உண்ணல் முதலியன செய்வது உத்தமர்களுக்குக் கூடாதென்பதை அறிந்து அதிகாலையிலெழுந்திருந்து காலைக்கடன்களை முடித்துக்கொண்டு தந்தசுத்தி செய்து ஈச்வரனைப் பிரார்த்திததார்கள்; ஆனுல் ஆகாரமில்லாத களைப்பால் நடக்கச் சக்தி யற்றவர்களா யிருந்தார்கள். இச்சமயம் கற்பூரசுந்தரத்தை நோக்கித் தருமசீலன், "நண்ப! சௌந்தரவல்லியுடன் நீ இங்கேயேயிரு. நான் இப்பட்டணத்திற் குட்சென்று ஏதேனும் உணவுகளைச் சேகரம் செய்துகொண்டு வருகிறேன்" என்று விடைபெற்றுச் சிறிது தூரம் நடந்து

சோமசேகர பட்டணத்திற்குள் நுழைந்து கடைவீதிகள் உள்ள வழியை விசாரித்துக்கொண்டே நெடுந்தூரஞ் சென்றான்.

அவ்வூர்க் குணசேகரன் புதல்வி அமிர்தவல்லி என்பவள், தன் வீட்டு உப்பரிகையில் நின்று பலகணி வழியாய்த் தருமசீலனைப் பார்த்து, "ஆகா! இத்தனை வடிவமுள்ள மனிதனு மிவ்வுலகி லிருக்கின்றானா? என்ன லட்சணம்! என்ன தேஜசு! என்ன ரூபம்! அருந்தவஞ் செய்த ஆரணங்குக்கே இவ்வாடவன் அமைவான்! நான் இவனை அடைந்தால் பாக்கியஞ் செய்தவளாவேன்! நமது பிராப்தமெப்படியோ?" எனப் பலவாறு எண்ணித் தன துயிர்ப் பாங்கியை யழைத்து, "அடி தோழி! அதோ செல்லும் ஆடவரைச் சீக்கிரமாய் என் தந்தையிடம் அழைத்து வந்து அவரைப் பற்றி என் தாய்க்குத் தெரிவித்து எனக்கு அவரை மணமுடிக்கவேண்டும்" எனச் சொன்னாள். அவள் அவ்வண்ணமே சென்று தருமசீலனை நோக்கி, "ஐயா! நீர் யார்? மிகக்களைப்பா யிருக்கின்றீரே! உமக்கு யாது வேண்டும்? உமது வரலாறு யாது?" என்று வினவினாள்.

தருமசீலன், "நான் அன்னிய தேசத்திலுள்ளவன்; உணவுகள் சேகரஞ் செய்யவே இங்கு வந்தேன். அவைகள் அகப்படுமிடந் தெரியவில்லை. இருக்குமிடம் இயம்பினால் உன்னைப் பேருபகாரஞ் செய்த புண்ணியவதியாய் நினைத்துக்கொள்வேன்" என்றான்.

தாதி "ஐயா! நீர் இடந்தெரியாமலலையவேண்டாம். என்னுடன் வாரும்; நான் உணவு சேகரஞ்செய்து தருகின்றேன்" என்றியம்ப, கள்ளங்கவடில்லாத தருமசீலன் அவ்வார்த்தையை உண்மையென்று நம்பி அவள் பின் சென்றான். அத்தாதி அவனைத் தன் எஜமானனிடம் கொண்டுபோய் விட்டாள்.

தருமசீலனை இப்பொழுது தன் கண்களும் மனமுமகிழக்கண்ட அமிர்தவல்லி, தன் அன்னையை அழைத்து, "அம்மா, எனக்கு விவாகஞ் செய்விக்க வரனுக்கு அலைகிறீர்களே! நீங்கள் எல்லா விதங்களிலும் உயர்வென்று தேடிவரும் வரன் என் மனத்திற்குப் பிடித்தவனாயிருந்தால் மாத்திரம் எங்களுக்குள் அந்யோந்யவாழ்வு ஏற்படும்; இல்லாவிட்டால் எலியும் பூனையுமாய் வாழ்க்கையை நடத்த நேரிடும். ஆதலால், இதோ இப்பொழுது தந்தையாரிடம் வந்திருக்கும் வாலிபரையே எனக்கு நாயகனாகப் பேசி மணஞ் செய்வியுங்கள். அவரைப் பார்த்தால் சகல சற்குணங்களும் வாய்ந்தவராயிருப்பாரென்று தெரிகிறது. உயர்ந்த குலத்தவராகவும் காணப்படுகிறார். அம்மா, நீங்கள் இப்பொழுதே தந்தையிடம் சென்று என் கருத்தை அவருக்குத் தெரிவியுங்கள்" என்றாள்.

அமிர்தவல்லியின் அன்னை, "அமிர்தவல்லி, நீ நன்றாய்க் கற்றுணர்ந்தவள்! நல்ல புத்திசாலி; பெரியோர் வாக்கிய பரிபாலனம் செய்யும் குணவதி! உனக்கு நான் சொல்லவேண்டுமா? கலப்பு விவாகம், காந்தர்வ விவாகம், ஜாதிசமத்வம், சமபந்தி போஜனம் முதலியவைகளெல்

லாம் வாய்ப் பேச்சிலும் பத்திரிகைகளிலும் வெளிவரு கின்றனவே தவிர, இன்னும் அனுஷ்டானத்திற்கு வர வேயில்லை.

'அசலாத்துப் பிராமணா பாம்பைப் பிடியும்
அது அல்லித்தண்டுபோல் குளிர்ந்திருக்கும்'

என்பதுபோல், எல்லோரும் வாய்வேதாந்தம் பேசிப் பிற ருக்குபதேசித்து வருகிறார்களே தவிர இதுவரை ஒருவ ரும் துணிந்து எதையும் செய்துகாட்டவில்லையே! நீ கொஞ்சம் படித்துத் தேர்ந்துவிட்டபடியால் நவீன நாக ரிகப் பித்துப் பிடித்தவள் போல் பேசுகிறாய்! இப்படிப் பட்ட காரியங்களில் நாம் துணிவது தவறு. துணிந்து செய்தோமானால் உலகில் நம்மவர் நம்மைப் பழிப்பர்; இழிவு படுத்துவர்; சில சமயம் திட்டவும் செய்வர். ஆகையினால் எதையும் நிர ஆலோசித்த பின்பே செய் தல் வேண்டும். அவசரப்படலாகாது" என்றாள்.

அமிர்தவல்லி, "அம்மா, நான் வரம்பு கடந்து எதையும் பேசவில்லை; நவீன நாகரிகத்தில் மயங்க வில்லை. இவர் எனது பார்வைக்கு நமது குலத்து வாலிப ராயும் அறிவாளியாயும் காணப்படுகிறபடியால் இவரைப் பற்றித் தந்தையினிடம் தெரிவிக்கும்படி தங்களை வேண் டிக்கொண்டேன். தாங்கள் இவருடைய குலம் கோத் திரம் கேட்டுத் தெரிந்து மனத்துக்குத் திருப்திகரமாயி ருந்தால் பேசி மணஞ் செய்வியுங்கள். நான் தற்கால நாகரிகர்களைப்போல், எந்த ஜாதியினராயிருந்தாலும் என் இஷ்டப்படியே மணஞ்செய்விக்க வேண்டுமென்று பிடி

வாதம் செய்யமாட்டேன்; என்னிஷ்டம்போல் நடக்கவும் மாட்டேன்; இரண்டெழுத்துப் படிக்கத் தெரிந்துவிட்டதென்று இறுமாப்புக்கொள்ளவுமாட்டேன். பெண்கள், சிறு வயதில் தாய்தந்தையர்க்கும் விவாகமானபின் கணவனுக்கும் அப்பால் புதல்வர்களுக்கும் அடங்கி நடக்கவேண்டியவர்களே தவிர தாங்களாக எதையும் நினைத்தபடி செய்யச் சுதந்தரமற்றவர்கள் என்பதை நான் அறியாதவளா? ஏதோ என் மனம் விரும்பியதைத் தங்களிடம் கூறினேன். என்னுடைய நல்வாழ்வைக் கோருகிறவர்களாகிய உங்களுக்கு நான் அதிகம் சொல்லவேண்டுமோ?'' என்று கூறினுள்.

அன்னே, ''பெண்மணி, உன்னுடைய கௌரவமான இந்த வார்த்தை என் மனத்தில் மட்டற்ற மகிழ்ச்சியைத் தருகிறது! நீ உன் வாழ்வில் பெருமையடைவாய். குலப் பெருமையை இழக்க மனந்துணிபவர் இழிவானவராவர். பெண்கள் அடக்கமும் நாண முடையவரா யிருந்தால்தான் பெருமை யுண்டாகும். அடக்கமும் நாணமுந்தான் அவர்களுக்கு அணிகலன்கள். அம்மணி, நீ கவலைப்படாதே! உன் மனவிருப்பப்படி உனக்கு நாயகன் அமைவான். இப்பொழுதே உன் தந்தையினிடம்போய் அவரிடம் உன் விருப்பத்தைச் சமயம் பார்த்துத் தெரிவித்து வந்திருப்பவருடைய குலகோத்திரம் விசாரிக்கும்படி செய்கிறேன். குலகோத்திரம் சரியாயிருந்தால் மற்றவைகளைப்பற்றி விசாரிக்கவேண்டாம்'' என்று கூறி அவ்விடத்தை விட்டகன்று தன் நாயகனிடம் சென்றுள்.

அங்கே குணசேகரனும் தருமசிலனும் சம்பாஷித்துக் கொண்டிருப்பதை அவன் கண்டான்; கண்டதும் சற்றுமறைந்து நின்று கவனித்தான். குணசேகரன், தருமசிலனைப் பார்த்து, "ஐயா, நீர் எந்த ஊர்? எங்கே வந்தீர்? தேகம் மெலிவுற்றிருப்பதைப் பார்த்தால் மிகவும் கவலையுடையவரா யிருப்பதாக அறிகிறேன். கவலைக்குக் காரணமென்ன?" என்று கேட்டான்.

தருமசிலன், "நான் அயல் நாட்டினன். கால வித்யாசத்தினுல் இவ்வாறு வீதிகள் தோறும் அலைய நேர்ந்திருக்கிறது. பசியின் கொடுமை யொருபக்கம். சிநேகித தம்பதியின் பசியை ஆற்றவேண்டிய கவலை யொருபக்கம். என்ன செய்யலாம்" என்ருன்.

குணசேகரன்:—கவலைப்பட வேண்டாம். 'மனக்கவலை பலக்குறைவு'...என்பார்கள். விதியை மாற்ற யாராலுமாகாது. எல்லாம் இறைவன் செயல். தங்களுடைய விருத்தாந்தம் அறிய நான் விரும்புகிறேன்.

தருமசிலன்:—ஐயா, எங்கள் சரித்திரம் மிகவும் விரிவானது. அவைகளை வெளியிட எனக்கு இப்போது போதுமான சாவகாசம் கிடையாது. மன்னிக்கவேண்டுகிறேன்.

குணசேகரன்:—, ஏன் இவ்வளவு கவலைப்படுகின்றீர்? இதனை உம்முடைய சொந்த வீடாகவும், எங்களை உங்கள் சொந்த மனிதராகவும் எண்ணிக்கொள்ளும். சிறிதுநேரம் சம்பாஷித்தாலும் நல்லோர் சிநேகம் நீடித்து நிற்கும்.

தருமசீலன்:—ஐயா, உமது உபசாரணையினுல் என் மனம் தேறுதலடைகிறது. இருப்பினும் என் நண்பர் களைப் பிரிந்து வந்திருப்பதால் காலதாமதஞ்செய்ய மனம் இடந்தரவில்லை. போய்வருகிறேன்; விடைதாரும்.

குணசேகரன்:—ஐயா, அவசரப்பட வேண்டாம். மிகக் களைப்படைந் திருக்கிறபடியால் கொஞ்சம் சிற் றுண்டி எடுத்துக்கொள்ளும். மற்றவைகளைப் பின்பு பேசிக்கொள்வோம்—என்றான்.

தருமசீலன், அதற்குச் சம்மதித்து உடனே கை கால்களைச் சுத்தஞ்செய்துகொண்டு சிறிது சிற்றுண்டி அருந்தினன்; அப்பால், கற்பூரசுந்தரனிடம் போகக் கருதி "நான் போய்வருகிறேன், விடை கொடும்" என்று கேட்டான். குணசேகரன், "நீர் அந்தக் கானகத்துக்குச் செல்லவேண்டாம். நான் மனிதனை அனுப்பி அவர்களை அழைத்துவரும்படி செய்கிறேன். நீர் கவலைப்படவேண் டாம். ஸ்நானம் செய்து போஜனம் செய்யும். அவர்கள் வந்தபின்பு அவர்களும் போஜனம் செய்யட் டும். பிறகு எல்லோரும் சேர்ந்து உங்கள் ஊருக்குப் புறப்படலாம்" என்று உபசரித்தான்.

தருமசீலன் அதற்கிணங்கி ஸ்நானஞ்செய்து நேம நிஷ்டைகளை முடித்துக்கொண்டு போஜனம் செய்தான். குணசேகரனும் கற்பூர சுந்தரனைத்தேடி அழைத்துவர மனிதர்களை அனுப்பிவிட்ட படியால் தருமசீலன் அவர்க ளுடைய வருகையை எதிர்பார்த்தவனுய்க் காத்திருந் தான்.

தருமசீலன் போஜனம் செய்து வருவதற்குள் குணசேகரன் மனைவி, கணவனிடம் தன் பெண்ணின் அபிப்பிராயத்தைத் தெரிவித்தாள். குணசேகரன், "நல்லது விசாரிப்போம்" என்று கூறித் தருமசீலன் போஜனமுண்டு வந்ததும் ஆசனத்தி லிருக்கும்படி செய்து, "நண்பரே, கொஞ்சம் சிரமபரிகாரம் செய்து கொள்ளும். சற்றுச் சாவகாசமாய் வார்த்தையாடலாம்" என்று கூறி, உடனே "நீர் எந்த ஊர்? எந்த வகுப்பைச் சேர்ந்தவர்? இப்படி தேசாந்திரியாய்வரக் காரண மென்ன?" என்று கேட்டான்.

தருமசீலன், தன்னுடைய வரலாறெல்லாம் விவரமாய்க் கூறி நண்பன் கற்பூரசுந்தரனைப் பற்றியும் தெரிவித்தான். குணசேகரன் கேட்டுப் பரிதாபப்பட்டான். "கற்பூரசுந்தரனை அழைத்துவரப் போனவர்கள் இன்னும் வரக்காணோமே" என்று தருமசீலன் வருத்தப்பட்டான்; குணசேகரன், "வந்துவிடுவார்கள். அவர்கள் கெட்டிக் காரர்கள். அவசரப்படாமலிருங்கள்" என்று கூறி அவனைத் தேற்றி "உமக்கு விவாகமாய்விட்டதா?" என்று கேட்டான். தருமசீலன், "விவாகமாய்விட்டது. மனைவி ஊரிலிருக்கிறாள்" என்றான். குணசேகரன், உன்னுடைய நண்பனுக்கு இரண்டாவது மனைவி வாய்த்ததுபோல் உமக்கும் இரண்டாவது மனைவி வாய்க்கும்படியான பிராப்தமிருந்தால், நீர் விவாகம் செய்துகொள்ளத் தடையுண்டோ?" என்று கேட்டான்;

தருமசீலன், "பிராப்தமும் தெய்வசங்கற்பமும் அப்படி யிருந்தால் அதை நான் எப்படி தடுப்பதற்கியலும்?" என்றான்.

குணசேகரன், "நீர் வைசிய மரபைச் சேர்ந்தவர் என்பதை அறியலானேன். சந்தோஷம். எனக்கு ஒரு புத்திரி யிருக்கிறாள். அவள் பெயர் அமிர்தவல்லி. அவள் உம்மை மணஞ் செய்து கொள்ள விரும்புகிறாள். நானும் உமது குணங்கண்டு சந்தோஷப் படுகிறேனாதலால், என் மகளை மணஞ்செய்து கொடுக்கச் சம்மதிக்கிறேன். அபிப்பிராயத்தை அறிய விரும்புகிறேன்" என்றான்.

தருமசீலன், "ஆப்த நண்பராகிய நீர் பிரியப் படும்போது நான் அதற்கு மாறாகப் பேசுவது தகாதன்றோ? ஆதலால், உம்முடைய இஷ்டப்படி நடக்க சித்தமுள்ளவனாயிருக்கிறேன். ஆனால் தாமதியாமல் நண்பர்களையுங் காணவேண்டும்" என்றான்.

குணசேகரன், "என் மகள் நல்ல புத்திசாலி; படித்தவள்; உங்கள் மனம் போல் நடந்து கொள்வாள். அது பற்றிக் கவலை வேண்டாம்" என்று கூறித் தன் மனைவியை அழைத்து மகளை அங்கே அழைத்து வரும்படி செய்து, மகள் வந்ததும், "அமிர்தவல்லி, நீ பூர்வ ஜன்மத்திற் செய்த தவப் பயனால் உனக்கு உன் விருப்பத்திற்கிசைந்த பதி கிடைத்தார். அவரை வணங்கி ஆசீர்வாதம் பெற்றுக்கொள்" என்றான்.

அமிர்தவல்லி பெரு மகிழ்ச்சியுடன் தருமசீலன் முன்வந்து அவனை வணங்கி அவனிடம் ஆசிர்வாதம்பெற்றுத் தன் தந்தையையும் வணங்கி அதன் பின் தன் அன்னையையும் வணங்கி அப்பால் ஒரு பக்கம் ஒதுங்கி நின்றாள்.

இப்படி மணம் பேசிய பின் தருமசீலன், "என் நண்பனைத் தேடச் சென்ற ஆட்கள் வரவில்லை. ஆகையினால் நான் இனி இங்கே தாமதிப்பதற்கில்லை. நானே அவ்வனத்திற்குச் சென்று நண்பனையும் அவன் மனைவியையும் அழைத்துக் கொண்டு சீக்கிரம் இவ்விடம் வருகிறேன்; விடை கொடுங்கள்" என்றெழுந்தான்.

குணசேகரன், "அப்படியானால் நானும் உம்முடன் வருகிறேன்" என்றான். தருமசீலன் குணசேகரனையும் அழைத்துக் கொண்டு வனத்திற்குப்போய்ப் பார்த்தான். அங்கே நண்பன் கற்பூரசுந்தரத்தையும் அவன் மனைவியையும் காணாமல் தருமசீலன் திகைத்தான்; பயந்தான்; அங்கு நெடுந்தூரம் போயலைந்து வெகு நேரம் தேடினான்; அகப்படாமையால் பெரு விசனத்துடன், குணசேகரனைப் பார்த்து, "என் நண்பன் கிடைக்கவில்லை. அதனால் மனதில் பொறுக்க முடியாத துக்கமுண்டாய்ப் பாதிக்கிறது. ஆகலால் இப்பொழுது விவாகம்வேண்டாம். நான் என் நண்பனைத் தேடியடைந்தபின் செய்து கொள்கிறேன். என்னை மன்னியுங்கள்" என்றான்

குணசேகரன், அவனுக்குப் பலவிதமான நீதி நியாயங்களுடன் சமாதானங் கூறித் தன்னுடன் நகரத்திற்கு

அழைத்துப் போய் ஒரு நல்ல நாளில் தன் மகளை அவனுக்கு விவாகம் செய்து கொடுத்தான்.

கற்பூரசுந்தரமும் சௌந்தரவல்லியும் காட்டில் சாவடியில் பசிதாகத்துடன் சூரியாஸ்தமனம் வரையில் தருமசீலன் வருவான் வருவான் என்று வழிபார்த்திருந்தனர். வரக் காணாததினால், கற்பூர சுந்தரம் "ஐயோ! இனி என் செய்வது, நண்பனை எவ்வாறு காண்பது, முன்னமே கப்பலினின்றும் காப்பாற்றிய தெய்வம் இப்போது இப்படி செய்து விட்டதே!" என்றெண்ணித் துக்கமுற்று, சௌந்தரவல்லியை நோக்கிப் "பெண்ணே! நண்பன் தருமசீலன் இன்னம் வரவில்லையே! பசியின் களையினால் நடக்கச் சக்தியற்று எங்காவது அயர்ந்து நித்திரை செய்கிறானோ; அல்லது சிற்றுணவுகள் சேகரஞ் செய்யப்போன இடத்தில் ஏதாவது அபாயம் நேர்ந்ததோ! ஒன்றுந் தெரியவில்லையே! மித்திரனை எவ்வாறு காண்பது"! எனப்பலவாறு புலம்பி மறுபடியும் மனைவியைப் பார்த்து "தருமசீலனிருக்கு மிடமறிந்து சென்று அவனை அழைத்து வருவதானால் உன்னைத்தனியே விட்டுச்செல்ல வேண்டியதாகிறது. உன்னைத் தனியே விட்டு எப்படி செல்வது? நீயுங்கூட வருவதானால் சிரமமுண்டாகும். எவ்வளவோ சௌகரியத்துடனிருந்த நீ என்னுடன் இக்கானகமெல்லாம் அலைந்து ஆகார மின்றி அல்லலடைந்து துன்புறுகின்றாயே! ஐயோ! உனது மெல்லிய தேகம் எவ்வாறு நோகின்றதோ? பால் பழம் பாயசங்களுடன் அமுதருந்திய உனக்கு இந்தச் சமயம் பழஞ்சோறு கிடைப்பதுகூட அரிதாயிருக்கின்றதே! மலரணை

யிற் படுத்துயர்ந்த மாதர் சிரோமணியே! உனக்கு இப் போது மண் தரை சயனமாயிற்றே! பல்லக்கிலேறிச் சவாரி செய்த பாவையே! நீ இப்போது பாதசாரியாய் நடக்கலாயிற்றே! என்னை நம்பி வந்து நீ இவ்வளவு கஷ்டப் படுகிறாயே! எவ்வாறு பசி பொறுத்திருப்பாய்?'' என்று விசனப்பட்டான்.

சௌந்தரவல்லி "நாதா! கேவலம் அடியாள் இவைகளை யெல்லாம் பொருட்படுத்தக் கூடியவளல்லவே. தேவரீர் சகல சௌக்கியத்துடனிருப்பதைப் பார்த்து மகிழ்வடைய வேண்டியவளே தவிர நான் எவ்வித நிலைமையிலிருந்தபோதிலும் பாதகமில்லை. தேவரீர் மனக் குறைகளை நினைக்குந்தோறும் அடியாளுக்குத் துக்கம் மேலிடுகிறது. ஈசனருளால் தங்களது கஷ்டங்களைக்கண்டு களித்துச் சொந்ததேசம் போய்ச் சௌகரியத்துடனிருந்தால் அது சகல சுகமுமாகும்'' என்றாள். இது கேட்டுக் கற்பூரசுந்தரம் சந்தோஷமடைந்து, "பெண்ணே! நமது பசி தாகத்தைத் தணித்துக்கொள்ள வேண்டுமாகையால் நான் இக்கானகத்தில் எங்கேனும் சென்று காய்கனி கிழங்குதேன் வகைகளைச் சேகரஞ் செய்துகொண்டு வருகின்றேன். நீ இச்சாவடியிற்றானே இரு'' என்று விடைபெற்றுச் சென்றான்.

சௌந்தரவல்லி மனித சஞ்சாரமில்லாத அச்சாவடியில் கணவனையே சிந்தித்து அவனது வருகையை ஒவ்வொரு விநாடியும் எதிர்பார்த்தவளா யிருந்தாள்.

இவ்வாறிருக்க, அந்த ஆரண்ணியத்தில் இராஜகுமாரனும் அவன் நண்பனும் வேட்டையாடி விடாயுற்று அச்சாவடியில் தங்குவதற்காக வந்தார்கள்; அவர்கள் இப்பெண்மணியைப் பார்த்து மணந்துகொள்ள ஆசை கொண்டார்கள். அப்பொழுது அரசகுமாரன் "பெண்ணே! நீ ஏன் இவ்வடர்ந்த காட்டில் தனிமையிலிருக்கின்றாய்? நீ என்னுடன் வந்தால் அரண்மனைக்கு அழைத்துச் சென்று உன்னை எனது பட்டமகிஷியாய் வைத்துக் கொள்ளுகிறேன்" என்று பிதற்றினான்.

சௌந்தரவல்லியும் கடவுளைப் பிரார்த்தித்து இக் கிராதகர்களிடமிருந்து எவ்வாறு தப்பித்துக் கொள்வதெனப் பலவாறு யோசித்து,

'புத்திமான் பலவானவான் பலமுள்ளான் புத்தியற்றல்
எத்தனை விதத்தினாலும் இடரதுவந்தே தீரும்.'

என்பதை யெண்ணி ஒரு யுக்திசெய்து கொண்டு "அரச குமாரர்களே! எப்போது உங்களிடம் அகப்பட்டுக் கொண்டேனோ அப்போதே உங்களுக்கு நான் சொந்தமாய் விட்டேன். உங்களிஷ்டம்போல் நடப்பதிற் சிறிதுந் தடையில்லை. ஆனால் எனக்குப் பசியுந்தாகமும் அதிகமாயிருக்கின்றன. ஆகாரமும் ஜலமும் சேகரம் செய்துகொண்டு வாருங்கள். உணவருந்திய பின்னர் உங்களுடன்கூட வருகின்றேன்" என்று சொன்னாள்.

இராஜகுமாரன் தன் சிநேகிதனை அப்பெண்மணிக்குக் காவலாயிருக்கும்படி செய்து ஆகாரம் சேகரித்து

வருவதற்காகச் சென்றான். அவன் வருவதற்குள் மற்ற வன் தன்னை மணந்து கொள்ளும்படி சௌந்தரவல்லி யிடம் பலவாறு நயமொழிகளையும், பயமொழிகளையும் பேசிக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டான். சௌந்தரவல்லி, அவனுடைய மிரட்டுக்கு அஞ்சாமலும் கெஞ்சுவதை நம் பாமலும் மனோதைரியத்துடனிருந்து அவன் மனம் கோபங் கொள்ளாத வழியிலும் யுக்தியாய்ப் பேசிக் கொண்டே வந்தாள். இதற்குள் இராஜ குமாரன் வந்து விட்டான். அவனுக்குத் தன் நண்பனுடைய வஞ்சகம் தெரிந்தது. பின் இருவருக்கும் சண்டையுண்டாயது. கேவலம் ஒரு பெண்ணின்மேற்கொண்ட ஆசையினால் தாங்கள் நெடுநாட்களாய்ப் பாராட்டி வந்த சிநேகத்தை மறந்து கடும்போர் செய்து காயமடைந்து இருவரும் மாண்டனர்.

இந்த கோரமான காட்சியைப் பார்த்துக்கொண் டிருந்த சௌந்தரவல்லி "ஆ! ஈசா, நீ எங்கும் நிறைந் திருப்பவ னென்பதையும் ஆபத்பாந்தவ னென்பதையும் இப்போதுதான் நான் கண்டேன். உன்னுடைய திருவ ருள் இப்படிப்பட்ட சமயத்தில் பிரகாசியாவிட்டால் உல கத்தில் ஏழைகள் அநாதைகள் இவர்களுடைய கதி எப் படியாகும்?" என்றெண்ணிப் பரமகாருண்ய சீலராகிய பகவானைத் தியானித்து,—"நம்முடைய நாயகன் இன் னும் வரவில்லை. அவருடைய நண்பனையும் இன்னும் காணோம். நாம் இங்கே தனித்திருப்பதனால் பலவித மான இடையூறுகள் உண்டாகின்றன. இப்படி எல்லோ ரும் பிரிய வேண்டுமென்பது ஈசனுடைய சம்மதம்

போலிருக்கிறது. நடப்பது நடக்கட்டும். நானொரு யுக்தி செய்கிறேன். இப்படி பெண் உடையுடனிருந்தால் இன்னும் துன்பமுண்டாகக் கூடும். ஆதலால் இறந்துபோன ராஜகுமாரனுடைய உடையை அணிந்துகொண்டு ஆடவனைப் போலிருக்கிறேன். அப்போது இவ்வளவு கஷ்டமிராது" என்றெண்ணி இராஜகுமாரனுடைய உடையை எடுத்து அணிந்துகொண்டாள்.

இப்படி யிருக்கையில் நீதிபரிபாலனபுரம் என்னும் நகரை ஆண்டுவந்த நீதிபாலன் என்னும் அரசன் காலஞ்சென்றுவிட்டான். அவனுக்குப் பிள்ளையில்லாமல் அமைச்சர்கள் இன்னாருக்குத் தான் முடிசூட்டுவதெனத் தெளியாது பலவாறு யோசித்த பின் பட்டத்து யானையைச் சிங்காரித்து விட்டனர்; அந்த யானையானது எவனொருவனைக் கொண்டுவருகிறதோ அவனையே அரசனுக்குவதென நிச்சயித்தனர். யானையின்மீது அம்பாரி வைத்து அலங்காரம்செய்து போகவிட்டு அதன் பின் மந்திரி தளகர்த்தர்கள் சைனியங்கள் புடைசூழச் சென்றான். அதில் அநேகம் பெயர்கள் இராஜபட்டம் எனக்குனக்கென்று யானையின் எதிரிற் சென்றார்கள். அந்த யானையானது அவர்களை யெல்லாம் துதிக்கையால் வாரி எறிந்துவிட்டு ஒரே வேகமாய் ஆரணியஞ் சென்று சாவடியில் ஆண் ரூபத்துடனிருக்கும் சௌந்தரவல்லியைத் துதிக்கையால் எடுத்துத் தன் முதுகின் மீதேற்றிக்கொண்டு திரும்பி வந்தது. கூடவந்த ஜனங்களெல்லோரும் வெகு மரியாதையாக அரண்மனைக்கு அழைத்துப் போய் முடிசூட்டிச் சௌந்தர பாண்டியனெனப் பெய

ரிட்டனர். சௌந்தரவல்லி தன்னைப் பெண்பாலென்று ஒருவருமறியாதவாறு நடந்து கொண்டாள்; தன் கணவனைச் சதாகாலமும் கருத்துட் கொண்டவளாய் இராஜ்ய பரிபாலனம் நடத்திக் கொண்டிருந்தாள்.

இவ்வாறிருக்கக் காய்கனி கிழங்குகள் கொண்டு வரப்போன கற்பூரசுந்தரம் வழிதெரியாமல் நெடுந்தூரம் திரிந்தலைந்து பிரயாசையுடன் அகப்பட்டவரையில் காய் கனி கிழங்கு தேன்களைச் சேகரஞ் செய்துகொண்டு சாவடிக்கு வந்துபார்த்தான்; மனைவியைக் காணாததினால் துக்க முற்றான்; பக்கத்தில் இரண்டு இராஜகுமாரர்கள் வெட்டுண்டு கிடப்பதைப் பார்த்துத் திகிலடைந்து "ஈசா! இவ்வாறு சோதிக்கின்றாயே! யான் என்ன அபராதம் செய்தேன்? சிநேகிதனையும் மனைவியையும் பிரித்து என்னையும் இவ்வாறு தன்னந்தனியனாக்கினையே! யான் அவர்களை எப்போது காண்பேன்? இனி அவர்களைக் காணுதவரையில் உயிர் தரித்திருப்பதில்லை" என்று தீர்மானித்துத் துக்கசாகரத்தி லாழ்ந்தவனாய்ச் சாவடியி னின்றும் வெளியில் வந்தான். அங்கே அனேக ஜனங்களின் காலடியும், யானை குதிரைகளுடைய காற்சுவடுகளும் இருக்கக் கண்டு அவன் அந்த அடியைப் பற்றியே நீதி பரிபாலனபுரம் போய்ச்சேர்ந்து, அவ்வூர் ஜனங்களைப் பார்த்து "இவ்வூரில் என்ன விசேஷம்?" என்று கேட்டான். அவர்கள் "ஐயா, இவ்வூரரசன் இறந்து விட்டான். அவனுக்குப் புத்திரனில்லை. ஆதலால் பட்டத்து யானையைச் சிங்காரித்து விட்டார்கள். அந்த யானையானது ஆரண்யத்திற் சென்று யௌவன இராஜகுமாரன்

ஒருவனைத் தன் முதுகின்மீது ஏற்றிக்கொண்டு வந்தது. அவனுக்குப் பட்டஞ் சூட்டினார்கள். அவன் சௌந்தர பாண்டியனென்னும் பெயருடன் செங்கோல் செலுத்தி வருகின்றான்'' என்றார்கள்.

அவ்வார்த்தைகளைக் கேட்டவுடன் கற்பூரசுந்தரம் "ஒவ்வொன்றும் ஆச்சரியமா யிருக்கிறதே! இவர் யாராயிருக்கலாம்! ஆயினும் வெளியில் நகர் வலம் வருஞ்சமயம் பார்க்கலாம்'' என்று எண்ணிக்கொண்டு பசியின் களைப்பினால் நடக்கச் சக்தியற்று ஒரு வீட்டுத் திண்ணையிற் போய்ப் படுத்தயர்ந்து நித்திரை செய்தான். சிரம மிகுதியாலும் பசியின் கொடுமையாலும் மனக் கவலையினாலும் எழுந்திருக்கச் சக்தியும் பிரக்ஞையுமற்றுச் சூரியோதயமாய் நெடுநேரம் வரையிலும் நித்திரையிலிருந்தான்.

வீடு பெருக்குவதற்காகத் தெருவில் வந்த அவ் வீட்டு வேலைக்காரியானவள் திண்ணையில் நித்திரை செய்யும் கற்பூரசுந்தரனை எழுப்பினாள். அவன் ஸ்மரணை யற்றிருப்பதைப் பார்த்து வீட்டுக்குட்சென்று தன் எஜமானியாகிய கனகாம்புஜத்தினிடம் "அம்மணீ, நமது திண்ணையில் ஒரு வாலிப புருஷர் சயனித்திருக்கிறார். அவரைப் பன்முறை எழுப்பியும் அவர் எழுந்திருக்க வில்லை'' என்று சொன்னாள். அவ்வார்த்தையைக் கேட்ட கனகாம்புஜம் உடனே வெளியில்வந்து பார்த்து அவளும் அவனை எழுப்பினாள். அவன் எழுந்திருக்காததினால் உயிருளதோ, இலதோ வெனச் சந்தேகித்து,

"தாதுப் பரீக்ஷைவரு காலதேசத்தோடு
சரீரலட்சண மறிந்து
தன் வந்திரி கும்பமுனி தேரர் கொங்கண சித்தர்
தமது வாகடமறிந்து
பேதப்பெருங்குளிகை சத்திவகைமாத்திரைப்
பிரயோக மோடு பஸ்பம்
பிழையாது மண்டூர செந்தூர லட்சணம்
பேர்பெறுங் குணவாகடம்
சோதித்து மூலிகா விதங்கண் டுங்கண்டு
தாயதைலம் லேகியஞ்
சொர்ப்பக் குவங்கண்டு வருரோக நிர்ணயக்
தோற்றியே யமிர்தகரமாய்
ஆதிப் பெருங்கேள்வி யுடையனாயுள்வேதன்
ஆகும்"...............................

என்றபடி பண்டிதனாயுள்ள ஒரு வைத்தியனை வரவழைத்துப்பார்க்கும்படி சொல்ல, வைத்தியன், கைநாடி பார்த்துக் கனகாம்புஜத்தை நோக்கி "இவ்வாடவனுயிர் நீங்கவில்லை. நெடு நாட்களாக நல்ல ஆகாரமின்மையாலும், நித்திரையின்மையினாலும், மனக்கவலையினாலும் இவனுடைய பிராணவாயு அடங்கி யிருக்கின்றது. இவன் தேகத்தில் அன்னரச மேறினால் இவன் உயிர் பெற்றெழுவான். நெய்யும் அன்னமுஞ் சேர்த்துப் பிசைந்து உச்சிமுதல் உள்ளங்கால்வரையில் இவனுடலில் நன்றாய்த் தேய்த்தால் அந்த சாரமானது உள்ளேசென்றபின் இவன் உயிர்பெற்றெழுவான். பின்னர் சீக்கிரத்தில் ஜீரணிக்கக்கூடிய கஞ்சி

மாவு சீனிபால் முதலிய சிற்றுணவுகளைக் கொடுத்துப் பின் பெரும் உணவுகளாகிய அன்னம் மசாலை வர்க்கங் கள் சேர்த்த காய்கறி பதார்த்தங்கள் முதலானவைகளைப் பிறகு கொடுத்துப் பக்குவமாய்க் காப்பாற்றினுல் திட முறுவான்—

'தன்னைக் குறிஞ்சித் தலத்தா டகிப்பிளம்பை
வன்னச் சுடாரத்துள் வைத்தாக்கி—யுன்னற்
கடிக்கும் பசுவின்றன் ஆச்சியத்தோ டுண்ணிற்
பிடிக்குப் பிடிசதையாம் பேசு'

என்று பதார்த்தகுண சிந்தாமணியிற் கூறியபடி நன்றுய்ச் சமைத்த துவரம்பருப்பைப் போஜனத்தின் ஆதியில் பசு நெய்யுடன் கலந்து புசித்தால், ஒருபிடி அன்னத்துக்கு ஒரு பிடி சதை வளரும். இதை யறியாமல் சிலர் கேவ லம் மூர்க்க ஜெந்துவாகிய குரங்கும் விரும்பாமல் அரு வருத்துத் தள்ளும் இறைச்சியைப் புசித்து வாய் நாறிக் கை நாறிப் பாத்திரம் நாறிப் பார்ப்போர் வெறுக்கும்படி உணவு அருந்துகின்றனர். சாதாரணமாய்க் காய்கறி விற் கும் சந்தைக்குப் போய்க் காலணுக் கொடுத்துக் கத்தரிக் காயோ இன்னும் வேறு யாதோ வாங்கினுல் தாராள மாய்க் கையிற் பிடித்துக் கொண்டு வரலாம். ஒரு ரூபா கொடுத்துக் கசாய்க்காரனிட முள்ள மாமிசத்தை வாங்கி னுல்அதை எத்தனையோ மறைவாக மூடி ஒருவருமறியா மற்கொண்டு வரவேண்டும். இதனுலேயே இதனது உயர்வு தாழ்வு அறிந்துகொள்ளலாம். ஆதலால் மரக்கறி முத லியனவே பலத்தையும் ஒழுக்கத்தையுங் கொடுப்பன

வாகும். அவ்வாறு செய்வாயாக'' என்று கூறிச் சென்றான்.

பின் கனகாம்புஜம் பழைய சிரகச் சம்பா அரிசியை நன்றாகக் களைந்து தகுந்த பக்குவமாய்ச் சமைத்த அன்னத்துடன் கல், மண், தூசு நீங்கிய துவரம் பருப்பைச் சமைத்து ஒன்றுசேர்த்துப் புத்துருக்குப் பசுநெய்யுடன் ஒன்றாய்க் கலந்து கொறுங்கப் பிசைந்து கற்பூர சுந்தரத்தின் தேகத்தில் உச்சி முதல் உள்ளங்கால் வரையில் தேய்த்தாள்.

அப்படி தேய்த்தவுடன் கற்பூரசுந்தரத்திலுடைய தேகத்தில் அன்னரசம்புகுந்து நரம்புகள்முறுக்கேறி அவனுக்கு ஸ்மரணையுண்டாகியது. பின்பவன் புரண்டு நித்திரையினின்றும் எழுந்திருந்து, அருகில் நிற்கும் பெண் அன்னிய மாதா யிருக்கக் கண்டு, "அடடா! நாம் எங்கிருந்து எங்கு வந்தோம். இப்பெண்மணி யாரோ தெரியவில்லை. நாம் பிறமாதர்களது சமீபத்திலிருப்பது தகாத காரியமாயிற்றே'' என நினைத்து மயங்கி வெளிப்பட யத்தனித்தான்.

கனகாம்புஜம் அவன் மனந்தெளிய நடந்ததைக் கூறினாள். ஒரு பரத்தையினிடம் இப்படிப்பட்ட பரோபகார குணம் விளங்குவதைப் பார்த்து அவன் ஆச்சரியமும் ஆநந்தமுமடைந்து, இவள் தான் தாசியில் ஜாதி என நினைத்துப் "பெண்ணே, என் உயிரைக் காப்பாற்றிய உனக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்'' என்று உபசாரங் கூற, அவள், "நானென்ன

செய்து விட்டேன். ஒன்றுமில்லே. பிரபுவாகிய தமது தயவிருந்தாற்போதும்'' என்று கூறி “ஐயா, தம்முடைய உடம்பு இன்னும் சரியாய்த் திடமடையவில்லே. அது வரையில் இங்கிருந்து பின் செல்லலாம்'' என்று கூறினுள்.

கற்பூரசுந்தரம் தான் ஓர் ஆதரவுமில்லாமல் தன்னந் தனியனுயிருக்கின்றமையாலும், மனைவி சிநேகிதர்களைக் காணவேண்டிய அவசியமிருக் கின்றமையாலும், அவள் தன்னைக் காப்பாற்றியவளாயிருக்கிறபடியாலும், அவளுடைய இஷ்டப்படி நடக்க உடன்பட்டான்.

பின்பு ஒவ்வொரு நாளும் அதிகாலேயி லெழுந்து ஸ்நானஞ் செய்து நித்திய கர்மானுஷ் டானங்களை முடித்துக் கொண்டு சிற்றுணவு அருந்தி, அறுசுவைப் பதார்த்தங்களுடன் சுத்த போஜனமுண்டு நாளடைவில் திடமடைந்தான்.

இவ்வாறுகத் தரும்சிலன் சோமசேகாபுரத்தில் அமிர்தவல்லியின் அந்தப் புரத்திலும் சௌந்தரவல்லி நீதிபரிபாலனபுரத்தில் அரசனுகவும் கற்பூரசுந்தரம் கனகாம்புஜத்தின் போஷணையிலுமிருந்து ஒருவரிருக்குமிடம் ஒருவரறியாமல் கவலேப்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

—:o:—

## அத்தியாயம் 8

இவ்வாறிருக்க, ஒரு நாள் சௌந்தரபாண்டியனாக அரசபுரியும் சௌந்தரவல்லி சேனைகள் புடைசூழ நகர் வலம் வந்தாள். அப்பொழுது கற்பூரசுந்தரம் கனகாம்புஜத்தின் வீட்டு மேல் மாடியிலிருந்து உலாவிக்கொண்டிருந்தான். பவனி வந்த சௌந்தர பாண்டியனாகிய சௌந்தரவல்லி கற்பூரசுந்தரத்தைப் பார்த்து விட்டாள். அவள் அவனைத் தன் கணவனென்றறிந்து சந்தோஷமடைந்து அரண்மனைக்குச் சென்றதும் அறிக்கைக்காரர்களை அழைத்து, "கனகாம்புஜத்தின் வீட்டில் வந்திருக்கும் விருந்தினரையும் கனகாம்புஜத்தையும் உடனே இவ்விடம் அழைத்து வாருங்கள்" என்று கட்டளையிட்டனுப்பினாள். சேவகர்கள் விரைவில் கனகாம்புஜத்தின் வீடுசென்று கற்பூரசுந்தரத்தைப் பார்த்து அரசன் கட்டளையைக் கூறி இருவரையும் அழைத்துச் சென்றார்கள். கனகாம்புஜம் "நம்மை யாது காரணம்பற்றி அரசன் அழைக்கிறார். அவரிடத்தில் நமக்கு யாது காரியம் உளது?" என யோசித்துப் பின் 'இராஜாக்ஞையை மீறி நடப்பது குற்றமாகும். எல்லாவற்றையும் நேரில் போய் அறியலாம்" என்று எண்ணிச் சேவகர்களுடன் அரண்மனைக்குச் சென்றார்கள்.

இராஜ உடைகளணிந்திருக்கும் சௌந்தரவல்லி கற்பூரசுந்தரத்தைக் கண்டவுடன் ஸிம்மாசனம் விட்டெழுந்து மரியாதையுடன் அவனை ஸிம்மாசனத்தி லுட்கா

ரும்படிசெய்தாள். அருகிலிருந்த மந்திரி பிரதானி தளகர்த்தர்கள் ஆச்சரியமும் திக்பிரமையும் கொண்டவர்களாய் ஒருவரை யொருவர் உற்றுநோக்கிய வண்ணம் மௌனமாயிருந்தார்கள். சிறிது நேரத்திற் கெல்லாம் சௌந்தரவல்லி சபையோரைப் பார்த்து, "மந்திரிபிரதானி தளகர்த்தர்களே! ஏதோ பரத்தையின் வீட்டிலிருந்து வந்த ஓர் ஆடவரை ஸிம்மாசனத்திலமர்த்தி மரியாதைகள் செய்ததைக் குற்றமா யெண்ண வேண்டாம். இவரே இவ்வுலகுக்கரசர், நானே இவரது பாரியாள்'' எனத் தனது வரலாறு முழுதுஞ் சொன்னாள். பின் தன் கணவனைக் காப்பாற்றி வந்த கனகாம்புஜத்தைப் பார்த்து நீ தான் எங்களுடைய தாய் என்று உபசாரங் கூறி அவள் விரும்பியபடி வெகுமதி தந்தனுப்பி நகர முழுவதும் கற்பூரசுந்தரம் அரசனென்பதைப் பறைசாற்றி அறிவிக்கும்படிசெய்து பின் உற்சவங் கொண்டாடினாள்.

இவ்வாறாகச் சிலநாள் சென்ற பின் கற்பூரசுந்தரம் தன் நண்பன் தருமசீலனைத் தேடக் கருதித் தனது வேவுகாரர்களை நாலாபக்கமும் அனுப்பினான். அவர்கள் பலவிடங்களுக்கும் போய் விசாரித்தும் ஒன்றும் புலப்படாமல் அரசனிடம் யாது தெரிவிப்பது எனக் கவலையோடிருந்தார்கள். அந்தச் சமயம் ஏராளமான ஜனங்கள் கும்பல் கும்பலாய் அவரவர்கள் இயல்புக்குத் தகுந்தபடி மோட்டார், குதிரை வண்டி, ஜட்கா, வில் வண்டி, கட்டை வண்டிகளிலும், கால் நடையாகவும் போய்க் கொண்டிருந்தார்கள். அவர்களைப் பார்த்து

வேவுக்காரர்கள்! எங்கு செல்கின்றீர்கள் ? என்ன விசேஷம்? என்று கேட்டார்கள். அவர்கள், "ஐயா இதற்கு 15வது மைல் தூரத்தில் லட்சுமிபுரி என்னும் நகரமிருக்கிறது. அதை ஓர் அரசன் ஆண்டு வருகிறான். அந்த நகர் மிகச் சிறப்பு வாய்ந்தது. அங்கு ஸ்ரீ முருகப்பெருமானுக்கு கந்தசஷ்டி உற்சவம் மிக விமரிசையாய் நடக்கும். அதனுடன் மகாராஜா தர்பார் வைத்துச் சகல ஆர்ப்பாட்டத்துடன் எல்லா ஜனங்களுக்கும் பேட்டி கொடுக்கிறார். அங்கு பல தேசத்து ஜனங்களும் வருவார்கள். அவைகளைப் பார்க்க நாங்களும் செல்கின்றோம்" என்று சொன்னார்கள்.

இவைகளைக் கேட்ட அரசனுடைய வேவுகாரர்கள் உடனே தங்கள் ஊருக்குப்போய் கேள்விப்பட்ட விஷயங்களைக் கற்பூரசுந்தரமிடம் தெரிவித்தார்கள். அவ்வார்த்தைகளைக்கேட்ட கற்பூரசுந்தரமும் சௌந்தரவல்லியும் அவ்வளவு சிறப்பு வாய்ந்த நகரத்தை நாமும் பார்த்துவர வேண்டும். ஒருகால் தருமசீலனை நாம் சந்திக்கவும் கூடும்" "என்று எண்ணி இராஜ்த்தை அங்குள்ள திவானிடம் ஒப்புவித்துப் புறப்பட்டார்கள்; செல்லும் வழியில் ஏராளமான ஜனங்கள் போய்க் கொண்டிருக்கக் கண்டு விசாரித்தார்கள். அவர்கள் "ஐயா நாங்கள் லஷ்சுமிபுரியில் நடக்கும் விசேஷத்தைப் பார்க்கப் போகின்றோம்" என்றார்கள்.

கற்பூரசுந்தரம் "ஐயா அந்த ஊரின் விசேஷத்தைக் கொஞ்சம் சொல்லுங்கள்" என்று கேட்டான்.

அவர்கள் "ஐயா தெரிந்த சிலவற்றைச் சொல்லு கிறோம் கேளுங்கள்.—

"முதலாவது அது மிக ரோகம் பொருந்திய நகரம். அங்கே வெயிலென்பதே தெரியாது. எந்த நேரமும் குளிர்ச்சியாகவே இருக்கும். மலைகள் சமீபத்திலிருப்ப தால் ஒரு நாளும் மழைக்குக் குறைவே யிராது. மலை அருவியிலிருந்து வரும் ஜலத்தை யெல்லாம் பெரும் அணைகட்டித் தேக்கி அளவாய் வேண்டிய ஜலத்தை ஆறுகள் வாய்க்கால்கள் வழியாய் விட்டு நன்செய் புன் செய் சாகுபடி செய்கிறார்கள்; அந்த ஜல நிலையிலிருந்து மின்சார விளக்குகள் லக்ஷக்கணக்காய் நகரமுழுவதும் போடுகிறார்கள். அவர்களுக்கு வேண்டிய ஜலத்தைத் தேக்கிக்கொண்டதுபோக மிஞ்சுவதே காவேரி, கொள் ளிடம், வெண்ணாறு, வெட்டாறு, அரசிலாறு, வடவாறு, குடமுருட்டி, ஓடம்போக்கி, பெண்ணை நதி, திருமலை ராயன், பவானி முதலிய பல நதிகளாகப் பெருகுகின் றன. அந்த நதிகளிலிருந்து பல வாய்க்கால்கள் பிரிந்து உலகமுழுதும் வியாபிக்கின்றது. அதினாலே அந்த ஊரும் மற்ற ஊர்களும் செழிப்படைகின்றன.

இரண்டாவது மேற்படி ஜலவசதியினால் ஊர் முழு தும் குழாய் வழியே தடையில்லாமல் எந்த நேரமும் தண்ணீர் கிடைத்துக்கொண்டே யிருக்கின்றது. பட் டண முழுவதும் எங்கு பார்த்தாலும் செடி, கொடிகள், ரோஜா, மல்லிகை, முல்லை, பரிஜாதம் முதலிய பல புஷ்பச் செடிகள் நிறைந்து பார்வைக்கு ஓரே பச்

சையாய்க் கண்கொள்ளாக் காட்சியாகப் பிரகாசிக்கும். மேற்கண்ட செடிகளாலேயே யானை, குதிரை, நாற்காலி, வீடு, கூடாரம், வளைவுகள் முதலியவைபோல் செய்திருக்கும். இந்தக் காட்சி பார்க்கத்தக்கது.

மூன்றாவது தீபக்காட்சி மிகச் சிறந்தது. எங்கு பார்த்தாலும் ஒரே வெளிச்சம். இரவு பகலென்பதே தெரியாது. ஒவ்வொரு நாளும் லக்ஷக்கணக்கான தீபங்கள் பிரகாசிக்கும். இபபடி ஒரு தீபக்காட்சி எந்த உலகத்திலும் பார்க்க முடியாதென்று கூசாமல் சொல்லலாம்.

பாட்டைகளைக் கவனித்தால், நான்கு பக்கங்களிலுமிருந்து வரும் பாட்டைகள் உயரத்திலிருந்து ஒரே சரிவாய் வந்துகூடும். அப்படிக் கூடுமிடத்தில் அழகிய பூஞ் செடிகள் அதன் மத்தியில் அலங்கார தீபங்கள், பாட்டையின் இருபக்கங்களிலும் அழகான வீடுகள், பங்களாக்கள் ஒரே அழகாய் அமைந்திருக்கும். வீடுகள் கொஞ்சமேனும் முன்பின் இல்லாமல் வரிசையாய் அமைந்திருக்கும். காட்சியும் பாட்டைகளின் கரைவுசரிவும் நாற்சந்தி கூடுமிடங்களிலுள்ள தோட்டத்துப் புஷ்பச் செடிகளின் அழகும் ஆங்காங்கு விளங்கும் தீபப் பிரகாசங்களும் காண்பதற்கரியவை.

நான்காவது வீடுகள் கட்டுவதற்குரிய தேக்கு முதலிய மரங்கள் அங்கே ஏராளமாய்க் கிடைக்கின்றன.

ஐந்தாவது அந்தக் காட்டில் மிருகங்களில் சிரேஷ்டமானதும் உழைக்கக் கூடியதுமான யானைகள் ஏதேஷ்டமாய்க் கிடைக்கின்றன. அந்த யானைகள் பழக்கப்பட்டு

இராஜாங்கத்துக்குப் பட்டத்து யானையாகவும் பவனிவரத் தக்க யானைகளாகவும் பெரிய பாரங்களை இழுத்துச் செல்லத் தக்கவைகளாயும் வேறு பல வேலைகளுக்கு உபயோகப்படுவனவாயு மிருக்கின்றன. தவிர அந்த யானைகள் காட்டிலுள்ள விருக்ஷங்களை வேலை செய்யும் இடங்களில் எவ்வித மனிதப் பிரயாசையு மின்றி இழுத்து வந்து சேர்க்கின்றன. முடிவாய் அப்படி ஒரு பட்டணத்தின் சிறப்பை நாம் எங்கும் பார்க்கமுடியாது. அந்த ஊரில் முன்ஸிபால்டி நிர்பந்தமில்லை. அவசரமாய் மலஜலோபாதைக்குப் போனவனைப் பிடித்து சார்ஜ செய்து அபராதம் விதிப்பதுமில்லை. எந்த இடத்தை எப்பொழுது பார்த்தாலும் கண்ணாடிபோல் சுத்தமாயிருக்குமே தவிர ஜனங்களும் ஆபாசம் செய்வதில்லை. போலீஸ்காரர் நிர்ப்பந்தம் செய்வதுமில்லை. அரசனுடைய அபிப்பிராயத்துக்கு மாறுபட்ட ஜனங்களில்லை.

"வானுயர வரப்புயரும்
வரப்புயர நீருயரும்
நீருயர நெல்லுயரும்
நெல்லுயரக் குடியுயரும்
குடியுயரக் கோனுயரும்
கோனுயரக் கோனுயரும்"

என்றபடி எல்லா வளங்களும் குறைவற விளங்கின. அரசன், கண்ணை இமை காப்பது போல் ஜனங்களைக் காத்து வருவதால் குடிகளும் அரசனது அபிப்பிராயத்துக்குச் சிறிதும் மாறுதலன்றி நடந்து வருகின்றனர்.

o

இவ்வண்ணம் தேச நன்மையிற் சிறிதுங் குறை வுறாது செங்கோல் நடத்திவரும், மன்னவன் நாட்டில் நீர்வளப்பத்தினுல் ஏராளமான நன்செய் புன்செய்கள் விளைந்து தான்ய விலைகள் மலிந்து இந்தக் கிராக்கியிலும் சீரகம்போன்ற பொடி அரிசிகள் ரூபாய் ஒன்றுக்கு நான்கு படிக்குக் குறையாமலும் விற்றுவருகிறது. காய் கறி சாமான்களோ ஏராளமாய் மலிவாய்க் கிடைக்கின் றன. ஒரு இளனி யானைத்தலையளவு பருமன் இருக்கி றது. ஆப்பிள், குடகு, ஆரஞ்சி, பச்சைதிராக்ஷை முதலிய பழவர்க்கங்கள் மலிவாய்க் கிடைக்கின்றன. அந்த ஊரார் அந்நிய நாட்டிலிருந்து எவ்வித சாமான் களையும் எதிர்பாக்க வேண்டியதில்லை. அவ்வளவு சிறப்பு வாய்ந்த நகரிலுள்ள ஜனங்களுக்கு எவ்விதக் கவலையு மில்லை. எல்லோரும் மிகத்திருப்தியாய் வாழ்ந்து வரு கிறார்கள்.

அந்த நகரத்தில் துலாமாதத்தில் பெரிய உற்சவங் கள் நடக்கின்றன. முருகப் பெருமானுக்கு விசேட மான கந்தஷஷ்டி உற்சவம் நடக்கிறது. அந்த ஆறு தினங்களிலும் இராஜா மிக பக்தியுடன் உபவாசமிருந்து அபிஷேக ஆராதனை செய்து ஜனங்களுக்குத் தர்பார் பேட்டி கொடுக்கின்றார். அவைகளைக்கான நாங்களனை வரும் போகிறோம். அங்கே ஏராளமான ஜனங்கள் வந்து கூடிக் காட்சிகண்டு மகிழ்வார்கள்" என்று கூறினார்கள்.

இதைக்கேட்ட கற்பூரசுந்தரமும் சௌந்தரவல்லி யும் " இத்தகைய சிறப்புவாய்ந்த ஊரை நாமும் போய்ப்

பார்த்து வரலாம்'' என்று எண்ணி வேண்டிய சௌகரியங்களுடன் புறப்பட்டு அந்த ஊருக்குச் சென்றார்கள்.

ஊர் கண்கொள்ளாக் காட்சியாக விளங்குகிறது. ஓரிடத்தில் பார்த்ததையே பார்த்துக்கொண் டிருக்கும்படியான அற்புத அதிசய மாளிகைகள் விளங்குகின்றன. ஓரிடத்தில் "தேவலோகத்தவர்களுக்கும் இந்த ஊரார்க்கும் போக்கு வரவு உண்டுபோலும்! அதனாலேதான் இப்படிப்பட்ட உயர்ந்த உன்னத மாளிகைகள் கட்டியிருக்கிறார்கள்'' என்று வியக்கும்படியான மாளிகைகள் விளங்குகின்றன. இன்னோரிடத்தில் "புண்ணியஞ் செய்தவர்கள் இங்குள்ளவர்களெல்லாம்; இன்றேல் இந்த விநோத மாளிகைகளின் வாசம் இவர்களுக்கு எப்படி கிடைக்கும்'' என்று வியப்புறும் வண்ணம் அமைந்துள்ள மாடமாளிகைகள் அளவிறந்தன இலகுகின்றன. மற்றுமோரிடத்தில், ஒரு முறை பார்த்ததை மறுமுறை பார்த்தாலும் பாராதது போலவே காணப்படும் மாடமாளிகைகள் அநேகம் வெள்ளிமலையெனப் பிரகாசிக்கின்றன.

இவ்வித அற்புத மாடமாளிகைகள் அமைந்துள்ள தெருக்களில், ஆங்காங்கு கணக்கிடமுடியாத மோட்டார்களும், ஆயிரக்கணக்கான குதிரை வண்டிகளும், கோச், பீட்டன் இரட்டைக் குதிரை வண்டிகளும், இன்னும் பலவகையான புதுமாதிரி வண்டிகளும் நிறைந்திருக்கின்றன. எத்தனையோ தேசங்களிலிருந்து எத்தனையோ ஜனங்கள் இத்தனை பேர்தான் என்று மதிப்பிட முடியாத அளவில் வந்து தெருக்களில் இங்குமங்கும் உலாவி

வேடிக்கை விநோதங்கள் பார்த்துக்கொண்டே செல்கின்றனர்.

கடைத்தெருவுகளோ, இங்கேதான் சகல வஸ்துக்களும் உற்பத்தியாயினவோ! இங்கேதான் வியாபாரமென்பதே பிறந்ததோ! இங்கேதான் சகல சுகங்களையும் அநுபவிக்கப் பிறந்த புண்ணிய சிலர்கள் வசிக்கின்றனரோ என்று வியப்புறும்படி, வரிசை வரிசையாய் வஸ்துக்களின் தாரதரப்படி கடைகள் அமைந்து கண்களைக் கவருகின்றன. கொள்வோரும் விற்போரும் இடும் கூச்சல் ஸ்வர்க்க லோகம் வரையில் எட்டுமோ என்று சந்தேகிக்கத் தக்கதாயிருக்கிறது. வியாபாரிக ளெல்லாம் வியாபார நியாயப்படி வியாபாரம் செய்யும் உத்தமர்களாகக் காணப்படுகின்றனர். கொள்வோரும் ஏமாற்றமடைய மாட்டோம்—என்கிற மனத்தைரியத்துடன் பொருள்களைக் கொள்கின்றனர்.

இப்படி யிருக்கும் கடைகளிலும், தெருக் கோடிகளிலும், நாற்சந்தி கூடுமிடங்களிலும், வைத்தியத்திற்கு அதி தேவதைகளான அசுவனி தேவர்களும் கண்டு வியக்கத் தக்கபடி, கண்களுக்கும் கருத்திற்கும் ஆநந்தந்தரும் புஷ்பச் செடிகளும் புஷ்பக்கொடிகளும் வைத்து அழகு செய்யப்பட்டிருக்கிறது. தெருநெடுகலும் கொடிகளும் தோரணங்களும், அலங்கார வளைவுகளும் விளக்குக் கூண்டுகளும் அழகுபெற நிலவ வைத்திருப்பது பிரமிக்கக் கூடியதாயிருக்கிறது.

இந்த அதியற்புத விநோதமான காட்சிகளை யெல்லாம் இருவரும் கண்களாரக்கண்டு மகிழ்ந்தபடி பல

இடங்களுக்குச் சென்று பின் விடுதி யொன்று அமர்த்திக்கொண்டு அதில் தங்கி, ஸ்நானம், போஜனம் முதலியவற்றை முடித்துக் கொண்டார்கள்; அப்பால் சற்றுப் படுத்துக் களையாறினார்கள்; சாயுங்காலத்தில் உல்லாசமாகப் புறப்பட்டு உலாவிக்கொண்டே அங்கராத்திலுள்ள ஆலயங்களையும் அரண்மனைகளையும் கச்சேரிகளையும் மண்டபங்களையும் கோபுரங்களையும் கண்டு மகிழ்ந்தது மன்றி யானைப்படைகளையும், குதிரைப்படைகளையும், காலாட்படைகளையும் கண்டு வியந்தார்கள்; இப்படிப்பட்ட இன்னும் பல விநோதங்களைப் பார்த்த வண்ணம் அரண்மனை வாயிலை யடைந்து அங்கே ஒரு பக்கம்!விளங்கிய வசந்த மண்டபத்தைக் கண்டார்கள்.

இவர்கள் சென்ற அன்றையதினம் ஸ்ரீசிவஷண்முகப்பெருமானுக்கு உகந்த நாளாகிய ஷஷ்டி யாகையினால், அந்த அற்புத மண்டபத்தில் அந்தப்பரம காருண்யமூர்த்தியை வல்லிதேவ ஸேனாம்பாள் ஸமேதராய் மயில் வாகனத்தில் எழுந்தருளச் செய்திருக்கிறார்கள். மண்டபம், கண்கொள்ளா காட்சி! காணற்கரிய காட்சி! கிடைத்ததற்கரிய காட்சி! என்று வியந்து பேசத்தக்கபடி தோரணங்களாலும் தவஜங்களாலும் பாவட்டாக்களாலும் புஷ்பங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருக்கிறது. முருகப்பெருமான் வள்ளிதெய்வானையுடன் மயில்வாகனத்தின் மீது விளங்குவது, பார்ப்பவர் மனத்தைப் பக்தியில் ஈடுபடும்படி செய்யும் அற்புதக் காட்சியாயிருக்கிறது.

அங்கே ஸந்நிதியின் முன்பு, பால், தயிர், நெய், தேன், இளநீர், பழவர்க்கங்கள் பஞ்சாமிர்தம், பனிநீர்,

சந்தனம் முதலியன குடங்குடமாக இருந்தன. அவை களை ஒவ்வொன்றாய் எடுத்துக் குருக்கள் பகவானுக்கு அபிஷேகம் செய்தார்; பின் உயர்ந்த பட்டாடை சாத்திப் புஷ்பங்களாலும் இரத்தின ஆபரணங்களாலும் அலங் காரம் செய்தார். அப்பால் கிரமப்படி தூபதீப நைவேத் தியங்களும் கற்பூர ஹாரத்தியும் எடுத்தார்.

கலியுக வரதனும் அநாதைரக்ஷகனுமாகிய முருகப் பெருமானுடைய சேவை செய்ய ஏராளமான ஜனங்கள் வருவதும் பின் தரிசனம் செய்து திரும்புவதுமாக இருந் தனர்.

இப்படிப்பட்ட திவ்ய வசந்த மண்டபத்திற்குப் பக் கத்தில் அரசனுடைய தர்பார் மண்டபம் விளங்குகிறது. அதில் இரத்தின ஸிம்மாசனம் போட்டிருக்கிறது. கீழே வெல்வெட் ஜமக்காளங்கள் விரித்திருக்கின்றன. எங்கு பார்த்தாலும் கணக்கிறந்த தீபங்கள் கண்களைக் கவர்கின்றன. தங்கம் வெள்ளியினாலே செய்யப்பட்ட கட்டியம்பிடித்த சேவகர்கள் பலர் நின்றுகொண்டிருக் கின்றனர். துப்பாக்கி வீரர்களும், வாள வீரர்களும் ஆயிரக் கணக்காகப் பதுமைகளைப் போல் அசைவற்று நிற்கின்றனர்.

இத்தகைய வைபவங்களமைந்த தர்பார் மண்டபத் தில் அரசன் பிரவேசித்து ஸிம்மாஸனத்தில் அமர்வ தைக் காண அநேகமாயிர ஜனங்கள் வந்து முன்பே காத் துக்கொண்டிருக்கின்றனர். எல்லோரும் வேந்தன் வரும் வழியையே பார்த்துக் கொண்டிருக்கின்றனர்.

இப்படி யிருக்கையில் அநேக வேட்டுகள் போடப் பட்டன. அவை, அரசன் தர்பார் மண்டபப்ரவேசஞ் செய்வதைக் குறிப்பிடுமென ஜனங்கள் ஒருவருக்கொரு வர் பேசிக்கொண்டனர். உடனே அரசன் தர்பார் பிர வேசத்துக்குரிய மரியாதையுடன் பிரவேசித்தார். கட் டியக் காரர்கள் இப்பொழுது கட்டியங் கூறி அரசனை வரவேற்றார்கள். அரசன் புன்முறுவலுடனும் வணக் கத்துடனும் ஸிம்மாசனத்துக் கருகே சென்று அதற்குச் செய்யவேண்டிய மரியாதையைச் செய்து அதில் தனது வலக்காலை வைத்து ஏறினர். ஏறிய அக்ஷணமே லக்ஷக்கணக்கான தீபங்கள் பிரகாசித்தன. தீபங்கள் பிரகாசித்தபோதே அரசனும் ஸிம்மாசனத்திலமர்ந்தார். தாம் தாம் என்று அப்போது மங்களவாத்தியம் முழங்கி யது. வந்திமாகதர் துதிபாடி வணங்கினார்கள். பெரி யோர்கள் ஆசிர்வாதம் செய்து அட்சதை தூவினர்கள். அரசன் அவர்களை வணங்கினர். முன்னரே வெளி யூர்களிலிருந்து வந்திருந்த சிற்றரசர்கள், மிட்டாதார்கள், ஜமீன்தார்கள், மிராசுதாரர்கள் தனவைசிய நாட்டுக் கோட்டை நகரத்தார், வியாபாரிகள், சுகஜீவனக் காரர் கள், வேறு பலரும் பத்துப் பத்துபேராக நின்று அரச னுக்கு மரியாதை செலுத்தி வணங்கினர்கள். அரசனும் அவரவர்க்குத் தக்கபடி வந்தன மரியாதைகளைச் செய் தார்.

இப்படி செய்தபின் எல்லோரும் அவரவர் ஆச னத்தில் அமர்ந்தார்கள். பிறகு வாத்தியக்காரர்கள் பலர் சபைக்கு வந்து சேர்ந்தார்கள். முதலில் பாண்டு

வாத்தியக்காரர்கள் பாண்டு முழக்கினர். பின் சைனு வாத்தியம் வாசிக்கப்பட்டது. அப்பால் மதுரை பொன்னுசாமி நாககாமும், நீபாம்பாள்புரம் பக்கிரி தவுலும் வாசித்தார்கள். அதன்பின் புதுக்கோட்டை தக்ஷிணு மூர்த்தி கெஞ்சிரு வாசிக்க மாமுண்டி மிருதங்கம் முழக்கத் திருக்கோடிக்காவல் கிருஷ்ணையர் பிடில் வாசிக்க, அரியக்குடி ராமாநுஜம் வாய்ப்பாட்டுப் பாடினர். அதன் பின் சாபசாஸ்திரி புள்ளாங்குழல் வாசித்தார். சீதாராமமய்யர் மோர்வலிங்கு வாசித்தார். ஸரஸ்வதிபாய், கனகாம்புஜம் முதலிய பெண்கள் காலக்ஷேபம் செய்தனர். அப்பால் சதுர்க் கச்சேரியும், விகடமும வித்வத் பரீக்ஷையும் நடந்தேறின. அப்பால் மல்யுத்தம் தடிவரிசை, கத்திவீச்சு முதலிய வேடிக்கைகளும் விமரிசையாய் நடந்தேறின.

இப்படி ராஜ சமுகத்தில் வீற்றிருப்பவர்களையும் நின்று கொண்டிருப்பவர்களையும் இன்னும் அளவிறந்த ஜனங்கள், மேடைகளிலும் படிகளிலும் திண்ணைகளிலுமாக உட்கார்ந்தும் நின்று கொண்டும் வேடிக்கை பார்த்தனர். இவ்வளவகத்தம் ஜனங்களிருந்தும் கொஞ்சம் சச்சரவேனும் பேச்சுக்குரலேனும் உண்டா? அலையடங்கிய சமுத்திரம் போல விளங்கியது அந்த ராஜசமுகம். போலீஸார் நிர்ப்பந்தமுண்டா? இவ்விடம்போல் சார்ஜெண்டுகள் குதிரைமீதேறி ஜனங்களை விரட்டுவதுண்டா? ஒரு திருட்டுண்டா? புரட்டுண்டா? சிறு அவஸ்தையேனுமுண்டா? காலணு கைக்கூலி பெறுவாருண்டா? என்ன சொல்வதந்த விமரிசையை! ஆகா

ஓர் அரசன் நீதி தவறாமல் அரசு புரிவதனாலல்லவா பல ஜாதி ஜனங்களும் ஒன்றுகூடிய இந்த இடத்தில் இப்படிப்பட்ட அமைதியைக் காணநேர்ந்தது! நீதியைவிட ஆளுகைக்கு அரும்படையுண்டா?—ஆதலினாலே தான் பெரியோர்கள் நீதியையே பூஷணமாகப்பூண்டு உலகம் மதிக்க விளங்கினர்.

நீதி யென்கிற தெய்வம் தாண்டவ மாடுகிறபடியால் அந்த நாட்டில் மாதம் மும்மாரி பெய்கிறது. ஜலக்கஷ்டமென்பதே கிடையாது. ஜனங்கள் சந்துஷ்டியாக வாழ்கின்றனர். பூமி முப்போகம் விளைகிறது. தரிசு நிலங்களுக்கு இனாம் சாசனமே கொடுக்கப்படுகிறது. அந்த நாட்டில் பொன் விளைகிறது என்று கூறினும் பொருந்தும்.

இப்படிப்பட்ட உற்சவம் ஸ்கந்தஷஷ்டி ஆறுநாளும் உண்டென்றால், அந்நகரம் அமராவதியினும் சிறந்து விளங்குமென்பதி லையமுண்டோ? இந்த அற்புத உற்சவத்திற்குத் தருமசீலனும் அமிர்தவல்லியுடன் வந்து வேடிக்கை பார்த்துச் செல்லுகிறான். முதல் மூன்றுநாளும் அவர்கள் நமது கற்பூரசுந்தரத்தின் கண்ணுக்குப் புலப்படவில்லை. நான்காவது நாள் தர்பாரில் கற்பூரசுந்தரம் தருமசீலனைப் பார்த்துவிட்டான். கடந்த நான்கு நாட்களாகக் காணும் காட்சிகளை விட இன்று தன் நண்பன் தருமசீலனைக் கண்ட காட்சியே கற்பூரசுந்தரத்துக்கு அளவிடமுடியாத மகிழ்ச்சியைத் தந்தது. பின் தருமசீலனும் கற்பூர சுந்தரத்தைப் பார்த்துவிட்டான். அவனும் இதுவரையில் கண்ட காட்சிகளைவிட மேலான காட்சி

கண்டதாகக் களித்தான். ஆடல்பாடல் முதலியன முடி றெவரையில் அவர்கள் ஒருவரையொருவர் நெருங்க முடியவில்லே. அவை யெல்லாம் முடிந்ததும் அவர்கள் ஒன்றுகூடி ஒருவரையொருவர் தழுவிக்கொண்டு மகிழ்ந் தனர். பின் ஒவ்வொருவரும் ஜாகைக்குச் சென்றனர். பிரிந்தவர் கூடினுல் பேசவும் வேண்டுமோ— என்றபடி பலபல பேச்சுகள் பேசி மகிழ்ந்து திருப்தியடைந்தனர். அப்பால் எல்லோரும் அமிர்தவல்லியின் தந்தையிடம் சென்று சிலநாள் தங்கியிருந்து, பின் அவ்விடமிருந்து சொந்த வூருக்குப் பிரயாணமானுர்கள்.



## அத்தியாயம் 9

திருமங்கை புரியிலுள்ள இவர்களது தாய் தந்தை மனைவியர்கள் முதலான சுற்றத்தார்களைச் சிறிது கவனிப்போம். தாய் தந்தையரும் நமது புதல்வர்கள் சென்று வெகு நாளாய்விட்டனவே, ஒரு சமாசாரமும் தெரியவில்லையே, மைந்தர்கள் எப்போது வருவார்களோவெனக் கவலையுடனிருக்கின்றார்கள்.

கற்பூரசுந்தரம் மனைவி கல்யாணி அவன் சென்ற சில நாளைக்கெல்லாம் தனதிஷ்டம்போல் நடக்கத் துணிந்து ஊரார் இகழும்படியான நிலைமையை அடைந்துவிட்டாள்.

நமது கதாநாயகனாகிய தருமசீலன் மனைவி பங்கஜவல்லி என்பவள் கணவனைப் பிரிந்தது முதல் வருத்தத்திலாழ்ந்து ஒருநாள் தன் தாதியுடன் "எனது கணவன் வந்திலரே. அடி! அவர் எப்போது வருவாரோ அறிந்திலனே! உத்தம ஸ்திரீகள் கணவனைவிட்டுச் சிறிது நேரமாவது பிரிந்திருத்தல் தகுதி யன்றே" என்று பலவாறாகப் புலம்பினாள். குணபூஷணியும், "அம்மணி! தாங்கள் வியாகூலமடைய வேண்டாம். உங்கள் நாயகர் கூடிய சிக்கிரம் வந்து விடுவார். நீங்கள் சிறிதும் ஐயமுறவேண்டாம். சாதித தொழிலுக்கேற்றபடி திரவியஞ் சம்பாதிக்கச் சென்றவர் தக்க பொருள் சேகரித்துக்கொண்டு விரைவில் வருவார், நீங்கள் சிறிதும் ஆயாசமுறாமல் எழுந்து,

சுகந்தங் கலந்த வெந்நீரில் ஸ்நானஞ் செய்து போஜன முண்டு தாம்பூலந் தரித்து நல்ல ஆடையாபரணங்க ளணிந்து சந்தோஷத்துடனிருங்கள்" என்று சொன் னள். பங்கஜவல்லி சிறிது கோபமுற்றவளாய் "அடி பேதாய், என்னுடன் இவ்வளவு காலம் பழகியும் என்னு டைய எண்ணத்தையும் உலக வசனத்தையும் முற்றமறி யாமல் சொல்ல வந்தனையே.

'உண்ணல் பூச்சூட னெஞ்சுவத்த லொப்பனை
பண்ண லெல்லாமவர் பார்க்கவே யன்றோ
அண்ணறன் பிரிவினை யறிந்துந் தோழிநீ
மண்ணவந் தனையிது மடமை யாகுமால்'

என்றபடி பாக்கியே உலகத்தின்கண் கற்பிற் சிறந்த பெண்கள் மதுரமான ஆகாரங்களை உட்கொள்ளுதலும், பரிமளமிகுந்த புட்பங்களை முடித்தலும், மனமகிழ்ச்சி முகமலர்ச்சிகளோ டிருத்தலும், மற்றும் பலவிதமான திவ்விய வஸ்திராபரணங்களால் தன்னை அலங்கரித்துக் கொள்ளுதலுமாகிய இவைகள் எல்லாம் தத்தம் கணவர் கள் கண்டு களிப்பதற்காகவன்றோ? அவ்வாறிருக்கப் பெருமையிற் சிறந்த எனது நாயகர் தற்சமயம் என்னை விட்டுப் பிரிந்திருப்பது உனக்குத் தெரிந்திருந்தும் என்னை அலங்கரித்துக்கொள்ள வேண்டுமென்று நீ இயம்புவது உன்னறியாமையினாலன்றோ?" என்று கூறி னள்; பின் ஆடையாபரண முதலானவைகளிடத்தில் விருப்பமின்றி எந்நேரமுந் கொழுநனையே எண்ணி ஈசு வரத்தியானத்தி லிருந்தாள்.

இவ்வாறிருக்க, அவ்வூர் அரச குமாரன் ரதகஜ துரகபதாதிகள் புடைசூழ மிகவும் குதூகலத்துடன் ஊர் வலம் வந்துகொண்டிருந்தான். அவ்வூர் ஜனங்கள் வீதிகளைச் சுத்தப்படுத்தித் தண்ணீர் தெளித்து மகர தோரணங்கள் கட்டி அரசன் வருகையை ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். அரச குமாரன் மூன்று வீதிகளில் வலம் வந்து தருமசிலன் வீடிருக்கும் நான்காவது வீதியின் வழியாய் வரும்போது அவன் வீட்டு மேன்மாடியில் ஒரு பொற்கொடி சிறிது முக வாட்டத்தோடு எதையும் கவனியாமல் அசைவற்றிருந் தாள். அவளை அரச குமாரன் கவனித்தான்; "இவள் யாராயிருக்கலாம். இவ்வளவு வைபவங்களோடு வரும் நம்மை யாவது நம்முடைய சைன்யங்களை யாவது திரும் பிப் பார்க்கவில்லையே! இதற்கென்ன காரணம்? மௌட் டிகமா? கர்வமா? அல்லது அந்நியனை நாம் ஏன் கவ னிக்கவேண்டு மென்ற ஒழுக்கமா? ஒன்றும் புலப்பட வில்லையே. இவளிடம் ஸ்திரிகளுக்குள்ள அடக்க முத லிய உயரிய குணங்கள் முழுதும் நிறைந்திருக்கு மென் றெண்ணத்தக்க தோற்றம் புலப்படுகின்றதே. இது யாருடைய வீடு? இவளுடைய நாயகனும் இவள் குணத் துக்குத் தகுந்த ஒழுக்கமுடையவனாகவேதா னிருக்க வேண்டும். அவனை நாம் நேரில் பார்க்கவேண்டியது மிக்க அவசியம்" என்று எண்ணியவாறே மற்ற வீதி களையும் சுற்றிக்கொண்டு அரண்மனை போய்ச் சேர்ந்து மந்திரியை அழைத்து, பங்கஜவல்லி யிருந்த வீட்டு அடையாளங்களைச் சொல்லி அவள் நாயகனை அழைத்து வரும்படி கட்டளையிட்டான். அவ்வாறே மந்திரி தூது

வர்களை அனுப்பி விசாரித்ததில் அவள் கணவன் தரும சீலன் தன்னுடைய நண்பன் கற்பூரசுந்தரத்துடன் தேசாந்திர வியாபாரத்துக்குப் போயிருப்பதும் அவன் வைசிய குலத்தவன் என்பதும் தெரியவந்தன. மந்திரி இச்செய்தியை அரசனுக்குத் தெரிவித்தான். அரசன் மந்திரியை நோக்கி அவர்களிருவரையும் தான் பார்க்க வேண்டு மென்றும் அவர்கள் வந்தவுடன் அவர்களைத் தன்னிடம் அழைத்து வரும்படியும் ஆக்ஞாபித்தான்.

இது இவ்வாறிருக்க ஒருநாள் தருமசீலன் அவன் மனைவி அமிர்தவல்லி கற்பூரசுந்தரம் அவன் மனைவி சௌந்தரவல்லி ஆக நால்வரும் பெருஞ் சீர் சிறப்புகளுடன் திருமங்கைபுரிக்கு வந்து சேர்ந்தார்கள். இவ்விதமாகப் பெரும் பொருளுடனும், மேன்மை வாய்ந்த குலங்களில் ஜனித்த மங்கையருடனும் வந்திருக்கும் புதல்வர்களைத் தாய் தந்தையர்கள் கண்டு களித்து அகமகிழ்ந்து உபசரித்து யோகக்ஷேமங்களை விசாரித்து நடந்த வர்த்தமான முழுதும் அறிந்து மிகுந்த சந்தோஷத்துடனிருந்தார்கள். பங்கஜவல்லி,

"செல்வமிகு கணவனைத் தெய்வ மென்றனுதினம்
சிந்தை செய்பவள் மனைவியாம் "

என்று கூறியவாறு தன் கணவன் சுகமாகத் திரும்பிவரக் கண்டு உள்ளம் பூரித்து மகிழ்ந்திருந்தாள்; அமிர்த வல்லியைச் சகோதரியாய்ப் பாவித்துப் பெருமையுடனிருந்து வந்தாள். கற்பூரசுந்தரமும் மனைவி சௌந்தரவல்லியோடு சுகமாய் வாழ்ந்து வந்தான்.

இவ்வாறு சில நாள் சென்ற பின்பு இவர்கள் வரவை அறிந்த மந்திரி தருமசிலனையும் கற்பூரசுந்தரத்தையும் அரசனிடம் அழைத்துக்கொண்டு போனான். அரசன் அவர்களிருவரையும் வரவேற்று ஆசனம் கொடுத்து அமரும்படிசெய்து யோக க்ஷேமங்களை விசாரித்து "ஐயா நீங்களிருவரும் இவ்வளவு நாட்களாய் எங்கெங்கு சென்றிருந்தீர்கள்? நம்முடைய இராஜ்யத்தில் நம்முடைய பிரஜைகளாயிருந்தும் உங்களை நான் இதுவரை சந்தித்ததில்லையே! எதற்காக வெளி ஊர்களுக்குச் சென்றிருந்தீர்கள்?

தருமசிலன்—மகாராஜாவே, நாங்கள் தங்கள் ஆளுகைக்குட்பட்ட பிரஜைகளைச் சேர்ந்தவர்கள் என்பதில் யாதொரு ஆக்ஷேபணையுமில்லை. மகாராஜாவினுடைய ராஜ்யத்தில் எங்களுக்கு வருவாய்க்கு மார்க்கமில்லையாகையால் வெளியிடங்களுக்குப் போக நேர்ந்தது. குடிகள் பிரயாசைப்பட்டு விவசாயமோ, வியாபாரமோ செய்து சம்பாதித்துக்கொண்டு வந்தால் கடமையோ, வாரமோ, வரியோ, வாங்கிக் கொள்வீர்கள். சம்பாத்தியமில்லாமல் வறிஞராயிருப்பவர்களை ராஜாங்கத்தில் காப்பாற்றுகிற வழக்கமில்லையே! பணக்காரரா யிருப்பவர்களுக்குத் தானே கௌரவம் கொடுப்பீர்கள்! நாங்கள் ராஜ்யத்தின் பெருமையை நினைத்துக்கொண்டிருந்து என்ன செய்கிறது?—

"பொருளிலார்க்கின்பமில்லை புண்ணிய மில்லை என்றும்
மருவிய கீர்த்தி யில்லை மைந்தரிற் பெருமை யில்லை
கருதிய கரும மில்லை கதிபெற வழியு மில்லை"
பெருநிலந் தனிற்சஞ் சாரப் பிரேதமாய்த் திரிகுவாரே"

என்பதுபோல் பொருளில்லா விட்டால் இவ்வுலகில் யாருக்கு என்ன நடக்கும்? உலகத்தில் ஜீவித்திருக்கும் வரையில் நல்ல ஜீவனமோ, கௌரவமோ எதாவுமில்லையே! இவ்வுலகைவிட்டு நீங்கிய பிறகும் கதி பெறுதற்கும் வழியுமில்லையே! ஆதலால் பொருளீட்டுதலில் ஆசை கொண்டு தேசாந்தர வியாபாரமே சிறப்பெனவெண்ணி என் நண்பருடன் சென்றேன். கடவுள் கிருபையால் எங்கள் முயற்சிக்குத் தகுந்த சௌகரியத்துடன் வந்துசேர்ந்தோம். எங்களிடமிருக்கும் ஐவேஜுக்கு அதிகமாகவே விதிக்கும் வரியைக்கட்டித் தங்கள் ராஜ்யத்தில் குடியிருப்போம். லோக விசாரணைக்காகவே எங்களை வரவழைத்திருப்பீர்கள் என்று எண்ணுகிறோம். நாங்கள் உண்மையைக் கூறிவிட்டபடியால் இனித் தங்களுக்கு அதிக சிரமம் வேண்டாம்—என்றான்.

இராஜ குமாரன்—ஐயா நீங்கள் சொல்லுகிறபடி நாங்கள் வரி வாயிதா வாங்கினாலும் நாங்கள் உண்பது ஆழாக்கு அரிசியின் உணவே. மற்ற பொருள்களையெல்லாம் பிரஜைகளின் நன்மைக்காகவே மராமத்து, இலாகா, விவசாய இலாகா, கல்வி இலாகா, வைத்திய இலாகா, நகர பரிபாலன சம்பந்தமான செலவு இவைகளுக்கும் போர்வீரர், போலீஸார் முதலியவர்களுக்காகவும் செலவுசெய்து ஜனங்களைக் காப்பாற்றி வருகிறோமே தவிர எதையும் இராஜாங்கத்தின் பொருட்டு அதிகமாய் உபயோகப்படுத்திக் கொள்ளவில்லையே! அரசாங்கத்தார் வரி வாயிதா வாங்கிக் கொள்ளையடிக்கிறார்கள் என்று பாமர ஜனங்கள் சொல்வது போல், அறிவாளிகளான நீங்களும் சொல்லலாமா?—

தருமசீலன்—மகாராஜாவே நாங்கள் அரசாங்க வரம்புக்குட்பட்டவர்கள்; அதிகம் பேசச்சக்தியில்லாதவர்கள். ஜனங்களுக்கு அரசாங்கத்தால் எத்தனையோ சௌகரிய அசௌகரியங்களிருக்கலாம். இருந்தாலும், அரசனிருந்து அடக்கி யாளாத இராஜ்யம் ஆப்பில்லாச் சகடைபோல் அழிந்து போகும்; துஷ்டர்களை அடக்கிச் சிஷ்டர்களைப் பரிபாலனம் செய்து வருவதே எங்களுடைய க்ஷேமமாகும்.

இராஜ குமாரன்—ரொம்ப சந்தோஷம். உங்களுடைய சம்பாஷணையினால் மிக்க திருப்தி அடைந்தேன். நீங்கள் அதிக திறமை வாய்ந்தவர்கள் என்று தெரிந்து கொண்டேன். நம்முடைய அரண்மனையில் உங்களுக்கு உத்தியோகம் கொடுப்பதாய் உத்தேசிக்கிறோம்.

அவர்கள்—மகாராஜாவே, தாங்கள் அநுமதியின்படி செய்வதில் ஆக்ஷேபனையில்லை. ஆயினும் நாங்கள் மரியாதையாய் ஜீவிப்பவர்கள்; அந்நியரிடம் அடிமைக் குட்படுவதில்லை.

உத்தமம் சுயார்ச்சிதம்
மத்திமம் பிதிரார்ச்சிதம்
அதமம் சேவகாவிர்த்தி

என்று சொல்லியிருப்பதால், நாங்கள் உத்தியோகத்திலிருந்து எப்படி முன்னேற்றமடைய முடியும்? ஏதோ புத்திக்கூர்மையினால் பிரயாசைப்பட்டால்

"தெய்வத்தா லாகாதெனினும் முயற்சி தன்,
மெய் வருத்தக் கூலி தரும்"

என்றபடி நம்முடைய பிரயாசைக்குத் தகுந்த பலன் கிடைக்கும்.

இராஜகுமாரன்—ஐயா, நீங்கள் சொல்வது உண்மையே; ஆனாலும் எல்லாரும் சுயமாகவே தொழில் செய்ய வேண்டுமானால் சாத்தியப்படுமா ? உத்தியோகத்திலும் இருக்கத்தானே வேண்டும்?

தருமசீலன்—வாஸ்தவம்; உலகத்தில் "அதமம் சேவகா விர்த்தி'' என்று வடநூலார் கூறியுள்ளபடி உத்தியோகம் அவ்வளவு சிலாக்யமுடையதல்ல. எத்தனை பேருக்குக் கைகட்டி வாய் புதைத்துக் காலுக்குச் செருப்பாய் நடக்கவேண்டியதாயிருக்கிறது! வீட்டில் நல்ல நாள் பெரிய நாள் உண்டா? காலந்தவறாமல் வேலைக்குப் போய்த் தீரவேண்டுமே. உத்தியோகத்தால் எப்படி சௌகரியம் அடைய முடியும்?

[இக்காலத்தில் படித்துப் பரீக்ஷை தேறி உத்தியோகத்துக்குப் பத்திரிகைகளை எதிர்பார்த்துக்கொண்டிருப்பவர்களுக்கும் 25, 30 ரூபா சம்பளத்தில் அமர்ந்து அல்லற் படுகிறவர்களுக்கும் உத்தியோகத்தின் பெருமை தெரியாமற் போகாது.]

இராஜகுமாரன்—ஐயா, நீங்கள் சொல்லுகிறபடி எல்லாரும் உத்தியோகத்துக்குப் போகாமல் சுயமாகவே தொழில் செய்ய முடியுமா ?

தருமசீலன்—எல்லாராலும் முதல்வைத்து வியாபாரஞ் செய்ய இயலாதாகையினால் உத்தியோகமாவது மரி

யாதைக்குரியதாய் இருக்கவேண்டும். அப்படியில்லாமல் அடிமையாயிருந்து ஜீவிப்பதைவிட எத்தனையோ கைத் தொழில் செய்து ஜீவிக்கலாம். சொற்ப முதல்வைத்துக் கொண்டு நாணயமாயிருந்தால் வியாபாரத்தில் கஷ்டமில் லாமல் ஜீவிக்கலாம். அடிமையில்லாமல் ஜீவிப்பதற்கு எத்தனையோ மார்க்க மிருக்கிறது. சாதாரணப் பெண் பிள்ளை ஆப்பம் தோசை சுட்டுவிற்றுத் தினம் ஒன் றிரண்டுரூபாய்க்குக் குறையாமல் சம்பாதிக்கிறாள். வெற் றிலை பாக்குக் கடை வைத்திருப்பவன் தினம் இரண்டு மூன்று ரூபாய்க்குக் குறையாமல் சம்பாதிக்கிறான். இந் தத் தொழிலுக்கு ஆடம்பரமான உடுப்புகள் தேவை யில்லை. 25 ரூபா சம்பளமுள்ள குமஸ்தாவுக்கு எவ் வளவு உடுப்பு வேண்டி யிருக்கிறது. கௌரவத்தைப் பொறுத்துச் செலவு செய்து பலர் கஷ்டமடைகிறார் கள். அதில் எத்தனை பேருக்கு இருக்கை விட்டெழுந்து கை கட்டி வாய்புதைத்து நின்று குற்றேவல்செய்ய வேண்டியதாயிருக்கிறது. ஆதலால் அடிமைத் தொழிலைப் பார்க்கிலும் மானமாய் ஜீவிப்பது கௌரவமென்று நினைக் கிறேன்.

அரசகுமாரன்—ஐயா, நீங்கள் அப்படி நினைக்கலா காது. நம்மிடம் சம்பளம் வாங்கி உத்தியோகம் செய்ய வேண்டாம். நம்முடைய இராஜ்யத்தில் நடந்துவரும் பள்ளிக்கூடம், தேவஸ்தானம், சத்திரம், வைத்திய சாலை முதலிய தர்மஸ்தாபனங்களையும் அரசாங்க நட வடிக்கையின் முக்கியமான விஷயங்களையும் நீங்களிரு வரும் கவனித்து அவைகளைக் குறைவற நடத்தி வாருங்

கள். அதற்காக கௌரவமாக இராஜாங்கத்திலிருந்து செய்யும் மரியாதைகளை அடையுங்கள்—என்று சொன்ஞன்.

தருமசீலனும் கற்பூரசுந்தரமும் அவ்வாறிருக்கச் சம்மதித்து அரசனிடம் அநுமதிபெற்று வீட்டுக்குச் சென்று, தாய்தந்தை மனைவியரிடம் அரண்மனையில் நடந்த விஷயங்களைச் சொல்லி அவர்களுடன் சந்தோஷமடைந்திருந்தார்கள். அவர்களும் அரசன் விரும்பியவாறு செய்யவேண்டு மென்றும் ஆக்ஷேபிப்பது மரியாதையல்லவென்றும் தீர்மானம் செய்தார்கள்.

பின் சிநேகிதரிருவரும் திருப்தி அடைந்து ஒரு நல்ல நாளில் அரண்மனைபோய் உத்தரவுபெற்று (1) கல்வி இலாகா, (2) தேவஸ்தானம், (3) சத்திரம், (4) தர்ம வைத்தியசாலை (5) கால் நடைகள் இன்னும் பல அரசாங்க சம்மந்தமான முக்கிய விஷயங்களை யெல்லாம் கவனித்து வந்தார்கள்.

இப்படிக் காரியங்களை யெல்லாம் கவனித்து நடத்தி வருகையில் ஒருநாள் இருவரும் துணைவர்களுடன் பள்ளிக்கூடத்துக்குப்போய் உபாத்தியார் நடத்தும் பாடக்கிரமங்களையும் பிள்ளைகளுடைய புத்தி சாதுரியங்களையும் கவனித்தனர். அப்போது ஒரு பள்ளிக்கூடத்தில் ஒரு வகுப்புப் பிள்ளைகளைப் பார்த்து "பால்யர்களே நான் சொல்வதைக் கவனியுங்கள்—வியாபாரம் நடத்திய ஒரு செட்டியாருக்கு, மூன்று பிள்ளைகளிருந்தார்கள். செட்டியாரிடம் அதிகம் ஐவேஜில்லை. அவர் எட்டுப் பொன்

கட்டிகள் மட்டும் வைத்திருந்தார். அவர் தமது மரணத்தருவாயில் பிள்ளைகளைக் கூப்பிட்டு 'எனது செல்வப்புதல்வர்களே, நீங்கள் மூன்று பேரும், சண்டையில்லாமல் இந்தப் பொன் கட்டிகளை உடைக்காமல் சமமாகப் பங்கிட்டுக்கொள்ளுங்கள்' என்று சொல்லிச் சிறிது நேரத்திற்கெல்லாம் உயிர் துறந்தார்.

பொன் கட்டியின் விவரம்—

கட்டியால் எட்டேக்கட்டி, கால், அரை, முக்கால்
மாற்று, செட்டியார், சென்றுவிட்டார்,
சிறுபிள்ளை மூன்று பேரும் கட்டியை உடையாமல்
கணக்குப் பார்த்துப் பிரித்துக் கொள்ளவேண்டும்.

எட்டுக் கட்டியை உடைக்காமல் மூன்று பேரும் எப்படிச் சமமாகப் பிரித்துக்கொள்வது? அதுவும் உடைக்காமல், உருக்காமல், பின்னப்படுத்தாமல் உருப்படியாய்ப் பிரித்துக் கொள்ளவேண்டும். சொல்லுங்கள் பார்க்கலாம்'' என்று கேட்டார்.

உடைக்காமல் எட்டுக் கட்டியை மூன்றுபேர் எப்படி பிரித்துக்கொள்வது என்று பிள்ளைகள் பலவிதமாய் யோசிக்கிறார்கள். ஒருவராலும் ஒன்றும் முடிவு சொல்ல முடியவில்லை. தனவைசியச் சிறுவன் ஒருவன் எழுந்து, "ஐயா நான் சொல்லுகிறேன். தயவுசெய்து கேட்கவேண்டும். அதாவது தாங்கள் சொல்லிய எட்டுப் பொன்கட்டிகளும் பொன்னாகவே இருந்தாலும் அதில் மாற்று வித்தியாசம் சொல்லியிருக்கிறீர்கள். அந்த மாற்றப்படி மதிப்பிட்டு மாற்றுவிட்டுப்போகாமலும் கட்டி உடை

யாமலும் சமமாகப் பிரித்துக் கொள்வதற்கு வழி சொல்லுகிறேன். எப்படியென்றால் மேற்கண்ட எட்டுக் கட்டிகளில் கால்மாற்றுக்கட்டி ஐந்து, அரைமாற்றுக் கட்டி இரண்டு, முக்கால் மாற்றுக்கட்டி ஒன்று, ஆகக் கட்டிகள் எட்டு சரியாய் விட்டன. அதில் ஒருவன் ஒருமாற்றுக்கு வேண்டிய கால்மாற்றுக்கட்டி இரண்டும் அரை மாற்றுக்கட்டி ஒன்றும் எடுத்துக்கொள்கிறான். அடுத்த இரண்டாவது குமாரனும் அதேமாதிரி கால் மாற்றுக்கட்டி இரண்டும் அரைமாற்றுக்கட்டி ஒன்றும் எடுத்துக்கொள்கிறான். மூன்றாவது குமாரனும், முக்கால்மாற்றுக்கட்டி ஒன்றும் கால்மாற்றுக்கட்டி ஒன்றும் எடுத்துக்கொள்கிறான். ஆகக் கட்டியும் எட்டு; மாற்றும் மூன்று. கட்டியை உடைக்காமல் இப்படி சமபாகமாய்ப் பிரித்துக்கொள்வார்கள். பொன் மாற்றிலும் வித்தியாசமில்லை'' என்று சொன்னான்.

தருமசீலனும் கற்பூரசுந்தரமும் வகுப்புப் பிள்ளைகளும் சந்தோஷப்பட்டு அவனைப் புகழ்ந்தார்கள். பின் அவர்கள் அடுத்த வகுப்புக்குப் போனார்கள்.

அங்கே அவர்கள் ஸமஸ்கிருதம் படிக்கும் பிள்ளைகளைப் பார்த்து "சகோதரர்களே இந்தத் தநுர்மாசத்தில் வைகுண்ட ஏகாதசியும் அமாவாசையும் ஒரே தினத்தில் வந்தால், இந்துக்களாகிய நாம் எந்த விரதத்தை அநுஷ்டிப்பது?'' என்று கேட்டார்கள். அதில் ஒருவன் மிக்க அவசரமாய் எழுந்து "இது என்ன ஐயா பிரமாதம்! தந்தையில்லாதவர் ஒருவேளை உண்டு அமாவாசை விரத

யிருப்பார்கள். ரவா தோசை இட்டலி சாம்பார் சாப்பிடப் பிரியமுள்ளவர்கள் வைகுண்ட ஏகாதசி விரதமிருப்பார்கள்'' என்றான்.

கருமசீலன்—நல்லது நீ நிரம்பக் கெட்டிக்காரன் அடுத்த பையன்—'

அவனும் அப்படியே சொன்னான். இப்படியே வரிசைக் கிரமமாய்க் கேட்டுக்கொண்டே போகும்போது சில பையன்கள் புதுமாடு மிரள மிரள விழிப்பதுபோல் விழித்தார்கள். கடைசியாய்ப் பிராமணச் சிறுவன் ஒருவன் எழுந்து "ஐயா, நீங்கள் கேட்ட கேள்வியானது மிக்க வேடிக்கையான கேள்வியாயிருக்கிறது; பதில் சொல்லத் தகுந்த கேள்வியாயில்லை. ஆயினும் சொல்லுகிறேன். அமாவாசையும் ஏகாதசியும் ஒன்றாய் வருமா? ஒருநாளும் வரா. அமவாசையும் கார்த்திகையும் ஒன்றாய் வரலாம். ஏகாதசியும் கார்த்திகையும் ஒன்றாய் வரலாம். அமாவாசையும் ஏகாதசியும் ஏன் ஒன்றாய் வராதென்றால் பதினைந்து திதிகளில் அமவாசை ஒன்று. ஏகாதசியும் அப்படியே பதினைந்து திதிகளில் ஒன்று. ஒவ்வொரு பூர்வ பக்ஷம், அமரபக்ஷம் அல்லது சுக்கில பக்ஷம் கிருஷ்ணபக்ஷம் என்பவைகளில் பக்ஷம் ஒன்றுக்குப் பிரதமை, துதியை, திருதியை என்று மூன்று முதல் பதினைந்து திதிகள் வரும். அப்படிவரும் திதிகளில் ஏகாதசி யென்பது பதினோராவது நாள் வரக்கூடிய திதி அமாவாசை என்பது, சதுர்த்தசி அதாவது பதினான்காவது திதிகழிந்து பூரண அமாவாசை யென்று பதினைந்தாவதுநாள் வரக்கூடிய திதியாகையால் பதினோ

ராவது நாள் வரும் ஏகாதசியும் பதினைந்தாவதுநாள் வரக் கூடிய அமாவாசையும் எப்படி ஒன்றாகூடி வரும்? கார்த்திகை என்பது இருபத்தேழு நக்ஷத்திரங்களில் ஒன்று. அது சில சமயங்களில் அமாவாசை ஏகாதசி முதலிய மற்ற திதிகளோடு சேர்ந்து வரலாம்" என்று சொன்னான்.

அதைக்கேட்ட இருவரும் ஆச்சரியப்பட்டு அச் சிறுவனுக்கு நற்சாட்சிப்பத்திரம் ஒன்று கொடுத்துச் சென்றார்கள். பின் அடுத்த பள்ளிக்கூடத்துக்குப் போய் அங்குள்ள பிள்ளைகளில் வயதில் பெரியவனான ஒருவனைப்பார்த்து "நம்மைச் சிருஷ்டித்தவர் யார்?" என்று கேட்டார்கள். அவன் பதில் சொல்ல அறியாமல் விழித் தான். அங்குள்ள சிறுவன் எழுந்து "நம்மைக் கடவுள் சிருஷ்டித்தார். நாம் அவரால் உண்டாக்கப் பட்டவர் கள்" என்று சொன்னான். கேட்டு அவர்கள் சந்தோஷ மடைந்தனர்.

உபாத்தியாயர் இந்தக் கேள்விக்கு விடை சொல்லத் தெரியாதவனைப் பார்த்து, "நீ முட்டாள். உனக்கு இத் தனைவயதாயும் இது சொல்லத் தெரியவில்லையே! ஒரு சிறுவன் சொல்லிவிட்டானே! உனக்கு வெட்கமில்லையா?" என்றார்.

அவன் "என்ன ஐயா நீங்களும் தெரியாமல் சொல் லுகிறீர்களே! அவன் சிறியவன் என்றும் நான் பெரிய வன் என்றும் நீங்களே ஒப்புக்கொள்ளுகிறீர்கள். அப் படி பார்க்கும்போது பகவான் சிறுவனாகிய அவனைச் சமீ

பத்தில் சிருஷ்டித்திருக்கிறார். அவனுக்கு ஞாபகமிருக்கும். நான் பிறந்து எவ்வளவு நாளாய்விட்டது. என்னைச் சிருஷ்டித்தது எத்தனையோ வருஷங்களுக்கு முன். வெகு நாட்களுக்குமுன் நடந்த சமாசாரத்தை எப்படி ஞாபகத்தில் வைத்திருந்து சொல்ல முடியும்?'' என்றான்.

அவனுடைய முட்டாள் தனத்தைக்கண்டு எல்லோரும் வயிறு புண்ணாகும்படி குலுங்க நகைத்தார்கள். பின்பு அவர்கள், அதைவிட்டு அடுத்த வகுப்புக்குப்போய், அங்கிருந்த ஒரு பெரிய பையனைப் பார்த்து, "உன் தங்கைபிள்ளை உனக்கு மூத்தவனாயிருந்தால் அவனை நீ எப்படி மரியாதையாய் அழைப்பாய்?'' என்று கேட்டார்கள். பையன், "ஐயா, பெரியவனாயிருந்தால் மருமகன் என்று மரியாதையாய் அழைப்பேன்'' என்றான். அதைக் கேட்டு அவர்கள் நகைத்து, அடுத்த சிறுவனைக் கேட்டார்கள். அச்சிறுவன் எழுந்து "தங்கை எனக்குப் பின் பிறந்த சிறியவள். அவளுக்குப் பிறக்கும் பிள்ளை அவளிலும் சிறியவனாகத் தானே யிருப்பான்? அவன் எப்படி மூத்தவனாயிருப்பான்?'' என்றான்.

அதைக்கேட்டு அவர்கள் அதிகத் திருப்தியடைந்து உபாத்தியாயர்களைப் பார்த்து "பிள்ளைகளுக்கு ஏட்டுப் படிப்பை மட்டும் சொல்லிக் கொடுப்பதில் பிரயோசனமில்லை. அவர்கள் கிளிப்பிள்ளை மாதிரி உபாத்தியாயர் சொல்லிக் கொடுத்தவைகளையே நெட்டுருப்பண்ணிப் பரீக்ஷை வரையிலும் மனப்பாடமாக வைத்துக்கொண்டு

10

எழுதிவிடுகிறார்கள். இப்படி யுக்தியான கணக்குகள் கேள்விகளையும் சொல்லிக்கொடுத்துப் பிள்ளைகளின் மனதில் விஷயம் நன்றாய்ப் பதியும்படி போதிக்கவேண்டும். நான் மறுமுறை வரும்பொழுது கூடுமானவரையில் பிள்ளைகள் எல்லாரும் மிக்க அறிவாளிகளாய் இருக்கவேண்டும் " என்று சொல்லிவிட்டுச் சென்றார்கள்.

உபாத்தியாயர்கள், " இவர்கள் புஸ்தகங்களில் இல்லாத யுக்தியான கேள்விகளையும் கேட்கிறார்கள். இவைகளை நாம் எப்படிச் சொல்லிக் கொடுப்பது. நாம் ஒன்றைச் சொல்லிக் கொடுத்துப் பிள்ளைகள் கெட்டுருப் போட்டுக் கொண்டிருந்தால் அவர் இன்னொரு கேள்வியைக் கேட்பார். அதை நாம் எப்படித் தெரிந்து சொல்லிக் கொடுக்க முடியும். ஆதலால் பிள்ளைகள் புத்திசாலிகளாகும்படி அதற்கு வேண்டிய போதனை முறைகளைக் குறையாமற் செய்து காட்டவேண்டும். அவர்களுக்குப் யுக்தியாய் அறிந்து கொள்ளும் சக்தியுண்டாக்கவேண்டும் " என்று பேசிக் கொண்டார்கள்.

தத்காலத்தில், பரீக்ஷை தேறியதும் தேருததும் பத்திரிகையில் எப்பொழுது வருமென்று எதிர்பார்த்திருந்து, பத்திரிகையில் தங்கள் பெயர் வரக்கண்டபின் படிப்பைப் பற்றிக் கவனிப்பதேயில்லை. பரீக்ஷை தேருமல் பத்திரிகையில் பெயர் வராமற்போனால் மனக்கவலைகொண்டு படிப்பைக் கவனிப்பதில்லை. படிப்பெல்லாம் எட்டுப் படிப்பு, கல்யாணப் படிப்பு, உத்தியோகப் படிப்பாய் விட்டனவே ஒழிய முற்காலத்துப் படிப்பைப்

போல் கவனித்துப் படிப்பவர்கள் குறைந்துவிட்டனர். இது கால வித்யாசம்.

நிற்க, இப்படி சிலநாட்கள் சென்ற பின் அவர்கள் தேவாலய விஷயங்களைக் கவனிப்பதற்காகத் தங்கள் நண்பர்களுடன் கோயிலுக்குப் போய் காலக்கிரமங்கள் சரியாய் நடக்கின்றனவா என்று கவனித்தார்கள். அரண்மனைத் தேவஸ்தானபாகையினல் யாதொரு குறைவுமின்றித் தினம் கல அரிசி வேகவைத்து, பலவிதச் சித்திரான்னங்கள்செய்து வடை, பாயஸம், அப்பம், அதிரசம், தேன்குழல், புட்டு, தோசை, மோதகம் முதலிய பலகார வகைகளும் இஷ்டமாகச்செய்து ஸ்வாமிக்கு நிவேதனம் நடந்து வருகிறது. குருக்கள் பரிசாரகர், மணியம், சம்பரதி, மேளம், தாளம், தாசி, அரைக்காவல், மெய்க்காவல் முதலியவர்கள் அந்த நிவேதனத்தைப் பங்கு போட்டுக்கொண்டு மீதமிருப்பதில் தேசாந்திரி யாராவது வந்து விடாப்பிடியாய்த் தொந்தரவு செய்தால் அவனுக்குக் கொடுப்பது வழக்கமாயிருக்கிறது. ஆனல் கணக்கைச் சரியாய் எழுதுவார்கள்; அபிஷேக காரியங்களையெல்லாம் சரியாய்க் கவனிப்பதில்லை. இதைத் தருமசிலனும் கற்பூரசுந்தரமும் அறிந்து கொண்டார்களாகையினல் "ஐயோ பாமர ஜனங்கள் சோற்றை எதிர்பார்த்துக் கோயில் காரியங்களை நடத்தி வருகிறார்களே தவிர உண்மையோடு வழிபடவேண்டுமென்ற எண்ணமில்லாமலிருக்கிறார்களே! பால், பழம், எண்ணெய், நெய், இளநீர், பனிநீர், சந்தனம் முதலியவைகளால் அபிஷேகஞ் செய்து பகவானைக் குளிரப்பண்ணினல் நம்மையும்

அவர் மனங்குளிரச் செய்வார் என்ற தோற்றம் அவர்களுக்கு உண்டாகவில்லையே! சில பாமரர்கள் "விக்ரகங்களுக்கு இவைகளெல்லாம் எதற்காகச் செய்யவேண்டும்! அன்னம் பக்ஷியம் நிவேதனம் செய்தாலும் எல்லோரும் திருப்தியாகவாவது சாப்பிடலாம். அபிஷேகம் செய்வதினால் என்ன நன்மையிருக்கிறது. குருக்கள் அபிஷேகம் செய்தார் செய்யவில்லையென்பது நமக்கெப்படி தெரியும்? சுவாமி தனக்கு அபிஷேகம் சரியாய்ச் செய்யவில்லை யென்று குறை கூறப் போகிறாரா?" என்று எத்தனையோ பேர் கேட்கிறார்கள். கிராம வரும்படியோ, மோகினியோ அதிகமாய் வரக்கூடிய தேவஸ்தானங்கள் கமிட்டியார் அதிகாரத்திலோ மடாலயங்களின் அதிகாரத்திலோ நடந்து வருகின்றன. அந்த அதிகாரிகள் தேர், திருவிழா முதலிய உற்சவாதிகளில் தீவட்டி, மத்தாப்பூ, விளக்கு, மேளம், சதிர் முதலியவைகளில் ஆடம்பரமாய்ச் செலவு செய்கிறார்கள்; உண்மையாய் நடக்க வேண்டிய அபிஷேக ஆராதனை, தூபதீபம் முதலியவைகளைக் கவனியாமல் பணவிரயம் செய்து, பணத்தைச் சொந்த விநியோகப்படுத்தி வருகிறார்கள். நிவேதனங்களையும் பகவான் சாப்பிடுவதாயிருந்தால் அதை ஒருகாலும் செய்யமாட்டார்கள் என்றே எண்ண வேண்டியதாயிருக்கிறது. தரும காரியங்களுக்குப் பணத்தைக் கொடுத்துச் செலவு செய்யும் புண்ணியவான், ஒருவாறிருந்தாலும் சம்பளம் பெற்று நடத்துபவர்கள் உண்மையோடு அபிமானமாய் அந்தத் தருமங்களைப் பரிபாலிப்பது அவசியமாகும்.

முன்னொரு காலத்தில் பொல்லாப் பிள்ளையாருக்குக் குருக்கள் தினந்தோறும் அன்னம் நிவேதனம் செய்து பூஜைசெய்து வந்தார். இப்படி நீண்ட நாளாய் பூஜை நடந்து வருகிறது. ஒரு நாள் குருக்கள் வெளியூருக்குப் போகவேண்டிய அலுவல் ஏற்பட்டது. அதனால் அவர் சிறுவனை தம் புதல்வனைப் பூஜை செய்யும்படி கட்டளையிட்டுப் போயிருந்தார். சிறுவன் அன்னத்தைக் கொண்டுபோய் விநாயகர் முன்வைத்து நிவேதனஞ் செய்து கற்பூர ஹாரத்திகாட்டி வணங்கி நின்று, "சுவாமி, அன்னத்தைத் திருவமுது செய்தருளவேண்டும்" என்று வணங்கி நின்றார். சுவாமி சிலையாகவே அசைவற்றிருந்தார். தினந்தோறும் தந்தை செய்யும் நிவேதனத்தைப் பிள்ளையார் புசிப்பதாகவே அவர் எண்ணியிருந்தார். ஆகையினால் அவர் தாம் வேண்டிக் கொண்டும் பிள்ளையார் புசியாதிருக்கவே, "தகப்பனார் நிவேதனம் செய்யும்போது எப்போதும் வழக்கமாய் உண்டு வந்த இவர் இன்று யாது காரணத்தினால் உண்ணவில்லை. நாம் ஏதாவது அபசாரம் செய்துவிட்டோமோ?" என்று பயந்தார்; "பகவானே என் தகப்பனார் பூஜைசெய்து வந்த ஒவ்வொரு நாளும் அன்னத்தை உண்டீர். இன்று யாது காரணத்தால் அமுது செய்யவில்லை? அடியேன் மீது ஏதேனும் தவறுதல் உண்டாயின் தெரிவித்து மன்னிக்கவேண்டும். சிறியவன் செய்த பிழையை மன்னித்து ஆகாரத்தை உட்கொள்ளவேண்டும்" என்று பிரார்த்தித்து வணங்கி நின்றார். அப்பொழுதும் அவர் விக்ரகமாகவே யிருந்தார். சிறுவனுக்கு மனம் தாளவில்லை. ஒவ்வொரு நாளும் அமுது செய்த

பகவான் இன்று ஏதோ நம்முடைய தவறுதலினாலல்லவா அமுது செய்யவில்லை. தகப்பனார் வந்திருந்தால் பகவான் அமுது செய்திருப்பார். அவர் வராததினால பகவான் பட்டினியாயிருக்கிறார். ஆதலால் அபசாரஞ்செய்த நாம் உயிரோடிருப்பதைவிடப் பிராணனை விடுவதே மேலென்று அவர் தம்முடைய தலையைக் கல்லில் மோதிக் கொள்ளப் போனார். விநாயகர் அவருடைய உண்மைப் பக்திக்கு மனமிரங்கி, ' அப்பா குழந்தாய் அவசரப்படாதே! உன்னுடைய உண்மைப் பக்திக்கு மெச்சினேன். நான் ஆகாரத்தை எடுத்துக் கொள்ளுகிறேன்'' என்று தம்முடைய துதிக்கையை நீட்டி அன்னமுழுமையும் எடுத்துக் கொண்டார். நம்பியும் சந்தோஷமடைந்தார்; பின் பகவானுடைய கடாக்ஷ வீக்ஷண்ணியத்தால் அநேக பாசுரங்களியற்றியருளினார்; நம்பியாண்டார் நம்பியெனச் சிறப்புப் பெயர்பெற்று முடிவில் சாயுஜ்யபதவி அடைந்தார். இதுதான் உண்மைப் பக்தி. யார், யார், எப்படி, எப்படி உண்மையோடு பக்தி விசுவாசத்துடன் பகவானைக் கொண்டாடி விரும்புகிறார்களோ, அவ்வாறெல்லாம் "வேண்டுவோர் வேண்டுவதேயீவான் கண்டாய்" என்றபடி பகவான் கிருபைசெய்ய அடியார்க் கெளியவராயிருக்கிறார்.

இந்தக் காலத்தில் அரைகுறையாய் ஆங்கிலம் படித்த பிள்ளைகளும் செவ்வையாய் ஆங்கிலம் கற்ற மேதாவிகளும் நாஸ்திகர்களாய்ச் சாஸ்திரமேது கோயிலேது தெய்வமேது என்று வீண்விவாதம் புரிந்து பாபத்துக்காளாகின்றனர். பகவான் அடியவர்கள் எண்ணத்

த்தைப் பூர்த்திசெய்து மோக்ஷமளித்தது இந்த ஒரு சமய மட்டுமல்ல. அடியார்கள் மனோபீஷ்டத்தை நிறைவேற்ற அவர் அநேகம் திருவிளையாடல்கள் செய்திருக்கிறார். அவைகளில் சிலவற்றைச் சொல்லுகிறேன்—

(1) வேடர் குலத்தில் பிறந்து பறவை மிருகங்களைக் கொன்று கொலைகளை தினமும் செய்துவந்த கண்ணப்ப நாயனார் விரும்பியவாறே, எச்சில் உமிழ்நீர் மாமிசங்களை ஏற்று அவருக்கு மோக்ஷமளித் திருக்கிறார்.

(2) அரிவாட்ட நாயனார் தவறிக் கொட்டிய செந்நெல், மாவடு முதலியவற்றை அந்த இடத்திலேயே வந்து உண்டு அவருக்கு முக்தி கொடுத்திருக்கிறார்.

(3) சுந்தரமூர்த்தி சுவாமிகள் விருப்பப்படி தூது சென்று பிணக்குத் தீர்த்து அவருக்கு இன்னும் வேண்டிய காரியங்கள்செய்து சாயுஜ்யபதவி அடையச் செய்தார்.

(4) மாணிக்கவாசக சுவாமிகளுக்காகக் குதிரை விற்க வந்தார்.

(5) புட்டுவாணிச்சிக்குக் கூலி ஆளாக நின்று கூடைமண் வெட்டிக்கொட்டி வைகை ஆற்றுப் பிரவாகத்தை அடைத்தார்.

(6) மதுரையில் ஒரு செட்டி மகனுக்கு மாமனாக வந்து சபையேறி வழக்குரைத்து, தாயத்தார். அபகரித்த சொத்துக்களை மீட்டுக்கொடுத்தார்.

(7) முதலையிடம் அகப்பட்டு நெடுங்காலம் துன்புற்ற கஜேந்திரனைக் காப்பாற்றி அதற்கு வைகுந்தபதவி அளித்தார்.

(8) சண்டிகேசுவரர் அன்போடு மணல் லிங்கத்தில் சொரிந்த பாலை யேற்றுக்கொண்டும் அவருக்கும் அவரைப் பூஜையினின்று தடுத்த அவருடைய தந்தைக்கும் மோக்ஷம் கொடுத்தார்.

(9) வல்லாள மகாராஜனுக்குப் பிள்ளையாய்ப் பிறந்து வருஷம் தவறாமல் இன்னும் திருவண்ணாமலையில் திதிசெய்து வருகிறார்.

இப்படி இன்னும் அநந்தமான திருவிளையாடல் செய்திருக்கிறார். கடவுளை நம்பினவர்க்குக் கடவுள் இருக்கிறார். இல்லையென்று வீண்விதம் பேசும் கயவர்களுக்கு இல்லாமலிருக்கிறார். பகவான் பக்திக்கே கட்டுப்பட்டுத் திருவருள் புரிவார். பக்தி செய்யாத வெறும் சோம்பேறிகள் பகவானைக் காணமுடியாது. பகவான் பக்தர்களிடம் ஜாதி வித்யாசம் பார்ப்பதில்லை. புலையனை நந்தன் திருப்பாணாழ்வார் முதலியவர்களுக்கு அவர்கள் செய்த பரமபக்திக்கிரங்கி முத்தியளித்திருக்கிறார். இப்படிப்பட்ட சம்பவம் பலவுண்டு. இவைகளைப் படியாமல் ஆங்கில பாஷையை மட்டும் படித்துவிட்டு நம்முடைய மதத்திற்கு விரோதமாய்ச் சிறிதும் சிந்தியாமற் பேசும் இவர்களை யெல்லாம் நாம் எதிற் சேர்த்துப் பேசுவதென்றே தெரியவில்லை. இவர்களுடன் பேசாமலிருப்பதே நல்லது.

மேற்கண்ட சரித்திரங்களின் முழு விவரங்களையும் அறிய விரும்பும் பிள்ளைகள் நமது புராணங்களில் கண்டு தெளியலாம்.

நிற்க, இவ்வளவு பெருமை வாய்ந்த பகவானுக்குப் பணிந்து நடவாமல், அவரை அலட்சியஞ் செய்து மனம் போனபடி நடக்கும் இவர்களை ஒடுக்கி அடக்கிக்கொண்டு வரவேண்டு மென்று எண்ணி நண்பர்களிருவரும் யோசித்துக் கோயில் வேலைக்காரர்களுக்கு அன்பு உண்டாகும்படி இன்பமாய் இதஞ்சொல்லித் திருத்திக் கொஞ்சம் கொஞ்சமாய் ஒழுங்குப் படுத்தினார்கள். பின் அவர்கள் காலம் தவறாமலும் முறை தவறாமலும் பூஜையைக் குறைவற நடத்தி வந்தார்கள்.

இந்துக்களாகிய நாம், நம்முடைய விக்ரகங்களுக்குப் பால், பழம், பன்னீர் முதலியவற்றால் அபிஷேகஞ்செய்து பட்டாடை சாற்றிப் பல பணிகள் பூட்டிப் பரிமள மிகுந்த வாசனைத் திரவியங்கள் மல்லிகை, முல்லை, மலர்கள் சாற்றித் திவ்யமான சித்திரான்னங்கள் ருசிகரமான பாயஸம் பக்ஷணங்கள் நிவேதனஞ்செய்து ஆராதித்து வழிபடுகிறவர்க ளாகையினால், அவ்வழக்கப்படி பகவான் கைங்கரியத்தில் எவ்விதக் குறைவும் ஏற்படாதபடி கவனித்து வந்தார்கள்.

பின் நமது தருமசீலனும் கற்பூரசுந்தரமும் சத்திரம் சாவடிகளைப் பற்றிக் கவனிக்கலானார்கள். ஏழை கூன் குருடு முடவர் நோயாளிகளுக்கு என்று சத்திரம் ஏற்படுத்தியிருந்தது. இதில் பிராமணர்களுக்கு

மட்டும் சாப்பாடு போடுகிறதென்ற வழக்கம் அனுஷ்டானத்துக்கு வந்துவிட்டபடியால், சில சோம்பேறிகள் ஒருவித வேலையுமின்றிச் சத்திரங்கள் தோறும் சென்று நெய், ரசம், சாம்பாருடன் பக்குவமாய்ச் சாப்பிட்டுக் கொஞ்சம் குறைந்தால் வைதுகொண்டும் வேறூராய்ச் சென்று உண்டு ஒழிந்த திண்ணை பார்த்துறங்கியெழுந்து சிட்டாடி சண்டையிட்டு வேளை தவறாமல் உண்டு வீண் பொழுது போக்கி வருகிறார்கள். இங்காவது சில சத்திரங்கள் மட்டும் இருக்கின்றன. செட்டி நாட்டில் தனவைசியர்கள் நான்கு கல் அல்லது ஆறு கல்லுக்கு ஒரு சத்திரம் கட்டி வைத்திருக்கிறார்கள். அதில் எந்தப் பிராமணர்கள் போனாலும் வேளை தவறாமல் அன்னம் போடுகிறார்கள். சோம்பேறிகளா யுள்ளவர்கள் சோறு கண்டவிடம் சுவர்க்கம் என்று இருந்துவிடுவதால் மூன்று வேளைவரையில் சாப்பாடு கிடைக்கும்படி திட்டம் செய்திருக்கிறார்கள். காசி, கயா, பிரயாகை, அயோத்தி முதலிய இடங்களிலும் இன்னும் மற்ற பல க்ஷேத்திரங்களிலும் தனவைசியர்கள் ஏற்படுத்தி யிருக்கும் சத்திரங்களில் பிராமணர்களுக்கு ஆயுள் வரையில் சாப்பாடு போட்டுத் தக்ஷிணையும் கொடுத்துவருகிறார்கள். க்ஷேத்திரங்களிலுள்ளவர்கள் அதிகாலையில் எழுந்து கங்காஸ்நானஞ் செய்து நித்திய கர்மானுஷ்டங்களைக் குறைவற முடித்துப் பகவத் தரிசனம் செய்து, சன்மார்க்கத்தில் நடக்கும் பொருட்டுச் சத்திரங்களில் வேளை தவறாமல் அன்னமிட்டு வரும்படி ஏற்படுத்தியிருக்கிறார்கள். அதில் பெரும்பாலோர் வேளை தவறாமல் உண்டு எவ்விதக் கவலையுமின்றித் திண்ணை தாங்கிச் சோம்பேறி

களாகிறார்களே தவிர தங்களுடைய நித்திய கர்மானுஷ்டங்களைக்கூடச் சரியாய்ச் செய்வதில்லை. சாப்பாடு இலவசமாய்க் கிடைப்பதால், எவ்வித வேலையும் செய்யாமல் துஷ்ட வழிகளில் பிரவேசிக்கிறார்கள். ஆதலால் பிராமணர்கள ஒரு ஜாதியாருக்கு மட்டும் சத்திரத்தில் சாப்பாடு போடுகிறதென்ற வழக்கத்தை மாற்றி எந்தச் சாதியாயிருந்தாலும், சாதி வித்தியாசமில்லாமல் சக்தியற்றவர்களுக்கும் யாத்திரை வாசிகளுக்கும் சாப்பாடு போடவேண்டுமென்று திட்டம் செய்து அவ்வாறே நடத்தி வந்தார்கள்.

(4) தர்மவைத்திய சாலைகளை அவர்கள் கவனிக்கலாயினர். நம்முடைய நாட்டில் உற்பத்தியாகும் அருமையான சஞ்சீவிகள் பச்சிலை வேர் கொடி, பட்டை, சாறுவகைகளையும் கடைச்சரக்கு முதலானவைகளையும் உபயோகப்படுத்தாமல், அந்நிய நாட்டார் இங்கிருந்து கொண்டுபோய்த் திராவகம் மாத்திரைகளாக்கி அழகான பாட்டல்களிலும் டப்பிகளிலும் பாக்செய்து மறுபடியும் நம்முடைய நாட்டுக்கே அனுப்பும் மருந்துகளை உபயோகிக்கிறார்கள். இதனால் நமது பணத்தை அன்னிய நாட்டார் கொண்டு போகிறார்கள். இந்த வழக்கத்தை நீக்க எண்ணிய தருமசீலனும் கற்பூரசுந்தரமும், இங்குள்ள வைத்தியசாலைகளுக்கு இனி அயல்நாட்டு மருந்துகளை வரவழைப்பது கூடாதென்றும் நம்முடைய நாட்டில் உற்பத்தியாகும் பச்சிலைகளைக் கொண்டே தன்வந்திரி, தேரையர், கொங்கண சித்தர் கும்பமுனி முதலியவர்களின் வாகட சாஸ்திரப்படி கஷாயம்,

சூரணம், லேகியம், பஸ்பம், செந்தூரம், மெழுகு, மாத்திரை, தைலம் இன்னுமற்றவைகளையும் முறையாய்ச் செய்யத் தெரிந்த பண்டிதர்களை நியமித்து, சாஸ்திர முறைப்படி செய்து உபயோகிக்க வேண்டுமென்றும் ஏற்பாடு செய்தார்கள். அதற்காக வாகட வைத்தியசாலை ஏற்படுத்திப் பழமையான சாஸ்திரங்களைப் படித்து அநுபவமுள்ள பெரியவர்களைப் பண்டிதர்களாக நியமித்து மேற்படி வாகட சாஸ்திரங்களைப் பள்ளிக்கூடப் பாடமாக வைத்து அதன் முறைகளைக் கற்றுக்கொடுக்கும்படி திட்டம் செய்தார்கள். வருஷமொருமுறை பரீக்ஷை வைத்து அதில் தேறியவர்களுக்கு நற்சாட்சிப் பத்திரம் கொடுத்து வர ஏற்பாடு செய்தார்கள். ஆயுர்வேத வைத்தியசாலைகளும் யூனனி வைத்திய சாலைகளும் ஏற்படுத்தி அங்கே படிப்புக்குத் தகுந்தபடி பலருக்கும் உத்தியோகம் கொடுத்தார்கள்.

(5) உலகத்தில் எங்கு பார்த்தாலும் ஸர்க்கார் அநுமதி பெற்றுக் கள்ளுக்கடை சாராயக்கடைகள் வைத்து வியாபாரம் செய்வதால் கூலிக்கு வேலை செய்யும் எளிய மக்கள் அவைகளைக் குடித்துத் தெருவில் கிடந்து புரளுகிறார்கள்; குடி வெறியினால் சண்டையிட்டுக் கலகம் செய்கிறார்கள். அவர்களை உடனே போலிஸ்காரர் பிடித்துக்கொண்டுபோய்த் தங்களுடைய அதிகாரத்தைச்செலுத்தி மேலதிகாரிகளிடம் ஒப்புவித்துத் தண்டனைக்கு ஆளாக்குகிறார்கள். அந்த ஏழை மனிதமக்கள் கதி என்ன ஆகிறது? ஐயோ இந்தப் போதை வஸ்துக்களை விற்க அநுமதி கொடுக்காவிட்டால் எளிய ஜனங்

கள் எவ்வாறு குடியில் மூழ்க முடியும்? அவர்கள் குடித்து வறுமையடைவதற்கு நாமே காரணமாயிருப்பதால். இனி அவ்வாறு போதை வஸ்துக்களை வியாபாரம் செய்ய அநுமதி கொடுக்கலாகாதென்று தீர்மானம் செய்தார்கள். கற்பக விருக்ஷமாகிய தென்னையில் கொடிய போதையைக் கொடுக்கும் கள்ளை உற்பத்தி செய்யலாமா? ஐயோ கள் இறக்குகிற விதத்தைப் பார்த்தால் எவர் மனந்தான் தாளும்? பாளைகளைக் கயிறு கொண்டு இறுக்கிக்கட்டித் தலையை வெட்டிவிட்டுக் கொட்டாப்புளிகொண்டு அதன் உச்சியில் மாறாமல் அடித்து ஒரு சட்டியைக் கட்டித் தொங்கவிட்டுப் போய்விடுகிறார்கள். அதிலிருந்து கண்ணீர் விடுவதுபோல் சொட்டுச் சொட்டாய்த் தென்னம்பால் வடிந்து சட்டியில் விழுகிறது. அதில் பல்லி பூச்சி முதலிய ஜந்துக்களும் விழுகின்றன. கள் இறக்குவோர் காலையில் மறுபடி வந்து அவைகளைப் பெரிய சட்டியில் கொட்டிக்கொண்டு போகிறார்கள்.

இப்படி ஹிம்சை செய்து உற்பத்தி பண்ணும் மதுவைக் குடிக்கலாமா? பாவம்! கொடிது! கொடிது! இனித் தென்னையிலிருந்து அம்மாதிரி கள் இறக்குவதற்கு அநுமதி கொடுப்பதில்லை என்றும் மரத்திலிருந்து கள் இறக்குவதினால் தேங்காய் காய்ப்பது குறைந்து மரம் சீக்கிரத்தில் பட்டுப்போகிறபடியால் கள்ளுக்கடை வியாபாரஞ்செய்யவும் அநுமதி கொடுப்பதில்லை என்றும் தீர்மானம் செய்தார்கள்.

இப்படி இன்னும் அநேக காரியங்களைக் கவனித்துத் தேசத்துக்கும் குடிகளுக்கும் நன்மை யுண்டாகும்

படி அநேக சீர்திருத்தங்களைச் செய்தார்கள். ரொம்ப கௌரவமாய், கைக்கூலி, விபசாரம், குடி, சூது, ஜீவ ஹிம்சை முதலிய பாதகங்கள் நடவாமல் கவனித்து வந்தார்கள். இவைகளையெல்லாம் அறிந்த இராஜகுமாரன் தருமசீலனுக்கும் கற்பூரசுந்தரத்துக்கும் அநேக கிராமங்கள், வீடுகள், பங்களாக்கள் கொடுத்து அவர்களைப் பாதுகாத்து வந்தான். அவர்களும் அரசாங்கக் காரியங்களில் குறைவு ஏற்படாமல் கவனித்துத் தங்கள் பத்தினி மக்களோடு புத்திர பௌத்திர பாரம்பரையாய்ச் சுகமாக வாழ்ந்து வந்தார்கள்

சுபம் சுபம் சுபம்



உ

## ஆத்திசூடியின் அரிய உபதேசம்

இப்புத்தகம் ஆண் பெண் இருபாலரும் ஆழ்ந்த கருத்துடன் படித்தற்குரிய சிறந்த நூல். இதில் ஆத்திசூடியிலுள்ள நீதிவாக்கியங்கள் ஒவ்வொன்றினுடையவும் தெளிவான பொருளும் கருத்தும் விளக்கமும் விளங்கத் தக்கபடி, உபமானக் கதைகளும் மேற்கோள்களும் பழமொழிகளும் கற்பனை அலங்காரத்துடன் சொற்பொருட் சுவை மலிந்த இனிய நடையில் எழுதப்பட்டிருக்கின்றன. சுமார் ஐந்நூறு பக்கங்கள் வரையிலுள்ளன. உபாத்தியாயர்கள் ஒவ்வொருவரும் வாங்கி வாசித்தால் பிள்ளைகளுக்குப் பல நீதிகளை எளிதில் போதிப்பார்கள். இது பள்ளிக்கூட லைப்ரெரியிலும் வாங்கி வைக்கத்தக்க சிறந்த நூல். 'முதல் பதிப்பு முழுவதும் செலவாய் வரகவி, திரு. அ. சுப்ரமண்யபாரதியார் அவர்களால் திருத்தப்பட்டு இரண்டாவது பதிப்பு வெளிவந்திருக்கிறது. இது சாலப்பெருமை வாய்ந்தது.

விலை ரூ. 2-0-0.

விலாசம்:—

மு. சொ. சுந்தரேசன் செட்டியார்,

அம்மாபேட்டை, தஞ்சாவூர்.

# சவடால் சம்பந்தம்

அல்லது

## ஸரஸகுணை ஜயரத்நம்

நாவல் என்றால் எல்லாம் நாவலாய் விடுமா ?—இதை ஒரு முறை வாங்கி வாசித்துப் பாருங்கள். உண்மை புலப்படும். விடா நகைப்பைத் தரும். ஒவ்வோரிடம் படிப்பவர் மனத்தை உருக்கும். சென்னை நகர வாழ்வின் சுகபோகம், காப்பி ஹோட்டலின் தடபுடல், நாடகத்தின் வைபவம், தாஸியின் தளுக்கு, தாஸிலோலரின் சம்பாஷணை, தாஸி வீட்டு மாமாவின் மகிமை, நாடோடி நண்பர்களின் நடவடிக்கை, கேவலம் வெற்றிலை பாக்கு பிடிக்கடை வைத்துப் பிரபுவான ஐயங்காருடைய வியாபார சாமர்த்தியம், அவனுடைய மனைவியின் அந்யோன்ய வாழ்க்கையின் அழகு, அவர்கள் பொருள் சேர்த்த சாமர்த்தியம், தான்தோன்றித் தறுதலையாய்த் திரிந்த சவடால் சம்பந்தத்தின் உல்லாச வாழ்க்கை, மைனர்கள் குடியைக்கெடுக்கும் தகல்பாஜிகளுடைய அட்டகாசம், பெண்களை வசியப்படுத்தித் திரிபவர்களின் யுக்தி, பெண்பள்ளிக்கூடத் தலைவரின் நடவடிக்கை, அவரால் கற்பழிக்கப்பட்ட மங்கை ஸரஸகுணை ஜயரத்நம் பின் மணந்து தன்னுடைய சொந்த நாயகனை நல்வழிக்குக் கொண்டுவரும் நேர்மை, விநோத விகட சம்பாஷணை, அறிவை வளர்க்கத்தக்க நீதிமொழிகள் முதலிய பல விஷயங்கள் நிறைந்த நாவல் இது. நிர்வாண உடைதரித்த மங்கையின் உருவப்படம், ஸரஸ ஸல்லாப சம்பாஷணையை விளக்கும் 3 ஆப்டோன் படங்களுடன் கூடியது.

விலை ரூ. 1 0 0